உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# தாயுமானசுவாமிகள்பாடல்.

இஃது

சில வித்வான் களைக்கொண்டு எழுதிவித்த உரையுடன்.

இதன் விலை  ரூபா. 3-4-0.



சென்னை-இட்டா

பார்த்தசாரதிநாயுடு

அவர்களாற்றமது.

ஸ்ரீபத்மநாபவிலாச அச்சுக்கூடத்திற் பதிப்பிக்கப்பட்டது.

1910.



M.D. PRESS, PERIAMET.

உ

கடவுள்துணை.

# தாயுமானசுவாமிகள்

திருவாய்மலர்ந்தருளிய

# திருப்பாடற்றிரட்டு.

## மூலமும் நூதன உரையும்.

### திருவருள்விலாசப்பரசிவவணக்கம்.



1. அங்கிங் கெனாதபடி யெங்கும்ப்ர காசமா
 யானந்த பூர்த்தியாகி
அருளொடு நிறைந்ததெது தன்னருள் வெளிக்குளே
 யகிலாண்ட கோடியெல்லாம்
தங்கும் படிக்கிச்சை வைத்துயிர்க் குயிராய்த்
 தழைத்ததெது மனவாக்கினில்
தட்டாம னின்றதெது சமயகோ டிகளெலாந்
 தந்தெய்வ மெந்தெய்வமென்
றெங்குந் தொடர்ந்தெதிர் வழக்கிடவு நின்றதெது
 வெங்கணும் பெருவழக்காய்
யாதினும் வல்லவொரு சித்தாகி யின்பமா
 யென்றைக்கு முள்ளதெதுமேல்
கங்குல்பக லறநின்ற வெல்லையுள தெதுவெது
 கருத்திற் கிசைந்ததுவே
கண்டன வெலாமோன வுருவெளிய தாகவுங்
 கருதியஞ் சலிசெய்குவாம்.

**(பதவுரை.)** அங்கு இங்கு எனாதபடி - (அண்டாண்ட பிரமாண்டங்களாகிய) தூரத்திலுள்ளது (பூமி பாதலங்களென்னும்) சமீபத்திலுள்ளது என்று கண்டித் துரைக்கப்படாமல், எங்கும் பிரகாசமாய் – (மேல் - கீழ் - உள்-புறம்-நடு-பக்கமாகிய) எல்லாவிடத்திலும் பரவி விளங்கும் பேரொளியாகி, ஆனந்த

பூர்த்தியாகி - (அவ்விதமே) அகண்டபூரணனந்தமாகி, அருளொடு நிறைந்த தெது-(தனது திருமேனியாகிய) பேரருளுடன் வியாபித்திருப்பது எப்பொருள், தன் அருள் வெளிக்குளே - தனது கருணைவடிவாகிய ஆகாயத்திலே, அகில அண்டகோடி எல்லாம் தங்கும்படிக்கு - (அனந்தகோடி) அண்ட புவனங்களனைத்தும் நிலைத்திருக்கும்படி, இச்சைவைத்து உயிர்க்கு உயிராய்த் தழைத்தது எது (அருளைக்கருதி ஆசைவைத்து உயிர்கட்குள் உயிராகி விரிந்துள்ளது) எப்பொருள், மனவாக்கினில் தட்டாமல் நின்றது எது-மனதாலும் வாக்காலும் (இத்தன்மைத்தென நினைத்தற்கும் இன்னதென உணர்த்துதற்கும் முடியாவண்ணம்) அதீதமாய் நின்றது எப்பொருள், சமயகோடிகள் எலாம்-பல்வேறு சமயங்கள் யாவும், தம் தெய்வம் எம் தெய்வம் என்று தமது தமது தெய்வம் எமது எமது தெய்வம் என்று முறையிட்டு, எங்கும் தொடர்ந்து எதிர்வழக்கிடவும் - எவ்வெவ்விடங்களிலும் ஒருவரோடொருவர் விடாதுபற்றி எதிர்த்து வழக்கிடுமாறும், நின்றது எது (அவ்வச்சமயங்கடோறும்அவரவர்கள் கடவுளராய்)விளங்குகின்றதுஎப்பொருள்,எங்கணும் பெருவழக்காய்-எல்லாவிடத்தும் (அறிதிசெய்தொழியாத) பெருவழக்காகி, யாதினும் வல்ல ஒரு சித்தாகி எவ்வகைத் தொழிலினும் வல்லதாகிய ஒப்பற்ற ஞானவுருவாகி, இன்பம் ஆய் என்றைக்கும் உள்ளது எது-பேரின்பவடிவாகி எக்காலத்தும் நித்தியமாய் விளங்குவது எப்பொருள், மேல் கங்குல் பகல் அறநின்ற எல்லை உளது எது-மேலும் இராப்பக லில்லாதிருந்த ஒரு நிலைக்களத்தே யுள்ளது எப்பொருள், அது கருத்திற்கு இசைந்தது-அந்த வஸ்துவே (பதிவர்க்கம்-பசுவர்க்கங்களின்) கருத்துக்கு ஒப்பமுடிந்தது, அதுவே கண்டது எலாம் - அந்தப்பொருளே (தூலசூக்குமங்களாற்) காணப்பட்ட (பூத பௌதிகங்களாகிய) விஷயபதார்த்தங்கள் அனைத்தும், (ஆதலால்) மோன உருவெளியது ஆகவும் கருதி அஞ்சலிசெய்குவாம்-(அந்தப்பொருளை) மௌனரூபமான வெளிப்பாடாகவும் தியானித்துக்கைகூப்பி (யாம் எப்பொழுதும்) வணங்குவாம், என்றவாறு.

'அங்கிங்கெனுதபடி' எனக்கூறியதால் இனம்பற்றி 'உங்கு' எனவுங்கூட்டி 'அவற்றிற்கிடை வெளியின்கணுள்ளது' எனவும் பொருள் கொள்க. 'அருளொடு நிறைந்தது' என்பதில் அருள் என்றது அபின்னசத்தியை. நிறைவுஆவது ஆதி மத்தியாந்தமற்று முக்காலத்து முள்ளதாய்ப் பரந்து நிற்குந்தன்மை. இத்தன்மையைப் பூரணமெனவும் விபுவெனவுங் கூறுப. இதனை இந்நூலிலே 'அண்டபகிரண்டமு மடங்கவொரு நிறைவாகி ஆனந்தமானபரமே' என்றும் பார்க்குமிடமெங்குமொரு நீக்கமறநிறைகின்ற பரிபூரணனந்தமே' என்றும் வருவனவற்றானறிக.

'அங்கிங்கெனுதபடி' என்றதற்கு வீடுபேருகிய அம்மைக்கண்ணும் உயிர் வாழ்க்கைக்கு இடமாகிய இம்மைக்கண்ணும் எனப்பொருள் கூறினும்பொருந்தும். அங்குள்ளது என்ருல் இங்கில்லே யெனவும், இங்குள்ளது என்ருல் அங்கில்லே யெனவும், அங்கு இங்கு உள்ளது என்ருல் உம்மைத் தொகையாகக் கொண்டு அங்கும் இங்குமாகிய இரண்டிடத்தும் உள்ளதேயன்றி எங்கும் இல்லது எனவும் ஐயப்பொருள்தந்து, ஓரிடத்திருந்து ஓரிடத்தில்லாதொழியின் 'அகண்டம்-பூரணம், முதலிய சொற்பொருளாக விளங்காது கண்டப்பொருளாய் முடியுமாதலால் அதனையொழித்து 'அங்கிங்கெனுதபடி' எங்கும் பிரகாசமாய் ஆனந்தபூர்த்தியாகி' என்ருர். அன்றியும் 'அங்கிங்கெனுதபடி' என்றதால், சத்தினேயும், 'எங்கும் பிரகாசமாய்' என்றதால், சித்தினேயும், ஆனந்தபூர்த்தியாகி' என்றதால், ஆனந்தத்தையுங் குறித்து அந்தச் சத்து-சித்து-ஆனந்தமே திருமேனியாகவுடைய பரம்பொருளே 'ஒருசித்தாகி என்றைக்கு முள்ளது, என அநுவதித்ததாயிற்று. 'தன்னருள்வெளிக்குளே' என்பதில் அருள்வெளி என்றது தனது சந்நிதானம். சந்நிதான மாத்திரத்தாலே எல்லாவுலகமுந்தோன்றி விரிந்து அடங்குமென்ருராகலின் "தன்னருள் வெளிக்குளே அகிலாண்டகோடியெல்லாந் தங்கும்படிக்கு" என்றும், அருட்சத்தியானது இச்சை ஞானம் கிரியைகளாகி மலபந்தப்பட்டுள்ள ஆன்மாக்களே அருள்செய்யவைத்த கிருபையை 'இச்சைவைத்து' என்றும், ஞானசத்தியால் அவர்கள் நலத்தைத்திருப்பி அறிதலே 'உயிர்க்குயிராய்' என்றும், கிரியாசத்தியால் தனுகரண புவன போகங்களேப் புசிப்பித்தலே 'தழைத்தது' என்றும் கூறினுர்.

இச்சைவைத் துயிர்க்குயிராய்த் தழைத்தது என்பதை.

'ஒன்றதாயிச்சைஞானக்கிரியையென்ருெருமூன்ருகி
நின்றிடுஞ்சத்தியிச்சையுயிர்க்கருணேசமாகும்
நன்றெலாஞானசத்தியானயந்தறிவனுதன்
அன்றருட்கிரியைதன்னுலாக்குவனகிலமெல்லாம்'

என்னுஞ் சிவஞான சித்தியாராலும்,

சந்நிதானத்தில் முத்தொழிலும் நிகழ்தலே.

'சங்கேந்துமலர்க்குடங்கைப்புத்தேளுமறைக்கோவுந்தழல்கால்சூல
மங்கேந்துமம்மானுந்தத்தமதுதொழிறலேநின்ருற்றச்செய்தோர்
பங்கேந்துபெருமாட்டிவிழிகளிப்பவிருமுனிவர்பணிந்துபோற்றக்
கொங்கேந்துமணிமன்றுட்குனித்தருளும்பெருவாழ்வைக்குறித்துவாழ்வாம்

என்னுங் காஞ்சிப்புராணத்தானும் அறிக.

வாக்கு என்பது நால்வகைத்து. சூக்குமை - பைசந்தி - மத்திமை-வைகரி யெனப்படும். விந்துவினுள்ளே அரும்புவது சூக்குமை. இதயத்தில் மயிலின் முட்டையுட்சலம்போன்று மலர்வது பைசந்தி. கண்டத்துள் சவிகற்பமா யுண ரத்தக்க ஒலியாய்க் காய்ப்பது மத்திமை. வாயினின்றுஞ் செவியிற் கேட்கப்ப டுவதாய்ப் பொருள்தருமொலியாய்க் கனிந்து வெளிப்படுவது வைகரி. மன மும் வாக்குஞ் சடமாதலால் அவை சித்தாகிச் சிவத்தை யறியாவென வுணர் த்தி 'மனவாக்கினிற் றட்டாமனின்றது' என்றார்.

மனவாக்கினிற் றட்டாமனின்றது என்பதை.

'பூதங்களல்லபொறியல்லவேறுபுலனல்லவுள்ளமதியின்
பேதங்களல்லவிவையன்றிநின்றபிறிதல்லவென்றுபெருநூல்
வேதங்கிடந்துதடுமாறும்வஞ்சவெளி'

என்னுந் திருவிளையாடற்புராணச் செய்யுளானறிக.

சமயகோடிகள் என்றது சைவம்-பாசுபதம்-வாமம்-வைரவம் - மாவிரதம்—காளாமுகம் இவை உட்சமயம். உலகாயுதம்-பௌத்தம்-சமணம் - மீமாஞ்சை-மாயாவாதம் - காஞ்சராத்திரம் இவை புறச்சமயம் இச்சமயவாதிகள் பலவாறு வாதித்து, தாம் ஒவ்வொரு வகையாகவஸ்து நிர்ணயஞ் செய்வராதலின் 'சமய கோடிகளெலாந் தந்தெய்வமெந்தெய்வமென் றெங்குந்தொடர்ந்தெதிர் வழக்கி டவுநின்றது' என்றார். வழக்கிடவுமென்றதனால் வழக்கிடுதலுடன் சிந்திக்கவும் வாழ்த்தவும் வணங்கவும் நின்றது எனவுங்கொள்க.

சமயங்கடோறு நின்றது என்பதை.

"யாதொருதெய்வங்கொண்டீரத்தெய்வமாகியங்கே
மாதொருபாகனார்தாம்வருவர்"—என்றும்,
"நிற்கின்றதெல்லாம் நெடுமாலென் றோராதார்
கற்கின்றதெல்லாங்கடை"—

என்றும் மேலோர் கூறியதானும்,

'மைவிடாதெழுநீலகண்டகுருவேவிஷ்ணுவடிவானஞானகுருவே
மலர்மேவிமறையோதுநான்முகக்குருவேமதங்கடொறுநின்றகுருவே'

என இந்நூலாசிரியர் கூறியதனாலுமுணர்க.

"ஆதியுத்தேசத்தானு மிலக்கண|வமைதியானுஞ் - சோதனை வகைமை யாலுஞ் சொன்னநூலநுவாதித்து" என்றார்போல, உத்தேசம் - இலக்கணை-சோதனைகளால் வாதிக்கப்பட்டும், அநுவாதிக்கப்பட்டும், தோல்வி வெற்றிகள

டையப்பட்டும்ஒழியாதிருத்தலால் 'எங்கணும்பெருவழக்காய்' என்றும், சிருட்டியாதிபஞ்ச கிருத்தியங்களிலும் வல்லதாக நிற்றலின் 'யாதினும் வல்லது' என்றும், இரப்பு நிகழ்வு எதிர்வென்னும் முக்காலத்தும் தனக்கோர் கேடின்றி விளங்கி 'இன்பமாயென்றைக்கு முள்ளது' என்றும், நினைப்பாகிய சகலமும், மறப்பாகிய கேவலமும், இராப்பகல் என்று, 'இராப்பகலற்ற விடத்தேயிருக்கை யெளிதல்ல, என்றார்போல (கங்குல்பகலறநின்ற வெல்லையுளது'என்றும், அத்தகையபொருள் எதுவோ அதுவே மனதிற்கு ஒப்பதுஎன்பார் 'எது அதுவே கருத்திற் கியைந்தது' என்றும், எங்குஞ் சிவமொழியவில்லை யவன்றன்னுணை' என்றபடி 'கண்டனமெலாமோன வுருவெளியதாகவும்' என்றும், அத்தகைய பொருளையென்றுந் தியானித்துப் பணியவேண்டுமென்பார் உலகினரையும் உடன்கூட்டி உளப்பாட்டுத் தன்மைப் பன்மையாக 'கருதியஞ் சலிசெய்குவாம்' யென்றுங் கூறினர்.

,மௌனவுருவெளி' என்பதில், பிரணவமாகிய மூலமனுவி விருந்து சிவம் சத்திகள் திருநோக்கத்தால் வெளிவந்தருளிய முதற்கடவுள் என்பதும் அமைந்துகிடந்தவாறு முணர்க. யோகிகள் மூலமனுவை மௌநாக்ஷரமென்பர். முதற்கடவுளென்பது மூத்தபிள்ளையார்; விநாயகர் அன்றியும் இந்நூலாசிரியர் பலவிடங்களில் "மௌனகுருவே" என்று தமது ஆசிரியரைத் துதிக்கின்றாராகலின், சிவமே தன்னையாட்கொள்ள மேற்கூறிய திருமூலநாயனர் மரபில் ஆசிரியத் திருவுருக்கொண் டெழுந்தருளிவந்து ஞானேபதேசஞ்செய்துபாசமோசனஞ் செய்தாராகலின் அவரைஈண்டு வணக்கஞ்செய்ததாகவுங் குறிப்பாற் புலப்படுவதுகாண்க.

## மூத்தபிள்ளையார் வரலாறு.

சிவபெருமான் உமாதேவியுடன் திருக்கைலாயகிரிக்கருகிலுள்ள சித்திரச்சாலையை யடைந்து அங்கு விசுவகன்மனு லெழுதப்பட்ட மந்திரவடிவமாகிய சித்திரங்களைப் பார்ப்பதியாருக்குக்காட்டி 'பெண்ணே முதலிலுள்ள பிரணவாகாரமாகிய இரண்டியானைகளில் முற்பட்டது திரிமூர்த்திகளையுந்தந்தது. அது எனதுவடிவம். அடுத்தது சக்திகள் மூவரையும் பெற்றது. அது உனது வடிவம்' 'ஆதலின்' யாம் அச்சித்திரங்களின் வடிவமாகுதும். என்று திருவாய்மலர்ந்தருள உமாதேவியாரும் அக்கருத்துக்கிசைந்தனர், அப்பொழுது இறைவர் ஆங்கோர் திருவிளையாடல்செய்ய அதனுல் அப்பிரணவ வடிவத்தினின்றும் **மூத்தபிள்ளையார்** திருவவதாரஞ் செய்தனர். என்பது இதின்விபரம் விநாயக புராணத்திற் பரக்கக்காண்க.

## திருமூலநாயனர் வரலாறு.

திருமூலநாயனர் என்பவர் திருக்கைலாயகிரியில் திருநந்திதேவர் கடாக்ஷத்தினுல் அஷ்டசித்திகளும் பெற்ற ஒரு சிவயோகி, அவர் அகத்திய மூனிவர்

பால் வைத்த அன்பால் அவருடன் சிறிதுகாலம் வாசஞ்செய்யநினைத்து, திருக்கைலையை யகன்று, சிதம்பரமுதலிய தலங்களைத்தரிசித்து, திருவாவடுதுறையில் சிவபிரானைப் பணிந்து அங்கே சிறிதுகாலம் வாழ்ந்திருக்கக்கருதி, காவிரிநதிக் கரையிலுள்ளஒருவனத்தில் வருகையில், அங்கே தம்மை மேய்த்துக்கொண்டிருந்து காலஞ்சென்ற மூலன் என்னும் பெயருடைய ஓர் இடையனைப்புடைசூழ்ந்து கதறிக்கொண்டிருந்த பசுமந்தையைப்பார்த்து மனம்வருந்தி அவற்றை மகிழ்வெய்துவிக்க, தமதுடலை ஒரிடத்திற் பதனப்படுத்தி அவனுடலிற் பிரவேசித்துப் பசுக்களை அன்றுமுழுதும் மேய்த்துப் பின்பு பொழுதுபோக, அததனிடங்களில் அவற்றைப்போக்கி, புருஷன் இறந்தது தெரியாத அவ்விடையன் மனைவிவந்தழைக்கவுந் தடுத்துவிட்டு. தாம் பத்திரப்படுத்திய விடத்திற்குச்சென்று தமதுடலைப்பார்க்க, தமதுடல் அங்கில்லாத்து பார்த்து, தாம் பரகாயப்பிரவேசஞ்செய்த மூலனென்னும் இடையன் உடலோடு திருவாவடுதுறையில்சிவபெருமானைத் தரிசித்துச் கோயிலின் மேற்புறத்துள்ள அரசமரத்தின் நீழலில் வீற்றிருந்து நிஷ்டைகூடி வருடத்திற்கோர்பாசுரமாக மூவாயிரந் திருமந்திரம் திருவாய்மலர்ந்தருளினர். இவரது அநுக்கிரகமடைந்த ஆதீனத்தின் சம்பந்திகள் இந்நூலாசிரியராகிய தாயுமானவர்.

[''எங்கும் பிரகாசமாயானந்தபூர்த்தியாகி யருளொடு நிறைந்ததும்,'' ''இச்சைவைத் துயிர்க்குயிராய்த் தழைத்ததும்,'' ''மனவாக்கினிற் றட்டாமனின்றதும்'' ,,எங்குந்தொடர்ந்தெதிர் வழக்கிடவு நின்றதும்,'' ''யாதினும் வல்லவொருசித்தாகி இன்பமா யென்றைக்குமுள்ளதும்,'' ''கங்குல்பகலறநின்றவெல்லையுள்ளதும்,'' ஆகிய இவ்வறுவகைத் தன்மைத்தாயபொருளொன்றே ஞேயத்தழுந்தினஜீவன்முத்தர் கண்டனவெலாமாகுமாதலின் அதனை ''மௌனவெளியதாகவுங்கருதியஞ்சலி செய்குவாம்'' என முடித்துக்கொள்க. —இவ்வாறனையும் வாய்பாடுகளாகக்கொண்டு,''பரிபூரணனந்தம்என்னும் தொடர்நிலைமுதல்'' சிற்சுகோதயவிலாசம்,'என்பதிறுதியாகிய பன்னிருதொடர் நிலைகளினும் அதன்வியாக வியாப்திகளை ஒவ்வொன்றிற் கிவ்விரண்டாக ஒருவாறு குறிப்பித்து அம்மெய்ப்பொருளைப் பழிச்சல்செய்கின்றாராக.]

இச்செய்யுளில் யாம் என்னும் எழுவாய் எஞ்சி நின்றது. (க)

2\. ஊரனந் தம்பெற்ற பேரனந் தஞ்சுற்று
முறவனந் தம்வினையினால்
உடலனந் தஞ்செயும் வினையனந் தங்கருத்
தோவனந் தம்பெற்றபேர்

சீரனந் தஞ்சொர்க்க நரகமு மனந்தநற்
றெய்வமு மனந்தபேதம்
திகழ்கின்ற சமயமு மனந்தமத னுன்ஞான
சிற்சத்தி யாலுணர்ந்து
காரனந் தங்கோடி வருஷித்த தெனவன்பர்
கண்ணும்விண் ணுந்தேக்கவே
கருதரிய வானந்த மழைபொழியு முகிலைநங்
கடவுளைத் துரியவடிவைப்
பேரனந் தம்பேசி மறையனந் தஞ்சொலும்
பெரியமௌ னத்தின்வைப்பை
பேசருமனந்தபல ஞானவா னந்தமாம்
பெரியபொரு ளைப்பணிகுவாம்.

(பதவுரை.) ஊர் அனந்தம் - (நான்பிறந்த) ஊர்களோ அளவில்லாதன, பெற்றபேர் அநந்தம்– (அப்பிறவிகள்) கொண்டுள்ள பேர்களோ அளவில்லாதன, சுற்றும் உறவு அனந்தம் - (அவற்றைச்) சூழ்ந்துவருகின்ற உறவாதிகள் அளவில்லாதன, வினையினல் உடல் அனந்தம்-இருவினைகாரணமாகத் தோற்றும் உடல்களோ அளவில்லாதன, செயும் வினை அனந்தம்-(அவ்வுடல்களோடு கூடிய உயிர்கள்) செய்யுஞ் செய்கைகளோ அளவில்லாதன, கருத்தோ அனந்தம் - (தேகிகள் எண்ணும்) எண்ணங்களோ அளவில்லாதன, பெற்றபேர் சீர் அனந்தம் -(மேற்சொன்னஊர்-பேர்முதலியவற்றைஇருவினைக்கீடாய்)அடையப் பெற்றவர்களது செல்வமுதலானவையோ அளவில்லாதன, சொர்க்கம்நரகமும் அனந்தம் - (தேகிகள் அவ்வவ்வந்தத்திலடையும்) மோக்ஷ நரகங்களும் (தனித்தளி) அளவில்லாதன, நல் தெய்வமும் அனந்தபேதம் - (அவரவர்தொழுதுவழிபடும்) நன்மையுள்ள தெய்வங்களோ அளவில்லாதனவாகிய பேதங்களாம், திகழ்கின்றசமயமும் அனந்தம் - விளங்குகின்ற சமயங்களோ அளவில்லாதன, அதனல் (மேற்கூறிய ஊர்முதலியபேதங்கள் அளவில்லாதனவாயிருக்கின்) அதனலே, ஞானசிற்சத்தியால் உணர்ந்து-ஞானரூபமாகிய பராசத்தியருளால்(மேற்கூறியவற்றினையும் சொரூபத்தையும்)பாகுபாட்டாலறிந்து கார் அனந்தம் கோடிவருஷித்தது என - எண்ணிறந்த மேகசாலங்கள் (ஒன்றுகூடி ஓயாமல்) பொழிந்தனபோலு மென்னும்படி, அன்பர் கண்ணும்விண்ணும்தேக்க-அன்பர்களது கண்ணும்-விண்ணும் தேங்கும்படி. கருதரிய ஆனந்த மழைபொழியும் முகிலை-நினைத்ததற்கரிதாகிய ஆனந்தவருஷத்தை வருஷிக்கும் நிலைமைத்தாகிய மேகத்தை, நம்கடவுளை-நமது கடவுளை, துரியவடிவை -துரிய

ஞான சொரூபத்தை, பேர் அனந்தம் பேசி மறைஅனந்தம் சொலும் - அள வில்லாதனவாகிய பேர்களை யெடுத்து எண்ணிறந்தனவாகிய வேதசிவாகமங் கள் துதியாநின்ற பெரிய மௌனத்தின் வைப்பை - பெருமை பொருந்திய மௌன நிக்ஷேபத்தை, பேசரும் அனந்தபதஞான ஆனந்தம் ஆம்-பேசற்கரிய முடிவில்லாததான பதமும் (முடிவில்லாததான) ஞானமும் (முடிவில்லாத தான)ஆனந்தமுமே தனது திருமேனியாகின்ற,பெரியபொருளை பணிகுவாம் பரமகர்த்தாவைத் தொழுவாம், எ-று.

'சுற்றும் உறவு' என்றதால் அளவில்லாதனவாகிய பகைமுதலியவுங் கூட் டிக்கொள்க. உறவாதிகள்—மனைவி—மக்கள்—தாய் - தந்தை முதலானோர். 'சீர் அனந்தம்" என்றதால், செல்வமுதலியவற்றின் எதிராகிய வறுமைமுதலிய பேதங்களும் உடன்கொள்க. சொர்க்கம்· இந்திராதிபோகங்கள். நரகம்-இரௌ ரவம் - அள்ளல் - கும்பிபாகம் கூடசாலம்முதலியன. சொர்க்க நரகமும்' என க்கூறியதனானே புண்ணியத்தானடையும் சொர்க்கத்திற்கும், பாவத்தானடை யும் நரகத்திற்கும் நடுவாகிய கன்மபூமியுங்கொள்க. அதாவது அவ்விரண்டை யுஞ் சமமாக அனுபவிக்குமிடம்.'நற்றெய்வம்' என்றது, தம்மை வழிபடுவோர் க்குத்தக்கபடி பலனளிப்பது நோக்கியென்க. 'சிற்சத்தியாலுணர்ந்து' என்ற து, உயிர்க்குப் பரிபாகமேற, தனு முதலியவற்றைத்தந்து பண்டைய விஷய மறைப்பை நீக்கவும், அவ்விருவகை ஞானங்களையுந் தருவது அருட்சத்தியே யாகலான் சம்வர்த்தம் ஆவர்த்தம்புஷ்கலாவர்த்தம் முதலியசப்தமேகங்களும்ம ணிபொன் முதலியவற்றைப் பொழியுமன்றி ஆனந்தமழையைப் பொழியமாட் டாதாதலாலும், அவ்வானந்தமழை பொழியக்கண்ட அடியார்க்கு ஒருவகை நினைவுண்டாய்ச் சலியாததாலும் "கருதரிய வானந்தமழை பொழியு முகிலை" என்றார். கடவுள்-எல்லாவற்றையுங் கடிந்துள்ளது. துரியம்-மேலான ஞானம். நின்மலாவத்தையில் தற்சொரூபதரிசனந் தோன்றுவது துரியமென்பர்அஃது அறிவின்மயமாம். மறை அனந்தம் என்பதனானே நான்கு வேதங்களேயன்றி அவற்றின் சாகைகளும் இருபத்தெட்டு மூல ஆகமங்களும் இவற்றின் பிரிவுக ளும் உபாகமங்களும் இவற்றின் பகுதி விகுதிமுதலியவும் உடன்கொள்க. மௌனத்தின்வைப்பு, என்பது சனகாதி நால்முனிவர்கட்குக் கல்லாலமரநி ழலில் தருமார்த்த காமிய மோக்ஷங்களைப் போதித்து அப்பொருள் இவ்வாறி ருப்பதென வுணர்த்தி அது நாமேயெனத் தெளிவித்த தக்ஷிணாமூர்த்தியென ப்பொருள் கூறினும் பொருந்தும்.

ஊர்முதற் சமயமிறுவாயுள்ள விடயங்கள் பல்வகைப்பேத முடையன அவற்றின் தோற்றநாசங்களைச் சிற்சத்தியாலுணர்ந்து, ஆனந்தமழைபொழிய

லும் அனந்தானந்தமும்' ஆகிய 'பெரிய பொருளைப் பணிகுவாம்' என முடித்துக்கொள்க.

இது சிவத்தைப் பணிந்ததாம்.

'ஞானசிற்சத்தியாலுணர்ந்து' என்பதை, தாயுடன் சென்று பின் தாதையைக்கூடிப் பின் தாயை மறந்து' என்ற மேலோர்வாக்கானுணர்க.

"முன்னம் பிறந்த பிறப்போ முடிவில்லை" என்றும்.

"எத்தனையூரெத்தனைபேரெத்தனைதாய்பெற்றவர்கள்
எத்தனைபேரிட்டழைக்கவேனென்றேன்" என்றும்,

"அன்னை யெத்தனை யெத்தனை யன்னையோ
அப்ப னெத்தனை யெத்தனை யப்பனோ
பிள்ளை யெத்தனை யெத்தனை பிள்ளையோ
பெண்டி ரெத்தனை யெத்தனை பெண்டிரோ
முன்ன மெத்தனை யெத்தனை சன்மமோ
மூடனு யடியேனு மறிந்திலேன்
இன்ன மெத்தனை யெத்தனை சன்மமோ
என்செய் வேன்கச்சி யேகம்ப நாதனே" என்றும் மேலோர்
கூறிய கருத்து இச்செய்யுளிற்போந்து கிடந்தவாறறிக.

'தெய்வமு மனந்தபேதம்' என்பதிலுள்ள பேதம் என்னுஞ் சொல்லை இடைநிலைத் தீவகமாகக்கொண்டு "ஊரோ அனந்தபேதம்" "பேரோ அனந்தபேதம்" என முறையே ஒவ்வொன்றோடு மொட்டிப் பொருள்கூறிக்கொள்க.

3. அத்துவித வத்துவைச் சொற்பிரகா சத்தனியை
அருமறைகண் முரசறையவே
அறிவினுக் கறிவாகி யானந்த மயமான்
ஆதியை யநாதியேக
தத்துவ சொரூபத்தை மதசம்ம தம்பெறாச்
சரலம்ப ரகிதமான
சாசுவத புட்கல நிராலம்ப வாலம்ப
சாந்தபத வ்யோமநிலையை
நித்தநிர் மலசகித நிஷ்பிரபஞ் சப்பொருளை
நிர்விஷய சுத்தமான

நிர்விகா ரத்தைத் தடத்தமாய் நின்றொளிர்
நிரஞ்சன நிராமயத்தைச்
சித்தமறி யாதபடி சித்தத்தி னின்றிலகு
திவ்யதே சோமயத்தைச்
சிற்பர வெளிக்குள்வளர் தற்பரம தானபர
தேவதையை யஞ்சலிசெய்வாம்.

(ப - ரை.) அத்துவித வஸ்துவை-இரண்டறக்கலந்துள்ள பொருளை சொல்பிரகாசத்தனியை-மந்திரரூபமான பேரொளிப் பிழம்பாகிய ஒன்றை, அருமறைகள் முரசு அறைய-அரியவேதங்கள் (யாவருமுணரும்படி) முழங்காநிற்க அறிவினுக்கு அறிவாகி ஆனந்தமயமான ஆதியை-சீவான்மாக்களிடத்தே (எல்லாம் விளங்கிய) பரமான்மாவாகிப் பேரின்பமயமாகிய ஆதிசத்தியை, அநாதி ஏகதத்துவ - சொரூபத்தை - ஆதியந்தமற்றதாகிய சிவமே தானாகியும் தானே சிவமாகியும் விளங்கும் ஒன்றாயுள்ள தத்துவ சொரூபத்தை, மதசம்மதம்பெறா-(பல) மதங்கட்குள் சம்மதமடையாது சொல்லப்படும், சாலம்ப ரகிதமான-சாலம்ப ரகிதமாகிய, சாசுவத புட்கல நிராலம்ப ஆலம்ப சாந்தபத வியோமநிலையை-(அவைக்கதீதமான) சாலம்ப ரகிதமும், சாசுவதமும், புட்கலமும், நிராலம்பமும் ஆலம்பமுமான சாந்தபதமென்னும் பரவெளியை, நித்தம் நின்மலசகிதம் நிஷ்பிரபஞ்சப்பொருளை-நித்யதத்துவ மும்மல ரகிதமும் பிரபஞ்சாவத்தை கடந்துள்ள பொருளை, நிர்விஷய சுத்தமான நிர்விகாரத்தை - விஷயப்பற்றுகளொன்று மற்றதாய்ச் சுத்தமாகிய யாதொன்றின் வயத்துந்தானெய்தாமல் யாவுந் தன்வயமெய்த வுள்ளதாகிய ஒன்றை, தடத்ததாய் நின்று ஒளிர் நிரஞ்சன நிராமயத்தை - பொதுவாயிருந்து விளங்குகின்ற பற்றற்றதும் அவத்தையற்றதுமாகிய பொருளை, சித்தமறியாதபடி சித்தத்தில் நின்று இலகு திவ்யதேசோமயத்தை-சித்தம் (இன்னபடித்தென) அறியாவகை அச்சித்தத்தினிடத்தே நின்று (உள்ளும் புறம்புமாய்ப்) பிரகாசிக்கின்ற உயர்வினுளுயர்வான தேஜோராசியை, சிற்பர வெளிக்குள்வளர் தற்பரமதான பரதேவதையை-பரமாகாயத்தில் (பூரணாகாரமாக) இருக்கும் மேலானதேவதையாகிய சிவசத்தியை, அஞ்சலிசெய்வாம் - கைகூப்பி வணங்குவாம், எ - று.

மணியும் ஒளியும், பூவும் வாசமும் வேறாகாததுபோல, பரசிவத்துடன் அபேதமாகச் சத்தி கலந்திருப்பது நோக்கி "அத்துவிதம்" என்றார். அவ்வாறன்றிச் "சிவத்துடன் ஆன்மாக்களை அத்துவிதமாகக் கலக்கச்செய்யும்" எனப் பொருள் கூறினும் பொருந்தும். கடவுள் ஒருகாலத்தில் பஞ்சப்பிரமமந்திரமே தமக்குரிய வடிவமாகக்கொண்டு விளங்குதலின் 'சாணமந்திரவடிவாஞ்

சதாசிவ சரணம்' என்றார்போல "மசாற்பிரகாசத்தனியை" என்றார். இதனை மந்திரோபநிஷத் "தர்மாவஹம்பாவ நரம்பஹேஸம்" எனவும், வேறோர் மந்திரம் "ஸர்வாநநசிரோக்ரீவ: ஸர்வபூதகுஹாஸய: ஸர்வஸ்யாபீஸபகவாந் தஸ்மாத் ஸர்வகத: சிவ:" என்றும் வருவனவற்றானறிக. "சிவமெனும் பொருளுமாதி சத்தியொடு சேரினெத்தொழிலும் வல்லதாம்" என்னுஞ் சௌந்தரியலகரியின்படி "அறிவினுக்கறிவாகி ஆனந்தமயமான ஆதி" என்றார். இதனை.

சிவஞான சித்தியார்.

"சிவஞ்சத்திதன்னையீன்றுஞ்சத்திதான்சிவத்தையீன்று
முவந்திருவரும்புணர்ந்திங்குலகுயிரெல்லாமீன்றும்
பவன்பிரமசாரியாகும்பான்மொழிகன்னியாகுந்
தவந்தருஞானத்தோர்க்கித்தன்மைதான்றெரியுமன்றே."

என்பதனானறிக.

"சாலம்பரகிதமான சாசுவதபுட்கல நிராலம்ப ஆலம்ப சாந்தபதவியோக நிலைமை" என்பதில், சாலம்பம் - ஆதாரத்தோடு கூடியது. சாலம்பரகிதம்-தானென்றேடும் பிடிப்பில்லாதது, சாசுவதம்-முதலு முடிவுமில்லாதது. புட்கலம்-நிறைவு. நிராலம்பம்-தன்னினும் பிறிதொன்று இயற்கையாக இல்லாதது. ஆலம்பம்-எல்லாவற்றிற்குந் தானே ஆதாரமாயிருப்பது. சாந்தயதவிபோமநிலை - ஆங்காராதிகளில்லாத தானமாகிய ஆகாயம் எனப்பொருள்.

"தடத்ததாய் நின்றெளிர் நிரஞ்சன நிராமயத்தை" என்பதில், தத்தம்-பொதுவாயிருத்தல். நிரஞ்சனம் - பற்றற்றிருத்தல். நிராமயம் - நோயற்றது. (ஆமயம் நோய்) நிர் - எதிர்மறை வடமொழி உபசர்க்கம் என்பர். "சிற்பரவெளிக்குள் வளர் தற்பரமதான பரதேவதையை" என்றது சிவசத்தியை. சிற்பரவெளி-பரமாகாயம். அது சிவம். அவ்வகைய சிவத்தோடு உட்கிடையாய் விளங்கும் தேவதை என்றது சத்தியென்க. இதனை.

சிவஞான சித்தியார்.

"அருளதுசத்தியாகுமரன்றனக்கருளையின்றித்
தெருள்சிவமில்லையந்தச்சிவமின்றிச்சத்தியில்லை
மருளினையருளால்வாட்டிமன்னுயிர்க்களிப்பன்கண்கட்
கிருளினையொளியாலோட்டுமிரவியைப்போலவீசன்."

என்பதனானறிக.

இது சத்தியை வணங்கியதாம். (ரு)

## பரிபூரணனந்தம்.

4. வாசாக யிங்கரிய மன்றியொரு சாதன
மனோவாயு நிற்கும்வண்ணம்
வாலாய மாகவும் பழகியறி யேன்றுறவு
மார்க்கத்தி னிச்சைபோல
நேசானு சாரியாய் விவகரிப் பேனந்த
நினைவையு மறந்தபோது
நித்திரைகொள் வேன்றேக நீங்குமென வெண்ணிலோ
நெஞ்சந் துடித்தயருவேன்
பேசாத வானந்த நிட்டைக்கு மறிவிலாப்
பேதைக்கும் வெகுதூரமே
பேய்க்குண மறிந்திந்த நாய்க்குமொரு வழிபெரிய
பேரின்ப நிட்டையருள்வாய்
பாசா டவிக்குளே செல்லாதவர்க்கருள்
பழுத்தொழுகு தேவதருவே
பார்க்குமிட மெங்குமொரு நீக்கமற நிறைகின்ற
பரிபூர ணனந்தமே.

(ப - ரை.) வாசா கயிங்கரியம் அன்றி - கயிங்கரியங்களில் வாசிகத்தாலல்லாது, மனோவாயு நிற்கும்வண்ணம் - மனமும் வாயுவும் சலனமற்றிருக்கும் வகையாக, ஒரு சாதனம் - ஒரு அப்பியாசத்தை, வாலாயமாகவும் - தடையில்லாமல், பழகி அறியேன் - அப்பியாசஞ்செய் தறிந்தேனிலன், துறவுமார்க்கத்தின் துறவறத்திலே, இச்சைபோல - அன்புடையவன்போல, நேசானுசாரியாய் விவகரிப்பேன் அன்பர்கட்கு அனுகூலமுடையவனாக விவகாரஞ்செய்வேன், அந்த நினைவையு மறந்தபோது:—நித்திரைகொள்வேன்-சயனிப்பேன், தேகம் நீங்குமென எண்ணிலோ நெஞ்சம்துடித் தயருவேன் - உடல் ஒழியுமென்று நினைத்தாலோ மனம் பதைத்து வருந்துவேன், பேசாத ஆனந்த நிட்டைக்கும்-சொல்லமுடியாத இன்பத்தைக் கொடுக்கும் நிஷ்டைக்கும், அறிவிலாப் பேதைக்கும் வெகுதூரமே - விவேகமில்லாத பேதையேனாகிய அடியேனுக்கும் நெடுந்தூரமே யாம், (ஆனாலும்) பேய்க்குணம் அறிந்து-பேதைமைத் தன்மையையறிந்து இந்த நாய்க்கும்-இந்த நாயினேனுக்கும், ஒருவழி பேரின்பநிட்டையருள்வாய்-ஒப்பற்ற நெறியாகிய மிகப்பெரிய இன்பத்தைத்தரும்

நிட்டையை அநுக்கிரகிப்பாய், பாச அடவிக்குள்ளே செல்லாதவர்க்கு-ஆசையாகிய காட்டில் நுழையாதவர்களுக்கு, அருள்பழுத்தொழுகு தேவதருவே அருளாகிய கனிபழுத்து (ஆனந்தமாகிய தேன்) ஒழுகப்பெற்ற கற்பகவிருக்ஷமே பார்க்கும் இடமெங்கும்-பார்க்கத்தக்க இடமெல்லாம், ஒரு நீக்கம் அறநிறைகின்ற - கொஞ்சமும் நீங்குதலில்லாமல் நிறைந்து விளங்குகின்ற பரிபூரண ஆனந்தமே - நிறையாகிய சுகமே, எ - று.

கயிங்கரியம்—மானதம் - வாசிகம் - காயிகம் எனமூவகைத்து.

"மானதமேவாசிகமேகாயிகமேயெனவகுத்த
வீனமில்சீர்த்தவமூன்றுமிவற்றின்மானதந்தரும
தானமிசைமதிவைத்தறயவுபொறைமெய்சிவனை
மோனமுறத்தியானித்தலேந்தடக்கன்முதலனந்தம்.

வாசிகமைந்தெழுத்தோதன்மனுப்பஞ்சசாந்திமறை
பேசுசதவுருத்திரந்தோத்திரமுரைத்தல்பெருந்தமருங்
காசமலவெடுத்தோதன்முதலனந்தங்காயிகங்க
ளீசனருச்சனைகோயில்வலஞ்செய்கையெதிர்வணங்கல்.

நிருத்தனுறைபதிபலபோய்ப்பணிதல்பணிநிறைவேற்ற
றிருத்தன்முடிநதியாதிதீர்த்தயாத்திரைச்பால்மெய்
வ்ருத்தமுறவாடலிவைமுதற்பல."—
என வருவனவற்றானறிக.

வாசாஞானமே யன்றி விஷயஞானமே யடைந்தேனில்லை யென்றும், அவ்வகைய பழக்கம் எய்தும் வண்ணந் தக்கோருடன் அளவளாவினேனில்லையென்றும், ஏகாந்தமாக இருக்க நேர்ந்துழி நித்திரையாதி துன்பங்கள் வருந்துகின்றன என்றும் அடியேனுக்கும் பேரானந்த நிஷ்டைக்கும் நெடுந்தூரமாக விருத்தலின் அஃது கைகூடவேண்டுமென்றும் பிரார்த்தித்தாம், மனோவாயு என்றது, மனம்விஷய வாதனையில் எஞ்ஞான்றும் சுழல்வதேயன்றி நிலைத்திராமை கருதியென்க. அவ்வகைய மனோவாயு நிற்கும் வண்ணம் யாது வேண்டுவது எனின் ஒரு சாதனம் என்றார். சாதனம் ஈண்டுயோகத்தை யுணர்த்தியது. யோகம் எனவகைத்து அது இமயம்-நியமம்-ஆதனம்-பிராணயாமம்-பிரத்தியாக்காரம்-தாரணை. தியானம்-சமாதி யென்பன. துறவு என்பது இம்மை மறுமைப்பலன்களையும் மண் பெண் பொன் முதலிய ஈஷணத்திரயங்களையும் உள்ளபடி வெறுத்தல். இதனை "அற்றவரென்பாரவாவற்றார்" என்னுந் தேவர்

குறளானறிக. "தேக நீங்கு-மென வெண்ணிலோநெஞ்சந் துடித்தயருவேன்" என்றது தேகாபிமானத்தை யுணர்த்தியது.

"பேய்" எனவும் "நாய்" எனவுங் கூறியது பேய் அலைவுற்றுத் திரிவது போல மனமலைவதாலும், நாய் இரைந்து யாவரையுந் துன்புறுத்து வதுபோலப் பந்தபாசத்தால் உறவும் பகையுமெனக்கொண்டு தீமைசெய்து வருதலாலும் என்க. அவ்வகைய தீயேனுயினும் நினது கடாக்ஷத்தினுல் பிதா மைந்தனை உச்சீவிக்கச் செய்யுமாறு, பரமபிதாவாகிய தேவரீர் அடியேனும் பிழைக்குமாறுசெய்தல், ஆவசியகமெனப் பிரார்த்தித்து "பேய்க்குண மறிந்திந்த நாய்க்கு மொருவகை பெரிய பேரின்ப நிட்டையருள்வாய்" என்று கூறினுர். நாய்க்கும் என்றதிலுள்ள உம்மை இழிவுச் சிறப்புப் பொருளது. (௪)

5. தெரிவாக வூர்வன நடப்பன பறப்பன
செயற்கொண் டிருப்பனமுதல்
தேகங்க ளத்தனையு மோகங்கொள் பௌதிகஞ்
சென்மித்த வாங்கிறக்கும்
விரிவாய பூதங்க ளொன்றென்டொன் ருயழியு
மேற்கொண்ட சேடமதுவே
வெறுவெளி நிராலம்ப நிறைசூன்யமுபசாந்த
வேதவே தாந்தஞானம்
பிரியாத பேரொளி பிறக்கின்ற வருளருட்
பெற்றோர்கள் பெற்றபெருமை
பிறவாமை என்றைக்கு மிறவாமை யாய்வந்து
பேசாமை யாகுமெனவே
பரிவா யெனக்குநீ யறிவிக்க வந்ததே
பரிபாக காலமலவோ
பார்க்குமிட மெங்குமொரு நீக்கமற நிறைகின்ற
பரிபூர ணானந்தமே.

(ப - ரை.) தெரிவாக - தெளிவுடன், ஊர்வன நடப்பன பறப்பனசெயல் கொண்டு இருப்பனமுதல் - ஊர்வனவும் நடப்பனவும் பறப்பனவும் செய்கையைக்கொண் டிருப்பனவும் முதலாகிய, தேகங்கள் அத்தனையும் - சரீரங்கள் முழுதும், மோகங்கொள் பௌதிகம் - (மோகமாகிய) இச்சையைத்தரும் பௌதிகமென்று சொல்லப்பட்டு, சென்மித்தவாங்கு இறக்கும்-தோற்றியமு

றையே லயமடையும், விரிவாய பூதங்கள்-பரந்துள்ள பஞ்சமகாபூதங்கள், ஒன்றொடு ஒன்றாய் அழியும் - ஒன்றுக்குள் ஒன்றாக (தோற்றக்கிரமப்படி) ஒடுக்கமாம், மேற்கொண்ட சேடம் அதுவே-இவற்றிற்கு அதீதப்பட்ட அந்தப்பொருளே, வெறுவெளி-வெற்றவெளி, நிராலம்பம்-ஆதாரமற்றது, நிறை சூன்யம்-சுத்தசூன்யம், உபசாந்தவேத வேதாந்தம்-உபசாந்தத்தைத்தரும் வேதவேதாந்தங்களாற் சொல்லும் ஞானம், பிரியாத பேரொளிபிறக்கும் அருள்-நீங்கா நிலையாகிய பேரொளிப்பிழம்பில் தோன்றிய திருவருள், அருள்பெற்றோர்கள் பெற்றபெருமை-திருவருளடையப் பெற்றோர்கள் பெற்றபெருமை, பிறவாமை-பிறப்பின்மை, இறவாமை - இறப்பின்மை, ஆய் - ஆகிய (மேற்கூறிய வெறுவெளிமுதல் உள்ள) வைகளாய், பேசாமை ஆகும் என-மௌனநிலை யாகுமென்று, பரிவாய் நீ எனக்கு அறிவிக்க வந்தது-ஆசைகொண்டு தேவரீர் அடியேனுக்குத் தெரிவிக்குமாறு எழுந்தருளிவந்தது, பரிபாககாலம் அலவோ-என் பரிபக்குவ காலத்தில் பலமல்லவோ, பார்க்கும்,—எ - று.

ஊர்வன-எறும்புமுதலியன. நடப்பன நாற்காலிகளாகிய மிருகங்கள். பறப்பன - பறவைகள். இருப்பன - தாவரமாகிய மரங்கள். காற்றினால் அசைதல் முதலிய செயல்களை மேற்கொண் டொழுகலின் 'செயல் கொண்டிருப்பன' என்றார்.

'ஊர்வன செயல்கொண்டிருப்பனமுதல் தேகங்கள்' என்றது "ஞானமஞ் ஞானமத்தால் ஈனமார் வினையிரண்டாம் இருவினையா லுடம்பாம்" என்றமேலோர் சொற்படி, இருவினைவசத்தா லெடுத்த தேகங்களெனக்கொள்க. அவை எழுவகைத் தோற்றம் எண்பத்து நான்குலக்ஷம் யோனிபேதமாகிய பிராணிகள் இவற்றின் விரிவு.

"ஊர்வபதினொன்றுமொன்பதுமானுட
நீர்ப்பறவைநாற்காலோர்பப்பத்து—சீரிய
பந்தமாந்தேவர்பதினாலயன்படைத்த
அந்தமில்சீர்த்தாவரநாலைந்து" என்பதனாலறிக.

"சென்மித்த வாங்கு இறக்கும்" என்றது "தோற்றமுண்டேல் மரணமுண்டாந் துயரமனவாழ்க்கை" என்ற திருநாவுக்கரசு நாயனார் திருவாக்கின்படி காணப்பட்ட பொருள்களெல்லாம் அழியுமென்றும், அவ்வாறழிவதும் தோன்றிய அந்தவிடத்தே லயமாகும் என்றுங் கொள்க. இதனை, சிவஞானபோதம்.

முதல் சூஸ்திரம் உதாரணம்.

“இலயித்ததன்னினிலயித்ததாமஃத்தா
லிலயித்தவாறுளதாவேண்டு—மிலமித்த
தத்திதியிலென்னினழியாதவையழிவ்
தத்திதியுமாதியுமாமாங்கு” என்பதனுனறிக.

விரிவாய பூதங்கள் என்பது.

‘ஆகாயத்திலிருந்து வாயுவும், வாயுவிலிருந்து தேயுவும், தேயுவிலிருந்து அப்பும், அப்புவிலிருந்து பிரிதிவியும், தோன்றி அத்தோன்றிய அடைவே பிரிதிவி அப்பு விலும், அப்பு தேயுவிலும் தேயு வாயிவிலும், வாயு ஆகாயத்திலும், தோன்றிய விடமாகலின் லயமடையு மென்பர். அன்றியும் அவற்றின் குணங்களே,

உண்மைவிளக்கம்,

“மண்கடினமாய்த்தரிக்கும்வாரிகுளிர்ந்தேபதமா
மொண்கனல்சுட்டொன்றுவிக்குமோவாமல்—வண்கால்
பரந்துசலித்துத்திரட்டும்பார்க்கிலாகாயம்
நிரந்தரமாநிற்குநிறைந்து” என்பதனுனறிக.

“பரிவாயெனக்குநீ யறிவிக்கவந்ததே பரிபாககாலமலவோ” என்றது ஆணவம் - கன்மம் மாயையென்னும் மும்மலங்களுள், ஆணவ மொன்றினையே யுடைய விஞ்ஞானகலர்க்கு அவருள்ளத்து அருண்மயமாகவே நின்று அநுக்கிரகித்தும், ஆணவகன்மங்களாகிய இருமலமுடைய பிரளயாகலர்க்கு மான்மழு சதுர்ப்புஜத்துடன் எழுந்தருளித் திருவருள்புரிந்தும். அம்மூன்றினையும் ஒருங்கேயுடைய சகலர்க்கு மானேக்காட்டி மானேப் பிடிப்பதுபோல ஆசாரியத் திருவுருவங்கொண்டு ஆன்மாக்களின் பாசவீக்கம் போக்குவதும் இயற்கையாதலின்யென்க இதனே.

போற்றிப்பஃறொடை.

“நன்னெறிவிஞ்ஞானகலர்நாடுமலமொன்றினையும்
அந்நிலேயேயுண்ணின்றறுத்தருளி—பின்னன்பு
மேலாவிளங்கும்ப்ரளயாகலருக்குத்
தேவாய்மலகன்மந்தீர்த்தருளிப்—பூவலயந்
தன்னின்றுநீங்காசகலர்க்கவர்போல
முன்னின்றுமும்மலந்தீர்த்தாட்கொள்கை—யன்னவனுக்
காதிகுணம்,, எனவருவனவற்றுனறிக.

6. ஆராயும் வேளையிற் பிரமாதி யானுலு
   மையவொரு செயலுமில்லை
அமைதியொடு பேசாத பெருமைபெறு குணசந்த்ர
   ராமென விருந்த பேரும்
நேராக வொருகோப மொருவேளை வரவந்த
   நிறைவொன்று மில்லாமலே
நெட்டுயிர்த் துத்தட் டழிந்துளறு வார்வசன
   நிர்வாக ரென்றபேரும்
பூராய மாயொன்று பேசுமிட மொன்றைப்
   புலம்புவார் சிவராத்திரிப்
போதுதுயி லோமென்ற விரதியரு மறிதுயிற்
   போலே யிருந்துதுயில்வார்
பாராதி தனிலுள்ள செயலெலா முடிவிலே
   பார்க்கினின் செயலல்லவோ
பார்க்குமிட மெங்குமொரு நீக்கமற நிறைகின்ற
   பரிபூர ணானந்தமே.

(பதவுரை.) ஆராயும் வேளையில் - ஆலோசிக்குஞ் சமயத்தில், பிரமாதி ஆனுலும் - இரணியகற்பன்முதல் யாவராயினும், ஐய ஒருசெயலும் இல்லை - ஐயனே ஒருசெய்கையும் உடையோரிலர், பேசாத பெருமைபெறு - மௌனமாகிய பெருமைபெற்ற, குணசந்திரர் ஆம் என இருந்தபேரும் - குணத்தால் சந்திரன்போன்றவர் இவராவர் என்று சொல்லும்படி விளங்கினவர்களும், நேராக ஒரு கோபம் ஒருவேளை வர-சிறிது கோபமானது ஒருசமயம்நேர்ந்தால் அந்த நிறைவு ஒன்றும் இல்லாமலே-அந்நிலையமைதி சிறிதும் இல்லாமல்(நிலைகுலைந்து என்றபடி,) நெட்டுயிர்த்து தட்டழிந்து உளறுவார் - பெருமூச்சுவிட்டுத் தடைகெட்டுக் குழறுவார்கள், வசன நிர்வாகர் என்ற பேரும் - சொல்லிய வார்த்தையை நிர்வாகஞ் செய்தலில் வல்லவர்கள் என்றுபிறரால் சொல்லத்தக்கவர்களும், பூராயமாய் ஒன்று பேசுமிடம் ஒன்றை புலம்புவார்-ஆதியந்தமாக ஒரு விஷயத்தைப்பற்றி வசனிக்கையில் பிறிதொன்றினை (இடையேதவறி பேசுவார்கள், சிவராத்திரிப்போது துயிலோம் என்ற விரதியரும்-சிவராத்திரி காலத்தில் நித்திரை செய்யமாட்டோம் என்று மேற்கொண்ட விரதிகளும், அறிதுயில்போலே இருந்து துயில்வார்-யோக நித்திரைபோல இருந்து சிறிது தூங்குவார்கள், (ஆகையால்) பார் ஆதி தனில் உள்ள செயல் எல்லாம்-பிரிதி

விமுதல் நாதமிறுதியாக தத்துவங்களிலெல்லாம் உள்ள செயல்கள்யாவும், முடிவிலேபார்க்கில் நின்செயல் அல்லவோ-முடிவில் ஆலோசித்துப்பார்க்கையில் தேவரீரது செயல்களல்லவோ, பார்க்கும் - எ-று.

"பிரமாதியானுலும்" என்றது இரணியகர்ப்பபிபீலிகாதி பரியந்தமுள்ள ஆன்மாக்களை. அமைதியொடு பேசாதபெருமை என்றது மௌனநிலை. குண சந்திரர் என்றது சந்திரன் யாவரையு மொப்ப நோக்கி, தன்னிடத்து நட்பூப் பகை முதலியன வின்றித் தண்ணென நிற்குமாறு, எவ்லோரிடத்துங்கருணை நோக்கு உடையவர்களை யுணர்த்தி நின்றது. கோபம் அத்தன்மையருக்கும் விலக்கமுடியாத பொருளாய் ஒருவேளை "உள்ளியதெள்ளியராயினும் ஊழ்வினை பையநுழைந்துவிடும்" என்றூர்போலவும், "குணமென்றுங்குன்றேறி நின்றூர்வெகுளி கணமேனுங் காத்தலறிது" என்ற திருவள்ளுவநாயனூர்திருவாக்கின் படியும், வினைவசத்தாற் கோபமுறுவ ராகலின் "நேராக ஒருகோபம் * * * தட்டழிந்துளறுவார்" என்றூர்.

சிவராத்திரி யென்பது சிவபிரான் ஆலாலவிஷபானஞ்செய்த தினமென்பர் இது மாசிமாதத்தில் வரக்கூடியது. அன்றியும் மாதத்தில்வரும் திரயோதசித்திதிகளை மாதசிவராத்திரிகளெனவும், ஒவ்வொரு தினமும் உதயாதி இருபத்தாறேகால் நாழிகைமுதல் இரவு மூன்றேமுக்கால் நாழிகைவரையும் ஆகிய நாழிகை ஏழரையில் ரஜனிமுக்காலத்தில் சம்பவிக்கும் பிரதோஷத்தைச் சிவராத்திரி காலமென்றுங் கூறுவர். "விரதியரு மறிதுயில்போலேயிருந்துதுயில்வார்" என்பதைவிரதியரும் மறி துயில் எனப்பதம்பிரித்து ஆடுபோலசொல்ப நித்திரையெனப்பொருள் கூறுவாருமுளர்.

"தன்வயத்தவன்றூயவுடம்பினன்-ருனியற்கையுணர்வினனுகுதல்
பன்னுமுற்றவுணர்தலியல்பினன்-பாசநீக்குதல்பேரருளாகுதல்
மன்னுமீறிலவாற்றலுடைமையும்-வரம்பிலின்பமுமாகியவெண்குணம்
இன்னதாகச்சைவாகமமோதுமெம்-மீசன்ருளையெப்போதும்வணங்குவாம்."

என்றபடி இவ்வகைய எண்குணமுடையவனுகலின் "பாராதிதனிலுள்ள செயலெலாமுடிவிலே பார்க்கினின் செயலல்லவோ பார்க்குமிட மெங்கும் * * * பரிபூரணனந்தமே" என்றூர். (௩)

7. அண்டபகி ரண்டமும் மாயாவி காரமே
யம்மாயை யில்லாமையே
ஆமெனவு மறிவுமுண் டப்பானு மறிகின்ற
வறிவினை யறிந்துபார்க்கின்

எண்டிசை விளக்குமொரு தெய்வவரு ளல்லாம
　லில்லையெனு நினைவுமுண்டிங்
கியானென தறத்துரிய நிறைவாகி நிற்பதே
　யின்பமெனு மன்புமுண்டு
கண்டன வெலாமல்ல வென்றுகண் டனைசெய்து
　கருவிகர ணங்களோயக்
கண்மூடி யொருகண மிருக்கவென் றூற்பாழ்த்த
　கன்மங்கள் போராடுதே
பண்டையுள கன்மமே கர்த்தா வெனும்பெயர்ப்
　பட்சநா னிச்சிப்பனோ
பார்க்குமிட மெங்குமொரு நீக்கமற நிறைகின்ற
　பரிபூரணானந்தமே.

(பதவுரை,) அண்டபகிரண்டமும்-அண்டாண்ட பிரமாண்டங்களும், மாயாவிகாரமே - மாயாசம்பந்த வுருவமேயாகும், அம்மாயை இல்லாமையே ஆம் எனவும் - அந்த மாயையென்னும் வஸ்துவானது பொய்யே யாகுமென்றும், அறிவும் உண்டு - பேரறிவும் உளது, அப்பாலும் அறிகின்ற அறிவினை அறிந்துபார்க்கின்-அதன்மேலும் அறியத்தக்க அறிவைஉற்றுணர்ந்துபார்க்கும்பொழுது, எண்திசை விளங்கும் ஒருதெய்வ அருள் அல்லாமல் - அட்டதிக்குகளிலும் பிரகாசிக்கும் ஒப்பற்ற தெய்வத்தினது கருணையல்லாது, இல்லை எனும் நினைவும் உண்டு - (பிறிதொன்றும்) இல்லையென்று சொல்லப்படும் எண்ணமும் உளது, இங்கு - இவ்வண்ணமே. யான் எனதுஅற - யான் என்னும் தற்போதமும் எனது என்னும் பாசபந்தமும் அகலும்படி. துரிய நிறைவு ஆகி நிற்பதே - துரிய பதவியில் பூரணமாக விளங்கி நிற்பதே, இன்பம் எனும்அன்பும் உண்டு - இன்பம் என்று சொல்லும் அன்பும் உளது, கண்டன எலாம் அல்ல என்று கண்டனைசெய்து - பார்க்கப் படட்டன வெல்லாம் பரம்பொருளல்லவென்று கண்டித்து (ஒழித்து), கருவி கரணங்கள் ஓய - கருவிகளும்கரணங்களும் அடக்கமாக, கண்மூடி ஒருகணம் இருக்க என்றால் - கண்களை மூடிக்கொண்டு ஒருவிநாடிகாலம் (நிஷ்டைகூடி) இருக்கலாமென்றால், பாழ்த்த கன்மங்கள்போராடுதே-பாழ்படுங்கன்மங்கள்வந்து போராட்டமிடுகின்றனவே, (அவற்றின் வரலாறென்னின்) பண்டை உளகன்மமே - ஜன்மாந்தரத்திலே அமைந்துள்ளனவாகிய கன்மங்களே, கர்த்தா எனும் பெயர் பக்ஷம்—கடவுள் என்கிற பெயரினது பக்ஷமாக, நான் இச்சிப்பனோ - அடியேன் விருப்ப முறுவேனோ பார்க்கும். எ-று.

அண்டம்-என்பது துரியஅளவு. துரியமாவது அஃதோர் பதவி.

## துருவன் வரலாறு.

பூர்வம் சுவாயம்பு மனுவின் புதல்வனுகிய உத்தானபாதன் என்னுமரசன் சுருதி சுநீதி யென்பவர்களை மணஞ்செய்து வாழ்ந்துவருகையில் சுருதி என்பவள் உத்தமனென்னும் புத்திரனையும், சுநீதியென்பவள் துருவன் என்பவனையும் பெற்றுர்கள், அவ்விரு புதல்வர்களும் வளர்ந்து வருகையில், சுருதிமைந்தனுகிய உத்தமனைப்பல ஆபரணமணிவித்து உத்தானபாதன் தன் மடியின்பேரில் வைத்துக்கொண்டு சிங்காதனத்தி லிருக்கக்கண்ட சுநீதி தன்மகன் துருவனையும் அலங்காரஞ் செய்துவிடுக்க, அவன் தந்தையிடஞ்சேர்ந்து சிங்காதனத்துஏற எத்தனிக்கையில், சுருதி யென்பவள்கண்டு தடுத்து „குழந்தாய் ! நீ சிங்காதனத்தி லேறப்படாது. என்மைந்தனே அதற்குத் தக்கவன்,, என விலக்க, துருவன் தன் தாய்பாற்சென்று நடந்ததை முறையிட்டு வருந்தி அவள் பட்டமகிஷியாகலின் அவள் மைந்தனுக்குள்ள பாக்கியம் உனக்கு இல்லையென்று சொல்லிப் புலம்பக்கேட்டு, உடனேதாயைத்தேற்றி விடுத்து,உலகஇச்சையை வெறுத்து "நிலைபேருகிய செல்வத்தை யடைவேன்" என்று விடைகொண்டு, தபோவனத்தை யடைந்து அருந்தவஞ்செய்துபெறுதற்கரிய பெறும்பேருகிய துருவசக்கரத்தைக் கைப்பற்றி மேருமலையி னுச்சியில் வீற்றிருக் கின்றனன். துருவசக்கரத்தில் நவக்கிரகமுதலியனவும் இருபத்தேழுநக்ஷத்திரங்களும் பன்னிரண்டு இராசிகளும் அமைக்கப்பட்டுள்ளன வென்றும், அது ஒரு மழையறிகருவி யென்றுங் கூறுவர். இஃதோர் உயர்பதவி யெனக்கொள்க.

அண்டம் - துருவசக்காத்துக் குட்பட்டது. பகிரண்டம்-வெளி அண்டம்; அது துருவசக்காத்துக்கு வெளிபட்டது. துரியம்-சீவன் முத்தர்க்குரியபதம். அது "அல்லையீ தல்லையீ தெனமறை களுமன்மைச் சொல்லினுற் றுதித்திளைக்கு மிச்சுந்தரன்" என்பதனுனுணர்க. சுருவி - அகக்சருவி புறக்கருவிகள் காணங்கள் - மணம் முதலிய அந்தக் கரணங்கள்.

"தோற்றமுண்டேல் மரணமுண்டாம்" என்ற மேலோர்சொற்படி நாமரூபப் பொருள்கள் அத்தனையும் அழிவும் இயல்பின ஆயினும் காண்கின்றமையால் மெய்யே என்பாரை மறுக்க, "கண்டனவெல்லாம் அல்லவென்று கண்டனைசெய்து" என்றுர். கருவிகரணங்கள் ஒய்வதற்குக் கண்மூடியிருத்தல் காரணமாதலாலும், அவ்வாருநிற்கினும், கருவி கரணங்கள் ஒய்தல் அருமையாதலாலும், அவ்வாறு நில்லாமைக்குக் காரணம் ஊழ்வினை யாதலாலும், "கருவிகரணங்களோயக் கண்மூடி யொருகண மிருக்கவென்றுல் பாழ்த்த கர்மங்கள் போராடுதே" என்றுர். (௬)

8. சந்ததமு மெனதுசெய னினதுசெய லியானெனுந்
தன்மைநினை யன்றியில்லாத்
தன்மையால் வேறலேன் வேதாந்த சித்தாந்த
சமரச சுபாவமிதுவே
இந்தநிலை தெளியநா னெக்குருகி வாடிய
வியற்கைதிரு வுளமறியுமே
இந்நிலையி லேசற் றிருக்கவென் றான்மடமை
யிதசத்ரு வாகவந்து
சிந்தைகுடி கொள்ளுதே மலமாயை கன்மந்
திரும்புமோ தொடுவழக்காய்ச்
சென்மம்வரு மோவெனவும் யோசிக்கு தேமனது
சிரத்தையெனும் வாளுமுதவிப்
பந்தமற மெய்ஞ்ஞான தீரமுந் தந்தெனைப்
பாதுகாத் தருள்செய்குவாய்
பார்க்குமிட மெங்குமொரு நீக்கமற நிறைகின்ற
பரிபூரணானந்தமே.

(பதவுரை.) சந்ததமும் - எக்காலமும், எனதுசெயல் -எனதுதொழில்கள், நினது செயல் - உனது தொழில்களே, யான் என்னும் தன்மை - நான் என்கிற தன்மை, நின்னை அன்றி இல்லாத்தன்மையால் - உன்னை யல்லாமல் (வேறு) இல்லாத தன்மையினால், வேறு அல்லேன் - நான் உன்னைவிட வேறல்லாதவனாய் இருக்கிறேன், இதுவே - இந்தத் தன்மையே, வேதாந்த சித்தாந்தசமரச சுபாவம்-வேதாந்த சித்தாந்தங்களின் சமரசமான இயற்கை ஆகும், இந்த நிலைதெளிய - இந்த நிலைமையை அறிய, நான் நெக்கு உருகிவாடியஇயற்கை-நான் மனம் நெகிழ்ந்து உருகிவாடிய தன்மையை, திருவுளம் அறியுமே -தேவரீரது திருவுளம் அறிந்திருக்குமே, இந்நிலையிலே - இந்த நிலையிலே - தானே, சற்று இருக்கவென்றால் - சற்றுநேரம் இருக்கலாமென்றால், மடமை - அறியாமையானது, இதசத்ருவாக வந்து-இதத்தைச் செய்கின்ற விசுவாச காதகனாகியபகைவனைப்போல வந்து, சிந்தைகுடி கொள்ளுதே-என்எண்ணத்தில் வாசஞ் செய்கின்றதே, மலம் மாயை கன்மம்-மலமாயா கன்மங்கள், திரும்புமோ எனவும்-திரும்பவும் வந்துவிடுமோ வென்றும், தொடுவழக்காய் -தொடர்வழக்காகி-சென்மம் வருமோ எனவும் - பிறவி உண்டாமோ என்றும், மனது யோசிக்குதே, என்மனமானது எண்ண மிடுகின்றதே, (ஆதலால்) சிரத்தை என்னும் -

சிரத்தையென்று சொல்லப்பட்ட, வாளும் உதவி—வாளையுங்கொடுத்து, பந்தம் அறபிறவித்தொடக்கு ஒழிய, மெஞ்ஞானதீரமும் தந்து - மெய்ஞ்ஞானமாகிய தைரியத்தையுங் கொடுத்து, என்னைப்பாதுகாத்து அருள் செய்குவாய் - என்னை இரக்ஷித்தருள்வாய், பார்க்குமிடம், எ - று.

மானுடர் சூத்திரப்பதுமைபோல விளங்குதலின் அந்தப்பதுமை யசைவிக்குஞ் சூத்திரிகன் எக்காலத்தும் இறைவனாதலால், "சந்ததமு மெனது செயனினது செயல்' என்றும், அவன் சர்வவியாபகத்தில்உயிர்கள் வியாப்பியமாகலின் யானெனுந்தன்மை நினையன்றியில்லாத் தன்மையால் "வேறலேன்" என்றும், இதுவே வேதாகமங்களின் உட்கிடையாதலால் "வேதாந்த சித்தாந்த சமரசசுபாவமிதுவே" என்றும், இந்நிலையிலழுந்தி சிந்தித்துத் தெளியப்பழகியது திருவருள் வசத்ததாதலின் "இந்த நிலைதெளிய நானெனக் குருகிவாடிய வியற்கை திருவுளமறியுமே" என்றும், இந்நிலையிலே நிற்கையில் பழயவாசனைப் பழக்கத்தால் அறியாமைவந்து தாக்கலின் "இந்நிலையிலேசற்றிருக்க வென்றால் மடமை இதசத்ருவாகவந்து சிந்தைகுடி கொள்ளுதே" என்றும், அறியா கன்மங்கள் சேரலின் "மலமாயாகன்மந் திரும்புமோ தொடுவழக்காய்" என்றும்,பிறவி மாயைகாரணமாகத் தோன்றுதலின் "சன்மம்வருமோவெனவும் யோசிக்குதே" என்றும், "அதுகேள்விமுயலலாகிய சிரத்தையென்னும் வாளினாலல்லது களையப்படாதாகலின், சிரத்தையெனும் வாளுமுதவி பாதுகாத்தருள்செய்குவாய்" என்றும் கூறினார்.

மலமாயை கன்மமென்பன மூவகைப் பாசவிசேடங்களை. சிரத்தையெனும்வாளென்றது தீரமில்லாதவர்க்கு வாளிருப்பினும் 'வயப்படை மற்றென்பயக்கு மாணல்லவர்க்கு" என்னுங் குமரகுருபரசுவாமிகள் திருவாக்கின்படியே அதுபயன்படாதாதலின். இதசத்ரு - புறத்தில் நட்புள்ளவன்போல் நடித்து அகத்தில் விரோதமுள்ள பகைவன். புறநட்டகம் வேர்ப்பார் நச்சுப்பகைமை என்றாற்போல. தொடுவழக்கு - தீராவழக்கு. வேதாந்த சித்தாந்த சமரச சுபாவம் - வேதாந்தசித்தாந்தங்களை ஒரு நிகரனவாகக்கொள்ளு மியற்கை.

"ஆட்டுவித்தாலாரொருவராடாதாரே
யசைவித்தாலாரொருவரசையாதாரே,, என்றும்,
"என்செயலாவதியாதொன்றுமில்லையினித்தெய்வமே
உன்செயலேயென்றுணரப்பெற்றேன்"

என்றும்கூறிய' மேலோர்போல, யெனதுசெயல், நினதுசெயல்,, என்றார்.

9 பூதலய மாகின்ற மாயைமுத லென்பர்சிலர்
பொறிபுல னடங்குமிடமே
பொருளென்பர்சிலகரண முடிவென்பர் சிலர்குணம்
போனவிட மென்பர்சிலபேர்
நாதவடி வென்பர்சிலர் விந்துமய மென்பர்சிலர்
நட்டநடு வேயிருந்த
நாமென்பர் சிலருருவ மாமென்பர் சிலர்கருதி
நாடிலரு வென்பர்சிலபேர்
பேதமற வுயிர்கெட்ட நிலயமென் றிடுவர்சிலர்
பேசினரு ளென்பர்சிலபேர்
பின்னுமுன் னுங்கெட்ட சூனியம தென்பர்சிலர்
பிறவுமே மொழிவரிவையாற்
பாதரச மாய்மனது சஞ்சலப் படுமலாற்
பரமசுக நிஷ்டைபெறுமோ
பார்க்குமிட மெங்குமொரு நீக்கமற நிறைகின்ற
பரிபூரண னந்தமே.

(பதவுரை.) பூதலயம் ஆகின்ற - பூதஅடக்க முண்டாவதற்குத் தானமாகிய மாயை - மாயையே, முதல் - என்பர் - முதற்பொருளென்பார்கள், சிலர் சிலபேர், பொறிபுலன் அடங்கும் இடமே பொருள் என்பர் - ஐம்புலன்களும் அவற்றின் விஷயங்களும் அடங்குமிடமே பொருளென்பார்கள், சிலர் - சிலபேர் கரணமுடிவு என்பர்-அந்தகரணநாசமே (பொருள்) என்பார்கள், சிலர்-சிலபேர் குணம்போன இடம் என்பர் - முக்குணங்களும் நசித்த இடமேபொருளென்பார்கள், சிலர் - சிலபேர், நாதவடிவு என்பர்-நாதரூபமே பொருளென்பார்கள், சிலர் - சிலபேர், விந்துமயம் என்பர் விந்துரூபமே பொருளென்பார்கள், சிலர் - சிலபேர், நட்டநடுவே இருந்த நாம் என்பர்-நடுமையத்திலிருந்த (ஆன்ம வஸ்துவாகிய) நாமே பொருளென்பார்கள், சிலர்-சிலபேர், உருவம் ஆம் என்பர் - உருவமே பொருளென்பார்கள், சிலர் - சிலபேர், கருதி நாடில் அருவு என்பர் - நன்றாக ஆலோசிக்குமிடத்தில் அருவமே பொருளென்பார்கள், சிலர் - சிலபேர், பேதம் அற உயிர்கெட்ட நிலயம் என்றிடுவர் - வேற்றுமை நீங்கும்படி சீவபோதம் நசித்த இடமே பொருளென்பார்கள் சிலபேர் - சிலபேர், பேசின் அருள் என்பர் - சொல்லுமிடத்துத்திருவருளே பொருளென்பார்கள், சிலர் பின்னுமுன்னுங்கெட்ட சூனியம் என்பர் - சிலபேர்பின்னும்

முன்னுமில்லாத பாழே பொருளென்பார்கள், (சிலர்) பிறவும்மொழிவர்-சிலர்-வேறுநிலைகளையும் பொருளென்பார்கள், இவையால்-இவற்றால், மனது பாதரசமாய் சஞ்சலப்படுமேலால் - மனமானது பாதரசம்போல (துன்புற்று) சலிக்குமல்லாமல், பரமசுக நிஷ்டை பெறுமோ - மேலான ஆனந்த நிஷ்டையை அடையுமோ, பார்க்குமிடம் எ-று.

பொறி - மெய், வாய், கண், மூக்கு, செவி என ஐந்து. புலன்-ஸ்பரிசம் ரசம், ரூபம், கந்தம், சப்தம் என ஐந்து. கரணம் - மனம் புத்தி, சித்தம், அகங்காரம் என நான்கு. முக்குணம் - ராஜஸம், தாமஸம், சாத்துவிகம் என்பன. பாதரசம் - சூதம். சூனியம் - வெட்டவெளி. (சு)

10. அந்தகா ரத்தையோ ரகமாக்கி மின்போலென்
னறிவைச் சுருக்கினவரார்
அவ்வறிவு தானுமே பற்றினது பற்றா
யழுந்தவுந் தலைமீதிலே
சொந்தமா யெழுதப் படித்ததார் மெய்ஞ்ஞான
சுகநிஷ்டை சேராமலே
சோற்றுத் துருத்தியைச் சதமெனவு முண்டுண்டு
தூங்கவைத் தவரார்கொலோ
தந்தைதாய் முதலான வகிலப்ர பஞ்சந்
தனைத்தந்த தெனதாசையோ
தன்னையே நோவனோ பிறரையே நோவனோ
தற்கால மதை நோவனோ
பந்தமா னதுதந்த வினையையே நோவனோ
பரமார்த்த மேதுமறியேன்
பார்க்குமிட மெங்குமொரு நீக்கமற நிறைகின்ற
பரிபூர ணானந்தமே.

(பதவுரை.) அந்தகாரத்தை - (அஞ்ஞானமாகிய) இருளை, ஒரு அகம் ஆக்கி - ஒரு வீடாக்கி, மின்போல் - மின்னலைப்போல, என் அறிவைச் சுருக்கினவர் ஆர் - என்னறிவைச் சுருங்கச்செய்து (அதனிடத்து) அமைத்து வைத்தவர் யார், அவ்வறிவுதானும் - அந்த அறிவும், பற்றினது பற்றாய் அழுந்தவும்-தான்பிடித்ததையே ஆதா வாகக்கொண்டு அதில் மூழ்கவும், தலைமீதிலே - யென் சிரத்தின்பேரில், சொந்தமா யெழுத-சொந்தமாக யெழுதிவைப்பதற்கு, படித்தது ஆர் - கற்றது யார், மெய்ஞ்ஞான சுகநிஷ்டை சேராமல் - உண்மையாகிய ஞானானந்தங்களுக் கேதுவாகிய நிஷ்டையைப் பொருந்தாமல்

சோற்றுத் துருத்தியை - சோற்றுத் துருத்தியாகிய தேகத்தை, சதம்எனவும் சாசுவதமென்று நினைத்தும், உண்டு உண்டு - பலகாற்புசித்து, தூங்கவைத்த வர் ஆர் - உறங்கச்செய்தவர் யார், தந்தைதாய் முதலான - பிதா மாதா முதலா கிய, அகிலப்ரபஞ்சம்தனை-பிரபஞ்ச முழுவதையும், தந்தது-உண்டாக்கின தற் குக் காரணம், எனது ஆசையோ - என்விருப்பமோ, தன்னையே நோவனோ- என்னை நானே வெறுத்துக் கொள்வேனோ, பிறரையே நோவனோ - மற்றவர் களை வெறுத்துக் கொள்வேனோ, தற்காலமதை நோவனோ - (இவைகளெல் லாம் நிகழ்தற்கிடமாகிய) தற்காலத்தை வெறுத்துக் கொள்வேனோ, பந்தமான துதந்த வினையையே நோவனோ- பிறவித்தளையை யுண்டாக்கின பூர்வகன்மங் களைத் தான்நொந்து கொள்வேனோ, பரமார்த்தம் ஏதும் அறியேன் - மேலான பொருள் சிறிதும்உணர்ந்திலேன், பார்க்குமிடம்—எ-று.

துருத்தி என்பதற்குத் தோற்பை என்றுபொருள். உடலாகிய தோற்பை நிரம்பச் சோறுகறி முதலியவைத்து அடைக்கப்படுதலின் அதனை சோற்றுத் துருத்தி,, எனக்கூறினர். இதைச் ,,சோற்றுலெடுத்தசுவர்,,எனக்கூறும் உல கவழக்கத்தானறிக.

அவாவென்ப வெல்லாவுயிர்க்கு மெய்ஞ்ஞான்றும் - தவாஅப் பிறப்பீனும் வித்து, என்றபடி அவாவின்காரணமாகத் தந்தைதாயர் முதலிய சகலபிரபஞ்ச ங்களும் தோன்றலின் 'தந்தைதாய் முதலான வகிலப்ரபஞ்சந் தனைத்தந்தெ னதாசையோ' என்றார், இவ்வாறு அவாவினால் இடர்ப்படுகின்றவர் அநுபவத் தால் தான், பிறர், காலம், வினையாகிய இவற்றுள் யாரைநோவேனென்பார்'' த ன்னையேநோவனோ பிறரையேநோவனோ தற்காலமதைநோவனோ எனப் பல படக்கூறினார், (எ)

11. வாரா தெலாமொழிய வருவன வெலாமெய்த
மனதுசாட் சியதாகவே
மருவநிலை தந்ததும் வேதாந்த சித்தாந்த
மரபுசம ரசமாகவே
பூராய மாயுணர வூகமது தந்ததும்
பொய்யுடலை நிலையன்றெனப்
போதநெறிதந்ததுஞ் சாசுவத வானந்த
போகமே வீடென்னவே
நீராள மாயுருக வுள்ளன்பு தந்ததும்
நின்னதரு ளின்னுமின்னும்
நின்னையேதுணையென்ற வென்னையே காக்கவொரு
நினைவுசற் றுண்டாகிலோ

பாராதி யறியாத மோனமே யிடைவிடாப்
பற்றாக நிற்கவருள்வாய்
பார்க்குமிட மெங்குமொரு நீக்கமற நிறைகின்ற
பரிபூர ணானந்தமே.

(ப – ரை.) வாராத எலாம்ஒழிய-கைவாராதவை யெல்லாம் கைவாராமலே யொழிக, வருவன எல்லாம் எய்த-கைவருவன எல்லாம் கைவந்தேதீர்க, (என்று) மனது சாட்சியதாக மருவ - மனமானது நடுவுநிலைமையான சாட்சியாகப் பொருந்தும்படி, நிலைதந்ததும் - (மேலான) நிலையைக் கொடுத்ததும், வேதாந்தசித்தாந்த மரபுசமரசமாக - வேதாந்த மரபும் சித்தாந்தமரபும் (ஆகிய இவை) சமானமாயிருக்கிறதாக, பூராயமாயுணர-ஆதியந்தமா யறியும்படி, ஊகமது தந்ததும் - ஊகத்தைக் கொடுத்ததும், பொய்உடலை நிலை அன்றெனஎன - பொய்யாகிய தேகத்தை நிலையுள்ள தல்லவென்று தீர்மானிக்க போதநெறி தந்ததும்- ஞானமார்க்கத்தை அனுக்கிரகித்ததும், சாசுவத ஆனந்தபோகமே வீடென்ன- நித்தியாநந்தாநுபவமே மோக்ஷமென்று, நீராளமாய் உருக - நீரின் தன்மையா யுருகும்படி, உள்ளன்பு தந்ததும் - மனதில் அன்பைக் கொடுத்ததும், நின்னது அருள்-உனது திருவருளென, இன்னும் இன்னும் - மேன்மேலும். நின்னையே துணைஎன்ற-உன்னையே துணையாகப்பற்றின, என்னையேகாக்க - என்னையே காப்பதற்கு, ஒருநினைவு- ஒப்பற்றதிருவுளம், சற்று உண்டாகிலோ-சிறிதுஉண்டானால், பாராதி அறியாதமோனமே-நிலமுதல் (நாதமிறுதியாகக் கிடந்த)தத்துவங்களால் அறியப்படாத மௌனநிலையே, இடைவிடா பற்று ஆக நிற்க- இடையறாத பற்றுக் கோடாகக்கொண்டு (நான் அந்த நிலையில் நழுவாது)நிற்கும்படி, அருள்வாய்-கிருபைசெய்வாய், பார்க்குமிடம்.—எ - று.

“வாராதெலாமொழிய வருவனவெலாமெய்த” என்றது“வருந்தியழைத்தாலும் வாராதவாரா பொருந்துவன போமினென்றாற் போகா” என்றும், “அளந்தனபோகமவரவராற்றால் விளங்காய்திரட்டினாரில்லை களங்கனியைக் காரெனச் செய்தாருமில்” என்றுங்கூறிய மேலோர் திருவாக்குகளானறிக. மனதைச் சாக்ஷிவைத்தாலன்றி அது துணிவெய்தாததலின் “மனதுசாட்சியதாகவே” என்றும், தான் அடையநின்றது சிவானுபவச் செல்வமாதலாலும், அவ்வுயர்நிலை வேதாந்த சித்தாந்த சமரசமாதலாலும், அச்சமரசம் மெய்யுணர்வால் அடையவேண்டுவ தாதலாலும், அம்மெய்யுணர்வால் உடல் பொய்யென்த்தோன்றுமாதலாலும், பிரபஞ்சம் நிலையல்லவெனத் தோன்றியதால் முத்தி கைவருமாதலாலும், அதுகைகூட மெய்யன்பே உருவமாகக் கரைய வேண்டுதலாலும் இவையாவும் இறைவன் திருவருள் வசத்ததாதலாலும், “மனது சாட்சியதாகவே நீராளமாயுருக வுள்ளன்பு தந்ததும் நின்னதருள்” என்றார், “பாராதி யறியாத மோனமே யிடையறாப்பற்றாக நிற்கவருள்வாய்” என்றது இன்னும் அடியேனைப்பிறவி யடையாமற் காக்கவேண்டுமானால், தத்துவாதீதமான மௌனநிலை தந்தருள வேண்டுமெனப் பிரார்த்தித்ததாம். (அ)

2. ஆழாழி கரையின்றி நிற்கவிலை யோகொடிய
வாலமமு தாகவிலையோ
அக்கடலின் மீதுவட வனனிற்க வில்லையோ
வந்தரத் தகிலகோடி
தாழாம னிலைநிற்க வில்லையோ மேருவுந்
தனுவாக வளையவிலையோ
சப்தமே கங்களும் வச்ரதர ஞணையிற்
சஞ்சரித் திடவில்லையோ
வாழாது வாழவே யிராமனடி யாற்சிலையு
மடமங்கை யாகவிலையோ
மணிமந்த்ர மாதியால் வேண்டுசித் திகளுலக
மார்க்கத்தில் வைக்கவிலையோ
பாழான வென்மனங் குவியவொரு தந்திரம்
பண்ணுவ துனக்கருமையோ
பார்க்குமிட மெங்குமொரு நீக்கமற நிறைகின்ற
பரிபூர ணனந்தமே.

(ப - ரை.) ஆழ் ஆழி கரையின்றி நிற்க இலையோ - ஆழ்ந்த சமுத்திரமானது அணை யில்லாமலே தன்னளவு கடவாது அடங்கியிருக்க வில்லையோ, கொடிய ஆலம் அமுது ஆக இலையோ-கொடிய விஷமானது (சிவபெருமானுக்கு) உணவாகி யமையவில்லையோ, அக்கடலின்மீது - அந்தச் சமுத்திர மத்தியில், வடவனல்நிற்க இல்லையோ - வடவைத்தீயானது அவியாமல் நிலைபெற்றிருக்க வில்லையோ, அந்தரத்து-ஆகாயத்தில், அகிலகோடி-அண்டகோடிகள், தாழாமல் நிலைநிற்கஇல்லையோ- நிலைகுலையாமல் ஒரே தன்மைத்தாய் இருக்கவில்லையோ, மேருவும் தனுஆக வளையஇலையோ - மேருமலையும் சிவபெருமானால் வில்லாக வளைக்கப்பட வில்லையோ, சப்தமேகங்களும் - மேகங்களேழும், வச்ரதரன் ஆணையில் - வச்சிராயுதத்தைத் தாங்கிய இந்திரனது ஆக்கினையி லடங்கி, சஞ்சரித்திட இல்லையோ - வாழவில்லையோ, வாழாது வாழ - வாழாமல் வாழும்படி, இராமன் அடியால் - ஸ்ரீராமனது பாததூளியால், சிலையும் - பாறையும், மடமங்கை ஆக இல்லையோ - இளம்பெண்ணாகிய அகலிகையாக ஆகவில்லையோ, மணிமந்த்ரம் ஆதியால்-மணிமந்த்ரம் முதலானவைகளால், வேண்டுசித்திகள் அவரவர் விரும்பின இஷ்டசித்திகள், உலகமார்க்கத்தில் வைக்க இல்லையோ, லௌகிகநெறியில் ஸ்தாபிக்கப்பட் டிருக்கவில்லையோ, பாழ் ஆன என் மனம் குவிய-பாழாகிய என்மனது உள்ளுக்குள்ளே குவியும்படி, ஒருதந்திரம் பண்ணுவது - ஒரு உபாயஞ்செய்வது, உனக்கு அருமையோ- (எல்லாவற்றிற்கும் வல்லதலைவனாகிய) உனக்கு அருமையாகுமோ, பார்க்குமிடம்.—எ-று.

வடவை - பெட்டைக் குதிரையின் முகம்போன்ற வடிவாகிய தீ. கடவுளால் படைக்கப்பட்டுக் கடலினடுவில் நீரானது தன்னெல்லை கடவாதமைந்து நிற்கும்படி யமைத்து வைக்கப்பட்டது. சப்தமேகங்கள் - சம்வர்த்தம், ஆவர்த்தம், புட்கலாவர்த்தம், சங்காரித்தம், துரோணம், காலமுகி, நீலவர்ணம் என்பன. இவை முறையே மணியையும், நீரையும், பொன்னையும், பூவையும், மண்ணையும், கல்லையும், நெருப்பையும் பொழிவனவாம். மணி-குளிகை.

## ஆலம் அமுதானதாவது.

தேவர் சிவாக்கினைபெறுமல் க்ஷீராப்திமர்த்தனஞ் செய்தபொழுது மந்த்ரகிரியாகிய மத்திற்குப்பூட்டிய வாசுகியென்னும் பாம்பு தேவாசுரர்தன்னைத்தலைப்புறத்தும் வாய்புறத்தும் பற்றியீர்க்கும் வருத்தமாற்றாது தனது வாய்தோறும் விஷஞ்சொரிய, அவ்விஷம் ஒல்லெனப்பரந்து உலக முழுவதும் தகித்தழிக்க எத்தனிக்கையில் தேவர் திருக்கைலையை யடைந்து சிவபெருமான்பால் விண்ணப்பஞ்செய்து அதனை யடக்குமாறு முறையிட, சிவபிரான் தமதருகிருந்த சுந்தரரால் அவ்விஷத்தைத்தருவித்து உட்கொண்டு தேவர் துயரைத்தொலைத்தனரென்பது புராணசரிதம்.

## மேருதனுவாக வளைந்ததாவது.

திரிபுரவாசிகள் செய்த துன்பத்தைச் சகியாத தேவர்கள் திருமாலைத் தமக்குத் தலைவராகக் கொண்டு, சிவபெருமான்பால் முறையிட்டு அவர்களாலெய்துந் துன்பத்தை யகற்றும்படி வேண்ட, இறைவர் "போர்க்குரிய கருவிகளைச் சித்தஞ்செய்க" என, தேவர்கள் அவ்வாறே பூமியே தேராகவும், சூரிய சந்திரர் சக்கரமாகவும், வேதங்கள் நான்கும் நான்கு குதிரைகளாகவும், பிரமன் இரதசாரதியாகவும், பிரணவமே குதிரை தூண்டுங் கோலாகவும், மற்றையதேவர்கள் பிறகருவியாகவும் அமைத்து, மேருமலையை வில்லாகவும், ஆதிசேடன் நாணாகவும், திருமாலே பாணமாகவும், வாயு அம்பின் சிறகாகவும், அக்கினி அம்பின் கூர்வாயாகவும் அமைத்துச் சிவபெருமானுக்கு அறிவிக்க, இறைவர் அதிலேறி ஆயுதப்பிரயோகம் செய்யாமல் திரிபுரத்தைச் சிரித்தெரித்தனர். என்பது - இதனை,

"மேருவிலாயதிணைரவாயொருவெங்கணைமாலரியாய்
விரிதலையுலகந்தேராயதிலுறும்குசகடிருசுடராய்
ஆரணநாலும்பரியாயம்புயனமைவுறுசாரதியா
யதினீயுற்றிகலழியாமுப்புரமட்டிமெந்நாளிற்
சீருறுமூவர்களழியாதுன்னடிசேராநின்றனரால்" என்பதனுணர்க

## இராமனடியாற்சிலை மடமங்கையானது.

கௌதமமுனிவர் மனைவியாகிய அகலிகையின் ரூபத்திற்களிகூர்ந்த இந்திரன் அவளைவஞ்சித்து கௌதம ருருவேற்றுப்புணர்ந்து செல்லுகையில் அவர்கண்டு இந்திரனைநோக்கி "நீஒருபெண் குறியை விரும்பினதால் உனதுஉட

ல்முழுதும் பெண்குறியடைக." எனச் சபித்து, அகலிகையை "பாறையாக' எனச் சபித்தனர், இந்திரன் உடல் முழுதும் பெண்குறி யடைந்து தனதுலகு சேர தேவர்கண்டு அவ்விந்திரனுடன் கௌதமமுனிவரைப் பணிந்து சாபத்தைவிலக்கும்படி வேண்ட, "அவை கண்களாக விளங்குக" என அகற்றினர். அகலிகை தன் நாயகனைப்பணிந்து "என் பாறைவடிவு எப்பொழுது அகலும் என, "திருமால் தசரதபுத்திரராய் இராமாவதாரஞ்செய்வார் அவர் பாததூளி உன்மேல்படும் அக்காலத்தில் அகலும்" என்றனர். அவ்வாறே ஸ்ரீராமர் விஸ்வாமித்திர முனிவருடன் அவ்வழிவருகையில் அவர் பாததூளியால் அகலிகை பெண்ணுருவடைந்து கௌதமருடன் கூடிவாழ்ந்தனள். என்பது. (கூ)

13. ஆசைக்கொ ரளவில்லை யகிலமெல் லாங்கட்டி
யாளினுங் கடன்மீதிலே
ஆணைசெல வேநினைவ ரளகேச னிகராக
வம்பொன்மிக வைத்தபேரும்
நேசித்து ரசவாத வித்தைக் கலைந்திடுவர்
நெடுநா ளிருந்தபேரும்
நிலையாக வேயினுங் காயகற் பந்தேடி
நெஞ்சுபுண் ணாவரெல்லாம்
யோசிக்கும் வேளையிற் பசிதீர வுண்பது
முறங்குவது மாகமுடியும்
உள்ளதே போதுநா னானெனக் குளறியே
யொன்றைவிட் டொன்றுபற்றிப்
பாசக் கடற்குளே வீழாமன் மனதற்ற
பரிசுத்த நிலையையருள்வாய்
பார்க்குமிட மெங்குமொரு நீக்கமற நிறைகின்ற
பரிபூரணானந்தமே.

(ப-ரை.) அகிலம் எல்லாம் - உலகங்கள் எல்லாம், கட்டி ஆளினும் - தன்வசப்படுத்தி அரசுசெய்தாலும், கடல்மீதில் ஆணைசெல்ல நினைவர் - சமுத்திரத்தின் மீதும் தமது ஆக்கினைசெல்லும்படியாக விரும்புவார்கள், அளகேசன் நிகர் ஆக-அளகாபுரிக்கரசனான குபேரனைப்போல, மிக அம்பொன் வைத்தபேரும்- மிகுதியாக சிறந்த பொன்னை (தம்மிடத்தில்) வைத்திருக்கிறவர்களும், ரசவாதவித்தைக்குநேசித்து அலைந்திடுவர் - இரசவாத வித்தையை விரும்பி யுழல்வார்கள், நெடுநாள் இருந்தபேரும் - (இவ்வுலகத்தில்) நீடூழிவாழ்ந்த விருத்தர்களும், இன்னும் நிலையாக - மேலும் (இவ்வுடம்பு) நிலைத்திருக்கும்படி, காயகற்பம்தேடி-காயசித்திக்குரிய கற்பமுறைகளைத் தேடி,(அவைகிடைக்கப்பெறுமையால்) நெஞ்சுபுண் ஆவர்-மனம்புண்பட்டு வருந்துவார்கள்ஆசை

க்கு ஓர் அளவுஇல்லை -(ஏனெனில்) ஆசைக்குஒரு எல்லை இல்லை, எல்லாம் - இவைகளையெல்லாம், யோசிக்கும் வேளையில் - ஆலோசிக்குங்காலத்தில், பசிதீரஉண்பதும் - பசிநீங்கப்புசிப்பதும், உறங்குவதும்ஆக - தூங்குவதுமாகவே முடியும் - முடிவுபெறும், (ஆதலால்) உள்ளதே போதும் - எனக்குத்தற்காலம் இருப்பதே அமையும், நான் நான் என குளறி - நான் நான் என்றுஅகங்கரித்துளறி, ஒன்றைவிட்டு ஒன்றுபற்றி - ஒன்றைவிட்டு ஒன்றைத்தொட்டு, பாசக்கடற்குள்ளே ஆசையாகிய சமுத்திரத்தில், வீழாமல்-வீழ்ந்து வருந்தாமல் மனதுஅற்ற - மனமிறந்த பரிசுத்தநிலையை - பரிசுத்தமாகிய மௌன நிலையாகிய (மரக்கலத்தை), அருள்வாய்-கிருபைசெய்வாய், பார்க்குமிடம்—எ-று.

கடல்மீதில் ஆணைசெலுத்தினது ஸ்ரீராமபிரான் முதலியவரிடத்துக் காண்க. கட்டி-கைக்கொண்டு.

ஆசையே பிறவிக்கு வித்தாதலாலும் உயிர்க்குணமாதலாலும் "ஆசைக்கோரளவில்லை" என்றும், நிலம் பொன் பெண் முதலிய ஆசைகளில் ஒருவன் ஏக சக்ராதிபதியாய் பூமி அரசுமுழுதும் புரியினும் மேலும் அரசு செய்ய நினைப்பானாதலாலும், ஒருவன் குபேரன்போலப் பெருஞ் செல்வமடைந்திருப்பினும் மேலும் இரசவாதஞ்செய்து பொன்செய்ய நினைப்பானாதலாலும், "மனிதர்க்கு வயது நூறல்லதில்லை" என்றபடி ஏறக்குறைய நூறுவயதிருந்தவனும் மேலுஞ் சீவித்திருக்க முயல்வானாதலாலும் "அகிலமெல்லாங் கட்டியாளினும் * * * காயகற்பந்தேடி நெஞ்சுபுண்ணவர்" என்றார்.

நெஞ்சுபுண்ணுதல் தாம்கருதியபடி மேலும் அடையப்பெறாமல்.

இஃதிவ்வாறிருக்கக் கடைசியில் யோசித்துப் பார்த்தால் 'அத்தமும் வாழ்வுமகத்துமட்டே, என்ற மேலோர் சொற்படி தனக்கோர் பிரயோசனமற்றதாய்முடியுமாதலின் "உண்பதும் உறங்குவதுமாக முடியும்" என்றும், கிடைத்தவரையில் திருப்தியடையவேண்டுமென்பார்"உள்ளதேபோதும்" என்றும்,கூறினர். மற்றவை வெளிப்படை. அளகேசன்-குபேரன்-இவனை நவநிதிச்செல்வனென்பர்.

பொருள்வணக்கம்.

அறுசீர்க் கழிநெடிலடி யாசிரிய விருத்தம்.

14. நித்தியமாய் நிர்மலமாய் நிட்களமாய் நிராமயமாய்
நிறைவாய் நீங்காச்
சுத்தமுமாய்த் தூரமுமாய்ச் சமீபமுமாய்த் துரியநிறை
சுடரா யெல்லாம்

வைத்திருந்த தாரகமா யானந்த மயமாகி
மனவாக் கெட்டாச்
சித்துருவாய் நின்றவொன் றைச் சுகாரம்பப்பெருவெளியைச்
சிந்தை செய்வாம்.

(ப - ரை.) நித்தியமாய் - எப்பொழுதும் உள்ளதாகி, நிர்மலமாய்-மலமற்றதாகி, நிஷ்களமாய் - உருவற்றதாகி, நிராமயமாய்-நோயற்றதாகி, நிறைவாய்-பூரணமாகி, நீங்கா சுத்தமுமாய் - நிறையுறு புனித முடையதாகி, தூரமும் ஆகி, சமீபமும்ஆய்-சமீபமும்ஆகி, துரியநிறை சுடர் ஆய் - துரியபதத்தில் பூரணமாயிருக்கின்ற சோதியாகி, எல்லாம் வைத்திருந்த தாரகம் ஆய் - எல்லாப் பொருளையும் தன்னகத்தில் அடங்கியிருந்த ஆதாரப்பொருளாகி, ஆநந்த மயம் ஆகி - சுகசொரூபமாகி, மனவாக்கு எட்டாசித்து உருவாய் - மனோவாக்குகளால் எட்டப்படாத ஞானரூபமாகி, நின்ற - நிலைபெற்றிருந்த, ஒன்றை - ஒரு பொருளை, சுகாரம்பப்பெருவெளியை - ஆநந்தத்தொடக்கத்தையுடைய பேராகாயத்தை, சிந்தைசெய்வாம் - தியானிப்போம் (யாம்), எ-று.

மெய்யுணர்வாற் காணப்படுவதாதலாலும் அநாதியே மலநீக்கமுடைய தாதலாலும், மலநீக்கமுடையாராற் காணப்படுவ தாதலாலும், ஜநநமரணங்களற்ற தாகலாலும், யாண்டும் பரிபூரணமாதலாலும், என்றுந் தூய்மையுடைய தாதலாலும், "நித்தியமாய் நிர்மலமாய் நிட்களமாய் நிராமயமாய்நிறைவாய் நீங்காச் சுத்தமுமாய்" என்றும், மெய்யன்பிலார்க் கெட்டாத தாதலாலும், மெய்யன்புடையார்க்குக் கிட்டப்படுவதாதலாலும், துரியநிலையில் விளங்குவ தாதலாலும், "தூரமுமாய்ச் சமீபமுமாய்த் துரியநிறைசுடராய்" என்றும், சகலசேதனசேதனங்கட்கு மிடமாதலின் "எல்லாம் வைத்திருந்த தாரகமாய்" என்றும், சுகரூபமாய்த் தோன்றுதலின் "ஆநந்தமயமாகி" என்றும், அது மனவாக்கிறந்ததாதலாலும், அறிவேவடிவாதலாலும், அதனை இன்னதென்று சுட்டப் படாமையாலும், "மனவாக்கெட்டாச் சித்துருவாய்நின்ற ஒன்றை" என்றும், அதுஇன்பப்பெரு வெளியாகலின் "சுகாரம்பப் பெருவெளி" என்றும், அதனைச்சிந்தித்தாலல்லது பேறெய்த லரிதாகலின் "சிந்தைசெய்வா" மென்றுங்கூறினார். (க)

15. யாதுமன நினையுமந்த நினைவுக்கு நினைவாகி
யாதின் பாலும்
பேதமற நின்றுயிருக் குயிராகி யன்பருக்கு
பேரா னந்தக்
கோதிலமு தூற்றரும்பிக் குணங்குறியொன் றறத்தன்னைக்
கொடுத்துக் காட்டும்
நீதில்பரா பரமான சித்தாந்தப் பேரொளியைச்
சிந்தை செய்வாம்.

(ப - ரை.) யாது மனம் நினையும் - எந்தவஸ்துவை மனமானது நினைக்குமோ, அந்த நினைவுக்கு நினைவுஆகி - அந்த எண்ணத்துக்கு எண்ணமாகி, யாதின்பாலும் - எல்லாப் பொருளினிடத்தும், பேதம் அற நின்று - வேறுபாடு இல்லாமல் ஒன்றி நின்று, உயிருக்கு உயிராகி - ஜீவான்மாவுக்கு உள்ளீடாகிய பரமாத்மாவாகி, அன்பருக்கு - தனது அடியார்களுக்கு, கோது இல் - குற்றமில்லாத பேரானந்தஅமுது - பேரின்பத்தைத் தருகின்ற அமிர்தமானது, ஊற்றுஅரும்பி - ஊற்றுபோலச் சுரந்து, குணம் குறிஒன்று அற - குணம் குறிகள்சிறிதும் இல்லாதொழிய, தன்னைக்கொடுத்துக் காட்டும்- (அறப்பெறும்பொருளாகிய) தன்னை அளித்து (அகக்கண்ணுக்குப்புலப்படுமாறு) காட்டாநிற்கும் தீதுஇல் -கெடுதிஇல்லாத, பராபரம்ஆன பராபரமாகிய சித்தாந்தப் பேரொளியை (வேத வேதாந்தங்களால் அநுவாதித்து இதுவே பரம்பொருளென்று) சித்தாந்தப் படுத்தப்பட்ட பெருஞ்சோதியை, சிந்தைசெய்வாம் - தியானிப்போம்(யாம்)—, எ - று.

"யாதுமன நினையுமந்த நினைவுக்கு நினைவாகி" என்றது மனமெதனையும் நினைக்குங் கருவியாகலின் அதனை நினைப்பிப்பவன் இறைவனே என்றும், "யாதின்பாலும் பேதமற நின்று உயிருக்கு உயிராகி" என்றது, யாண்டும் அவன் பரிபூரணனாகலின் அவ்வவ்வுயிரையு மியங்குவிப்பவனவனே யென்றும், "அன்பருக்கே பேரானந்தக்கோதிலமு தூற்றரும்பிக் குணங்குறியொன் றறத்தன்னைக் கொடுத்துக்காட்டும்" என்றது இவ்வாறிருக்கு மிறைவன் தன்னை வழிபடு மெய்யன்பினரைக் கவர்ந்து தன்னைக் காட்டிக்கொண்டு நிற்பனென்றும், இவ்வகை விளங்கிநிற்பான் வேதசிவாகமங்களி னுச்சியிற் கிடந்த சிவபரஞ்சுடரேயென்றும், "தீதில்பராபரமான சித்தாந்தப் பேரொளி" என்றார். சிந்தைசெய்வாமென்றது அவனது திருவடிதொழுவதே பெரும்பேறென்றும் புலப்படக்கூறினதாம். (௨)

16. பெருவெளியா யைம்பூதம் பிறப்பிடமாய்ப் பேசாத
பெரிய மோனம்
வருமிடமாய் மனமாதிக் கெட்டாத பேரின்ப
மயமாய் ஞானக்
குருவருளாற் காட்டிடவு மன்பரைக்கோத் தறவிழுங்கிக்
கொண்டப் பாலும் (ஞ
தெரிவரிதாய்க் கலந்ததெந்தப் பொருளந்தப் பொருளினையா
சிந்தை செய்வாம்.

(ப - ரை.) பெருவெளியாய் - பெரிய ஆகாயமாகி, ஐம்பூதம் பிறப்பு இடமாய் - பஞ்சமஹா பூதங்களுக்கும் தோன்றுதற்குரிய இடமாகி, பேசாதபெரியமோனம் வரும் இடமாய் - எடுத்துச் சொல்லுதற்கரிய பெரிதான மௌந

நிலையுண்டாதற்குரிய இடமாகி, மனமாதிக்கு எட்டாத - மனாதிகளுக்கு எட்டாத, பேரின்பமாய் - பேரானந்த ரூபமாகி, ஞானகுரு - ஞானசாரியர், அருளால் காட்டிடவும் - தமது பெருங்கருணையாற்(சுட்டிக்)காட்டிடவும், அன்பரைகோத்து - தன்னிடத் தன்புசெய்வோரை மூடி, அற - (அவர்களுடைய சீவபோதங்) கெடும்படி, விழுங்கிக்கொண்டு - தன்னகப் படுத்திக்கொண்டு, அப்பாலும் - அதன்மேலும், தெரிவு அரிது ஆய் கலந்தது - அறிதற்கரிதாகிக் கலந்து நின்றது, எந்தப்பொருள் - எந்தவஸ்து, அந்தப்பொருளினை - அந்த வஸ்துவை, யாம் சிந்தைசெய்வாம் - நாம் தியானஞ்செய்வோம்—, எ - று.

ஞானகுரு அருளால் காட்டிட என்றது.

குட்டித் திரட்கரடி யாரெருழிகக் கோன்குதித்துக்
கட்டிப் புதைந்த கதையாகும்—துட்டமலப்
பித்திலே மூத்தவர்கள் பேப்பிதற்றும் பேதையர்க்குப்
புத்திபோற் காட்டும் பொருள்.—என்றபடி

பரமாகாச சொரூபி யாதலாலும், நில நீர் தீ கால் வெளியென்னு மைம்பூதங்கட் கிடமாகலாலும், ஐம்பூதம் பிறப்பிடமாய் சிவானுபூதிச்செல்வர் பெறும் பேருகி மோனநிலையே தோன்றுமிடமாதலாலும், அது மனவாக்கிறந்த தாதலாலும் அது ஞானசிரியர் திருவருளாற் காட்டப்பட்டும் அவரையும் தான் விழுங்கி நிற்பதாதலாலும் அப்பொருளே பரம்பொருளாகலின் அதனைச் சிந்தித்தாலல்லது இறுதியில் வீடுகிட்டுவ தரிதாகலாலும் அதுதுணிதற்பொருட்டு "பெருவெளியா யைம்பூதப்பெருக்கா * * * அப்பாலுந் தெரிவதாய்க் கலந்தது எந்தப்பொரு ளந்தப்பொருளினையாஞ் சிந்தைசெய்வாம்" என்று வினவிடை முகத்தானுங் கூறினர். (௫)

17. இகபரமு முயிர்க்குயிரை யானெனதற் றவருறவை
யெந்தநாளும்
சுகபரிபூ ரணமான நிராலம்ப கோசரத்தைத்
துரிய வாழ்வை
அகமகிழ வருந்தேனை முக்கனியைக் கற்கண்டை
யமிர்தை நாடி
மொகுமொகென விருவிழிநீர் முத்திறைப்பக் கரமலர்கண்
முகிழ்த்து நிற்பாம்.

(ப - ரை.) இகபரமும் - இகபரங்களிலுமுள்ள, உயிர்க்கு உயிரை - உயிர்களுக்குயிரா யிருப்பதை, யான் எனது அற்றவர் உறவை - யானென்னும் அக

ங்காரமும் எனது என்னும் பாசமும் ஒழித்தவர்களுக்கு உறவாயிருப்பதை, எந்நாளும் - எக்காலமும், சுகபரிபூரணமான - இன்பநிறைவாகிய, நிராலம்ப கோசரத்தை - பற்றுக்கோடில்லாததாய்த் தோன்றுவதை, துரியவாழ்வை-துரியபதத்தில் விளங்குவதை, அகம் மகிழ வரும் தேனை - மனமகிழும்படி துளிக்கின்ற தேனை, முக்கனியை-முக்கனிபோன் றிருப்பதை-கற்கண்டை-கற்கண்டுபோலச் சுவையுடையபொருளை, அமிர்தை-அமிர்தத்தை, நாடி-மனத்தினுல் சிந்தித்து, இருவிழி - இருகண்களும், மொகு மொகு என - மொகு மொகென்று, நீர்முத்து இறைப்ப - நீர்த்துளிகளாகிய முத்துகளையுதிர்க்க, கரமலர்கள் முகிழ்த்து நிற்பாம்-கைம்மலர்களைக் கூப்பி நிற்போம். (யாம்)—, என்றவாறு.

நாவிற்குச் சுவைபயக்குந் தேனையொழித்தற்கு "அகமகிழ வருந்தேனை" என்ருர். வாழை, மா, பலா என்பன முக்கனிகள். மொகு மொகு - ஒலிக்குறிப்பு. இத்தன்மைத்தாகிய பொருளைக்குறித்து முகிழ்க்கப்படுதலால் தம் கைகளைக் கரமலர்கள் என்ருர். அமிர்து - மிருத்துவை யொழிப்பது. மிருத்து-மரணம்.

இம்மையினும் மறுமையினும் உயிர்க்குயிராய் யாவும் இயக்கலின், 'இகபரமு முயிர்க்குயிரை' யென்றும், அங்ஙனங் கண்டார்க்குச் சுகபரிபூரணமாக விளங்கலின், 'சுகபரிபூரணமான நிராலம்ப கோசரத்தை' யென்றும், அது துரியநிலையாதாகலின், துரிய வாழ்வை' யென்றும், அது கண்டார்க்கு என்றுமினிப்பதாய் வெறுக்காத சுகப்பேருக நிகழ்தலின், அதனைப் பலபடவியந்து, "அகமகிழ வருந்தேனை முக்கனியைக் கற்கண்டை யமிர்தை" யென்றும், அவர்கள் சுகப்பேற்றைக்கண்டு ஆனந்த பாஷ்பம் சோர மெய்ம்மயிர் புளகிக்க, இருகைகளையும் குவித்து வணங்கலின் "நாடி மொகுமொகென விருவிழிநீர் முத்திறைப்பக் கரமலர்கண் முகிழ்ந்து நிற்பாம்" என்றுங் கூறினர். (௪)

18. சாதிகுலம் பிறப்பிறப்புப் பந்தமுத்தி யருவுருவத்
தன்மை நாமம்
ஏதுமின்றி யெப்பொருட்கு மெவ்விடத்தும் பிரிவறநின்
றியக்கஞ் செய்யும்
சோதியைமாத் தூவெளியை மனதவிழ நிறைவான
துரிய வாழ்வைத்
தீதில்பர மாம்பொருளைத் திருவருளே நினைவாகச்
சிந்தை செய்வாம்.

(ப - ரை.) சாதி - சாதியும், குலம் - குலமும், பிறப்பு இறப்பு - உற்பத்தி அழிவுகளும், பந்தம்முத்தி - பந்தமோக்ஷங்களும், அரு உருவத்தன்மை - அருவும் உருவுமாந்தன்மைகளும், நாமம் - பேரும், (ஆகிய) ஏதும் இன்றி - யா

தொன்றுமில்லாமல், எப்பொருட்கும் - எந்தப்பொருளுக்கும் எவ்விடத்தும்-இயங்குவிக்கின்ற, சோதியை - ஒளிப்பிழம்பை, மாதூவெளியை - மிகவும்புனிதமான ஆகாயத்தை, மனது அவிழ நிறைவு ஆன துரியவாழ்வை - (அன்பருடைய) மனக்கமலம் விகசிக்கும்படி நிறைந்த துரியவாழ்வினை, தீது இல்பரம்பொருளை - குற்றமற்ற மேன்மையாகிய வஸ்துவை, திருவருளே நினைவு ஆக - திருவருளையே நினைத்தற்குக் கருவியாகக்கொண்டு, சிந்தைசெய்வாம்-மனனம் பண்ணுவோம்—, எ - று.

சாதிகுல மாதியவற்றைநாடாது எங்கும் எப்போதும் பிரிவறவத்து விதமாய் நிற்றலின், பராஞ்சுடர்த்தனிமுதல் "சாதிகுலம் பிறப்பிறப்பு * *,சோதியை" என்றும், அது பரமாகாய சொரூபமாதலின் 'தூவெளியை' என்றும், அது உள்ளும் புறமும் பரிபூரணமாய் நிறைந்த துரியங்கடந்த தனிமுதலாதலின், அதனைப் பலபடவியந்து "மனதவிழ நிறைவான துரியவாழ்வை" என்றும், அது தோஷரகிதமாய் மேம்படுபொருளாதலின், "தீதில்பரமாம்பொருளை" என்றும், அது "அவனருளாலே யவன்றாள்வணங்கி" என்றார்போலத் திருவருளே துணைவாகப் பெறவேண்டுதலின் "திருவருளே நினைவாகச் சிந்தைசெய்வாம்" என்றும் கூறினர். (௬)

19. இந்திரசா லங்கனவு கானலினீ ரெனவுலக
மெமக்குத் தோன்றச்
சந்ததமுஞ் சிற்பரத்தா லழியாத தற்பரத்தைச்
சார்ந்து வாழ்க
புந்திமகி ழுறநாளுந் தடையறவா னந்தவெள்ளம்
பொலிக வென்றே
வந்தருளுங் குருமௌனி மலர்த்தாளை யநுதினமும்
வழுத்தல் செய்வாம்.

(ப - ரை.) இந்திரசாலம் (என) - இந்திரசால வித்தைபோலவும், கனவு (என) - சொப்பனம் போலவும், கானலின் நீர் என - கானற்சலத்தைப்போலவும், உலகம் - இவ்வுலகமானது, எமக்குத்தோன்ற - எமக்குத்தோன்றும்படியாக, சந்ததமும் - எக்காலமும், சிற்பரத்தால் - ஞானபக்ஷத்தினால், அழியாத தற்பரத்தை - நித்தியமான தற்பரவஸ்துவை, சார்ந்துவாழ்க - பொருந்திவாழக்கடவை, புந்தி மகிழுற - மனமகிழ வெய்தும் வகையாக, நாளும் - நாள்தோறும், தடை அற - அட்டியில்லாமல், ஆநந்தவெள்ளம் பொலிக என்று - இன்பப்பெருக்கானது பொலிகவென்று, வந்தருளும்—(என்னையொரு பொருளாக மதித்து) வந்து கிருபைசெய்கின்ற, குருமௌனி - மௌனகுருவினது, மலர்த்தாளை - தாமரை மலர்போன்ற திருவடிகளை அநுதினமும்-நாள்தோறும், வழுத்தல் செய்வாம் - துதிசெய்வோம்—,எ - று.

'இந்திரசாலங்கனவு கானலினீரெனவுலக மெமக்குத் தோன்ற' என்றது உலகம் மாயாகாரிய மாதலாலும் மாயையின் காரியமாகிய அது இல்பொருள் என்பதுதோன்றக் கூறினர் சிவத்தையடையும் பெருவாழ்வினும் பேறின்மை கலின் 'சந்ததமுஞ் சிற்பரத்தா லழியாத தற்பரத்தைச் சார்ந்து வாழ்க' என்றும், அச்சிவத்தை யடைதலால் ஆனந்ததோற்றமும், ஆனந்தாதீதமும் கைவருமாகலின் 'புந்திமகிழுற நாளுந் தடையற வானந்தவெள்ளம் பொலிக' என்றும், இத்தனையும் அடையப்பெற்றது குருவருளாலாதலின் 'வந்தருளுங் குரு மௌனி மலர்த்தாளை யநுதினமும் வழுத்தல் செய்வாம்' என்றும் கூறினார். இந்திரஜாலம் - அற்புதங்களைக்காட்டும் வித்தை. இது பொய்மையென்னுங் குறிப்பிது. (௬)

20. பொருளாகக் கண்டபொரு ளெவைக்குமுதற் பொருளாகிப்
போத மாகித்
தெருளாகிக் கருதுமன்பர் மிடிதீரப் பருகவந்த
செழுந்தே னாகி
அருளானோர்க் ககம்புறமென் றுன்னாத பூரணவா
னந்த மாகி
இருடீர விளங்குபொரு ளியாதந்தப் பொருளினையா
மிறைஞ்சி நிற்பாம்.

(ப - ரை.) பொருளாகக் கண்டபொருள் எவைக்கும் - வஸ்துக்களாகக் காணப்பட்ட வஸ்துக்கள் யாவற்றுக்கும், முதற்பொருள் ஆகி - முதன்மையான வஸ்துவாகி, போதம் ஆகி - ஞானமாகி, தெருள் ஆகி - (அவ்வறிவினால் உணர்த்தப்பட்ட) சாரமாகி, கருதும் அன்பர்மிடிதீர பருகவந்த நினைக்கின்ற அடியாரது வறுமை நீங்க நுகரவந்த, செழுந்தேன் ஆகி-செழுமையான தேனாகி, அருள் ஆனோர்க்கு- தன் அருள்பெற்ற அன்பருக்கு, அகம் புறம் என்று உன்னாத-உள்ளென்றும் புறமென்றும் நினையாத பூரண ஆநந்தம்ஆகி நிறைவாகிய சுகரூபமாகி, இருள் தீர-அஞ்ஞான இருள்நீங்கும்படி, விளங்கு பொருள் யாது - பிரகாசிக்கின்ற பொருள் எது அந்தப்பொருளினை - அந்தப்பொருளை யாம் இறைஞ்சி நிற்பாம் - நாம் வணங்கி நிற்போம்—,எ-று.

முதற்பொருளாகி ஒன்றும் போதமாகிஎன்றும், ஆநந்தமாகி என்றும்கூறினமையால் சச்சிதானந்தப் பொருளைவணங்கினார். முதற்பொருள்சத்தும்போதம் சித்தும் ஆனந்தம் இன்பமும் எனக்கொள்க. (௭)

21. அருமறையின் சிரப்பொருளாய் விண்ணவர் மாமுனிவர்சித்த
ராதி யானோர்
தெரிவரிய பூரணமாய்க் காரணங்கற் பனைகடந்த
செல்வ மாகிக்

கருதரிய மலரின்மண மெள்ளிலெண்ணெ யுடலுயிர்போற்
கலந்தெந் நாளுந்
துரியநடு வூடிருந்த பெரியபொரு ளியாததனைத்
தொழுதல் செய்வாம்.

(பதவுரை.) அருமறையின் சிரப்பொருளாய்-அரியவேதத்தின் முடியில் விளங்கும் பொருளாகி, விண்ணவர் மாமுனிவர் சித்தர் ஆதி ஆனோர் - தேவர்கள் பெருமை பொருந்திய முனிவர்கள் சித்தர்கள் முதலானவர்களால்,தெரிவு அரிய பூரணம் ஆய்-தெரிந்துகொள்ளுதற் கருமையாகிய நிறைவாகி,காரணம் கற்பனைகடந்த செல்வம் ஆகி-காரண வஸ்துவையும் கற்பனையையுங் கடந்து நின்ற ஐசுவரியமாகி, கருது அரிய - நினைத்தற்கரிய, மலரின் மணம்(போல்) பூவின் வாசம்போலவும், எள்ளில் எண்ணெய் (போல்) - எள்ளில் எண்ணெய்போலவும், உடல் உயிர்போல் - உடலில் உயிர்போலவும், கலந்து - கலந்து நின்று, எந்நாளும் - எக்காலத்திலும், துரியநடுவூடு இருந்த - துரியபதத்தின் இடையில் விளங்கும், பெரியபொருள் யாது - பெரியவஸ்து எது, அதனை - அந்த வஸ்துவை, தொழுதல் செய்வாம் - வணங்குவோம் (யாம்)—,எ-று.

வேதத்திற் கூறப்படும் முடிந்தபொருள் பரம்பொருளே யாகலின்"அருமறையின் சிரப்பொருளாய்" என்றார். கடவுளை மனனஞ்செய்வோர் முனிவர் அணிமா, மகிமா, கரிமா, லகிமா, பிராத்தி, பிராகாமியம், ஈசத்துவம், வசித்வம் என்னும் அட்டசித்திகளும் கைவந்தபெரியோர் சித்தர்.இனி யோகாப்பியாச முடையவர் என்னலுமாம். காரணம் - ஆதி - கற்பனை - இல்லாததையுண்டாக்குதல். (அ)

22. விண்ணாதி பூதமெல்லாந் தன்னகத்தி லடக்கிவெறு
வெளியாய் ஞானக்
கண்ணாரக் கண்டவன்பர் கண்ணூடே யானந்தக்
கடலாய் வேறொன்
றெண்ணாத படிக்கிரங்கித் தானாகச் செய்தருளு
மிறையே யுன்றன்
தண்ணாருஞ் சாந்தவரு டனைநினைந்து கரமலர்க
டலைமேற் கொள்வாம்.

(பதவுரை.) விண்ணாதி பூதம் எல்லாம் – ஆகாயம் முதலான பூதங்களையெல்லாம், தன் அகத்தில் அடக்கி - தனக்குள்ளே யொடுக்கி, வெறு வெளி ஆய் - வெட்டவெளியாய் ஞானக்கண் ஆர-ஞானக்கண் நிறை வெய்தும்படி கண்ட அன்பர்-தரிசித்த அடியார்களது, கண்ணூடு - (அந்த) ஞானக்கண்ணினிடத்து, ஆநந்தக்கடலாய்-இன்பசாகரமாய், வேறு ஒன்று எண்ணாதபடிக்கு

இரங்கி-(அந்த அன்பர்கள்) பிறிதொன்றையும் நினையாத வகையாக (அவர்களிடத்தில்) மனமிரங்கி, தானாகச்செய்தருளும் இறையே - தானாகச் செய்தருளாநின்ற தலைவனே, உன்றன்-உனது, தண் ஆரும்-குளிர்ச்சி பொருந்திய, சாந்த அருள்தனை நினைந்து - சாந்த ரூபமான கிருபையை நினைந்து, கரமலர்கள் - கைம்மலர்களை, தலைமேல்கொள்வாம்-சிரத்தின்மீது கூப்பிப்பணிவோம் (யாம்)—எ—று.

விண்ணாதி பூதமெல்லாந் தன்னகத்திலடக்கி என்றது மூலப் பிரகிருதியிலடக்கி யென்றபடி. தனக்குக்காரணம் ஒன்றுமின்றிச் சுயம்புவாய்த்தன்னிடத்தே விண்முதலிய எல்லாப் பூதங்களையும் அடக்கி யுள்ளதுஎன்பார்'' விண்ணாதி பூதமெல்லாம் தன்னகத்திலடக்கி வெறுவெளியாய்'' என்றார். தோன்றிய விடத்தே ஒடுங்கவேண்டியும், ஒடுங்கியவிடத்தே தோன்று முறையானும் பூதங்கள் அடங்குதற்கு இடம் தானாகலின் அவைகளின் தோற்றத் திற்கும்இடம்தானே என்றுணர்க. மாயாபாசத்தில்கட்டுண்டு வருந்தும்ஆன்மகோடிகளுக்கு இறைவன் பரிபாக காலமறிந்து தானாகவந்து அருள்செய்யு மென்பார் 'வேறொன் றெண்ணாதபடிக் கிரங்கித் தானாகச்செய்தருளு மிறையே''என்றார் இறை எல்லாப் பொருளுக்குந்தலைவன். (௬)

23\. விண்ணிறைந்த வெளியாயென் மனவெளியிற் கலந்தறிவாம்
வெளியி னூடும்
தண்ணிறைந்த பேரமுதாய்ச் சதானந்த மானபெருந்
தகையே நின்பால்
உண்ணிறைந்த பேரன்பா லுள்ளுருகி மொழிகுழறி
யுவகை யாகிக்
கண்ணிறைந்த புனலுகுப்பக் கரமுகிழ்ப்ப நின்னருளைக்
கருத்தில் வைப்பாம்.

(பதவுரை.) விண் நிறைந்த வெளி ஆய்-(பூத) ஆகாயம் நிறைதற்குரிய (பரம) ஆகாயமாகி, என்மன வெளியில் கலந்து - எனதுஇதயாகாயத்திற் சேர்ந்து, அறிவுஆம் வெளியினூடும் - ஞானாகாயத்திலும், தண்நிறைந்த பேரமுதாய் - குளிர்ச்சி மிகுந்த பெரிய அமிர்தமாகி, சதாநந்தமான, பெருந்தகையே இடையறாதிலகும் இன்பமயமான பெருந்தகமை யுடையோனே, நின்பால்—உன்னிடத்தில், உள் நிறைந்த பேரன்பால் - தனக்குள்ளே நிறைந்த பேரன்புடன், உள் உருகி - மனங்கரைந்து, மொழிகுழறி - சொல்தடுமாறி, உவகை ஆகி—ஆனந்தமடைந்து, கண்—விழிகள், நிறைந்த புனல் உகுப்ப(தம்மிடத்து) நிறைந்த நீரைச்சொரிய, கரம் முகிழ்ப்ப—கைகள் குவிய, நின் அருளைகருத்தில் வைப்பாம்—உன் கருணையை எமது கருத்திலிருத்துவோம்(யாம்) எ-று.

பரமாகாயமாகிய இறைவன் ஆன்மகோடிகளின் அந்தக் கரணங்களிற் கலந்து சதாநந்தமயமாய் இருக்கின்றான் என்பார் ''விண்ணிறைந்த வெளி

யாய் *** சதாநந்தமானபெருந்தகையே" என்றார். சதாநந்தப் பரம்பொருளை மனம், மொழிமெய்களால் வணங்க அவ்விறைவனது திருவருளை நாடுவேன் என்பது கருத்து.

உவகையால் மனம்விழுங்கப்பட்டு மொழி தழுதழுத்தலை மொழிகுழறி என்றார். (௧௦)

எண்சீர்க்கழிநெடி லாசிரியவிருத்தம்.

24. ஆதியந்தங் காட்டாத முதலாமெம்மை
யடிமைக்கா வளர்த்தெடுத்த வன்னை போல
நீதிபெறுங் குருவாகி மனவாக் கெட்டா
நிச்சயமாய்ச் சொச்சமதாய் நிமல மாகி
வாதமிடுஞ் சமயநெறிக் கரிய தாகி
மௌனத்தோர் பால்வெளியாய் வயங்கா நின்ற
சோதியையென் னுயிர்த்துணையை நாடிக் கண்ணீர்
சொரியவிரு கரங்குவித்துத் தொழுதல்செய்வாம்.

(பதவுரை) ஆதி அந்தம் காட்டாத முதல் ஆய் - தோற்றம் லயங்களையுடைய தல்லாத முதற்பொருளாய், எம்மை - எங்களை, அடிமைக்கா - தனது திருத்தொண்டுக்காக, வளர்த்தெடுத்த அன்னைபோல - வளர்த்தெடுத்த மாதாவைப்போல, நீதிபெறுங் குரு ஆகி - நீதியையுடைய ஆசாரியனாய், மனவாக்கு எட்டா - மனோ வாக்குக்களால் எட்டப்படாத, நிச்சயம் ஆய் - சாசுவதப்பொருளாய், சொச்சமது ஆய் - களங்க ரஹிதமாய், நிமலமது ஆய் - மலமற்றதாய், வாதம் இடும் - தர்க்கவாதஞ் செய்கின்ற, சமய நெறிக்கு அரியதாகி - சமய மார்க்கங்களுக்கு அரியவரிதாய், மௌனத்தோர் பால் - மௌன நிலையையுடைய ஞானிகளிடத்து, வெளி ஆய் வயங்கா நின்ற - வெளிப்பட்டு விளங்கும் சோதியை - ஒளிப்பிழப்பை, என் உயிர்த்துணையை - என்னுயிர்க்குத் துணையாயிருப்பதை, நாடி - குறித்து, கண்ணீர் சொரிய - கண்கள் நீரைச்சிந்த, இருகரம் குவித்து இருகைகளையுங் கூப்பி, தொழுதல் செய்வாம்-வணங்குவோம் யாம்—எ-று.

தோற்ற நாசங்களற்ற முதற்பொருளாகிய பரம்பொருள் ஆத்மகோடிகளை அடிமைகொள்ள வென்றே உயிர்களுக்குத் தாய்போல் அன்பு மிகுந்து, சற்குரு வடிவங் கொண்டுவந்து சமயாதீதப்பட்ட மௌனநிலையுடைய ஞானியர்பால் விளங்கும் என்றார். (௧௧)

25. அகரவுயி ரெழுத்தனைத்து மாகி வேறு
யமர்ந்ததென வகிலாண்ட மனைத்து மாகிப்
பகர்வனவெல் லாமாகி யல்ல தாகிப்
பரமாகிச் சொல்லரிய பான்மை யாகித்

துகளறுசங் கற்பவிகற் பங்க ளெல்லாந்
தோயாத வறிவாகிச் சுத்த மாகி
நிகரில்பசு பதியான பொருளை நாடி
நெட்டுயிர்த்துப் பேரன்பா னினைதல் செய்வாம்.

(ப – ரை.) அகர உயிர்-அகரவுயிரானது, எழுத்து அனைத்தும் ஆய்-எல்லாவெழுத்துக்களுந் தானேயாகி, வேறு ஆய் அமர்ந்தது என - அவற்றிற்கு வேறாகியும் அமைந்து நிற்கும்வகைபோல, அகிலாண்டம் அனைத்தும் ஆகி-சகலாண்டங்களும் அவற்றிலுள்ள சராசரங்களும்தானே ஆகி, பகர்வனஎல்லாம் ஆகி - சொல்லப்படுவனவாகிய பொருள்களெல்லாமாய், அல்லது ஆகி - அவையல்லாததாய், பரம் ஆகி - எல்லாப் பொருள்களுக்கும் மேலானபொருளாய், சொல் அரிய பான்மை ஆகி - சொல்லுதற்கரிய தன்மையுடையதாய், துகள் அறுசங்கற்ப விகற்பங்கள் எல்லாம்-குற்றமற்ற சங்கற்பமும் விகற்பமுமாகிய ஒவ்வொன்றிலும், தோயாத அறிவு ஆகி-படியாத ஞானவுருவாய், சுத்தம்ஆகி-புனிதமாய் நிகர் இல் பசுபதிஆன பொருளை-ஒப்பற்ற ஆன்மாக்களுக்குஇறைவனாகிய பொருளை, நாடி - உத்தேசித்து, நெட்டுயிர்த்து - பெருமூச்சுவிட்டு பேரன்பால் - பெரிதான அன்புடன், நினைதல் செய்வாம் - தியானிப்போம் (யாம்)—எ-று.

நாதமாத்திரையாகிய இயல்பாற்பிறக்கும் அகரவொலி எழுத்துக்கள் அனைவத்தினுங் கலந்தும், வேறாய்த் தனித்தும் நிற்பதுபோல், பரம்பொருள் அண்டமுழுவதிலுமுள்ள ஒவ்வொரு தனிப்பொருளும் தானேயென்று சொல்லவும் ஆம் என்பார். "அகரவுயி ரெழுத்தனைத்துமாகி" முதலியவாகக்கூறினார். அகரத்தின் செய்தியை - "அ ஆ அங்காப்புடைய" எனக்கூறியதனானே வாயையங்காந்தவுடனே பிறக்கும் இயல்புடைய அகரமானது "அகரமுதலவெழுத்தெல்லாம்" என்றபடி நின்றும். பிறவற்றையுச்சரிக்க வாயைத் திறக்கும் போதே தோன்றி அவை ஒவ்வொன்றிற்கும் முன்னின்று விளங்கலின் என்க.

துகளறுசங்கற்பம்-சுத்தசங்கற்பம். விகற்பம்-வேறுபாடு. "அகரவுயிர்போலறிவாகி யெங்கும் நிகரி லிறைநிற்கு நிறைந்து" என்பது திருவருட்பயன்.

சின்மயானந்தகுரு.

பன்னிருசீர்க்கழிநெடி லாசிரியவிருத்தம்.

26. அங்கைகொடு மலர்தூவி யங்கமது புளகிப்ப
வன்பினு ளுருகிவிழிநீர்
ஆறாக வாராத முத்தியின தவேச
வாசைக் கடற்குண்மூழ்கிச்

சங்கர சுயம்புவே சம்புவே யெனவுமொழி
தழுதழுத் திடவணங்கும்
சன்மார்க்க நெறியிலாத் துன்மார்க்க னேனையுந்
தண்ணருள் கொடுத்தாள்வையோ
துங்கமிகு பக்குவச் சனகன்முதன் முனிவோர்கள்
தொழுதருகில் வீற்றிருப்பச்
சொல்லரிய நெறியையொரு சொல்லா லுணர்த்தியே
சொரூபானு பூதிகாட்டிச்
செங்கமல பீடமேற் கல்லா லடிக்குள்வளர்
சித்தாந்த முத்திமுதலே
சிரகிரி விளங்கவரு தக்ஷிணு மூர்த்தியே
சின்மயானந்த குருவே.

(ப - ரை) அம் கைகொடு மலர்தூவி - அழகிய கைகளால் மலர்களைக் கொண்டருச்சித்து, அங்கமது புளகிப்ப - உடல் மயிர்க்குச் செறியும்படி, அன்பினுல் உருகி - அன்புடன் மனங்கரைந்து, விழிநீர் ஆறு ஆக - கண்ணீர் ஆருகிப் பெருக, ஆராத - தெவிட்டாத, முத்தியினது ஆவேச ஆசை கடற்குள் மூழ்கி - மோக்ஷாவேசத்தோடு கூடிய ஆசையாகிய கடலிலே முழுகி, சங்கர சங்கரனே, சுயம்புவே - சுயம்புவாயிருப்பவனே - சம்புவே - சம்புவாயிருப்பவனே, எனவும் - என்று துதித்தும், மொழிதழு - தழுத்திட - சொல் குழலும்படி, வணங்கும் - பணிகின்ற, சன்மார்க்கநெறியில்லா - நன்னெறி யொழுக்கமில்லாத, துன்மார்க்கன் எனையும் - துன்மார்க்கனுகிய அடியேனையும், தண் அருள்கொடுத்து ஆள்வையோ - குளிர்ச்சியாகிய கிருபைசெய்துஆண்டருள்வாயோ, துங்கம் மிகு பக்குவம் - பரிசுத்த மிகுந்த பக்குவத்தையுடைய, சனகன் முதல் முனிவோர்கள் - சனகன் முதலாகிய முனிவர்கள்(நால்வரும்)தொழுது அருகில்வீற்றிருப்ப - வணங்கிச் சமீபத்தில் வீற்றிருக்க, சொல் அரிய நெறியை சொல்லுதல் அருமையாகிய(ஒப்பற்றஞான)மார்க்கத்தை, ஒருசொல்லால்உணர்த்தி - ஒருமொழியால் அறிவுறுத்தி, சொரூபானுபூதி காட்டி - சொரூபாநு பவத்தைக்காட்டி, செங்கமலபீடம்மேல் - செவ்விய பத்மாசனத்தில், கல்லால் அடிக்குள்வளர் - கல்லாலின்கீழ் எழுந்தருளியிருக்கின்ற, சித்தாந்தம் முத்திமுதலே - முடிவுசெய்யப்பட்ட மோட்சப்ரதமான முதற்பொருளே, சிரகிரி விளங்கவரு சிரகிரியின்கண் ஆன்மாக்கள் பிரகாசிக்க எழுந்தருளிய, தக்ஷிணுமூர்த்தியே - சின்மயம் ஆநந்தம் குருவே - ஞானனந்தங்களைக்கொடுக்கிற சற்குருவே—எ-று.

சங்கரன் சுகத்தைக்கொடுப்போன், சுயம்பு - தானே யுண்டானவன், சம்பு - சுகமுண்டாதற் கிடமாயிருப்பவன், மலர்தூவப் பெற்றமையால் அங்கை

யென்றார். இவ்வாறன்றி அகங்கை என்பது "அகமுனர்ச் செவிகைவரினிடையான கெடும்" என்றபடி அங்கை என நின்றது என்றலுமொன்று. ஆதியாத்மிகம், ஆதிதைவிகம், ஆதிபௌதிகம் என்னும் தாபத்ரயத்தால் தபிக்கப்பட்டவராதலால், அந்தத் தாபந்தணியத் தண்ணிய அருள்வேண்டுமென்பார், "தண்ணருள் கொடுத்தாள்வையியர்" என்றார், மந்தம், மந்ததரம், தீவிரம், தீவிரதரம் என்னும் பக்குவம் நான்கனுள் தீவிரதரத்தை "துங்கமிகுபக்குவம்" என்றார். சனகன்முதன் முனிவோர்கள் நால்வராவார்.—சனகன், சனந்தனன், சனற்குமாரன், சனாதனன் என்பவர், இந்நால்வரும் பிரமபுத்திரர். ஒருசொல் என்பது குருமுகத்தா லறியத்தருவது. சிரகிரி விளங்கவரு என்பதற்குச் சிரகிரியானது பிரகாசிக்கும்படி எழுந்தருளிய என்றுரைத்தலுமொன்று. சிரகிரி - சிராமலை. (திருச்சிராப்பள்ளி) அது பூர்வத்தில் திரிசிரனால் ஆளப்படுதலின் அப்பெயர் பெற்றது. பதுமாசனமாவது இரு தொடைமேலும் இரண்டுள்ளங்காலையும் மாறித்தோன்றவைத்தல். பூர்வம் பிரம புத்திரர்களாகிய சநகன்சனந்தனன் சநற்குமாரனென்னும் முனிவர் நால்வரும் வேதாகமங்களைக் கற்றுணர்ந்தும் மனமொடுங்காமையின் திருக்கைலாய கிரியையடைந்து திருநந்தி தேவர்பால் விடைபெற்று மகாதேவரைச் சேவித்து நின்று 'அடியேங்கள் மனமொடுங்கும் வண்ணம் அனுக்கிரகஞ் செய்க" எனப்பிரார்த்திக்க, இறைவர் தனித்துக் கல்லாலின் கீழ் வீற்றிருந்து, அவர்கள் நால்வரையும் திருவடிக் கீழிருத்தி,வேதமுடிவாகிய சித்தாந்தத்தைப்போதிக்க அவர்கள் அடியேங்கள் மனமொடுங்குமாறு அருள்புரிய என மீண்டும்பணிய இறை ":அப்பொருளின் தன்மை இவ்வாறு" என்று சின்முத்திரையுடன் கணப்பொழுது யோகத்திருந்தனர். அதனால் முனிவர் நால்வரும் ஞானமடைந்து சிவபிரான்பால் விடைபெற்றுத் தமதிச்சையின்படி சென்று நிஷ்டாபரராய்ச் சீவன் முத்தர்களானார்கள் என்பது புராணசரிதம். (க)

27. ஆக்கையெனு மிடிகரையை மெய்யென்ற பாவிநா
னத்துவித வாஞ்சையாதல்
அரியாகொம் பிற்றேனை முடவனிச் சித்தபடி
யாகுமறி வவிழவின்பம்
தாக்கும்வகை யேதிநாட் சரியைகிரி யாயோக
சாதனம் விடுத்ததெல்லாம்
சன்மார்க்க மல்லவிவை நிற்கவென் மார்க்கங்கள்
சாராத பேரறிவதாய்
வாக்குமன மணுகாத பூரணப் பொருள்வந்து
வாய்க்கும் படிக்குபாயம்
வருவித் துவட்டாத பேரின்ப மானசுக
வாரியினை வாய்மடுத்துத்

தேக்கித் திளைக்கநீ முன்னிற்ப தென்றுகாண்
சித்தாந்த முத்திமுதலே
சிரகிரி விளங்கவரு தக்ஷிண மூர்த்தியே
சின்மயா னந்தகுருவே.

(ப - ரை) ஆக்கையென்னும் இடிகரையை - சரீரமென்கிற இடிகரையை, மெய்யென்ற பாவிநான் - உண்மையென் றெண்ணியிருக்கிற பாவியாகிய, நான், அத்துவித வாஞ்சை ஆதல் - அத்துவிதப்பொருளின்மேல் இச்சை கூறுதல்அரிய கொம்பில் தேனை - எட்டுதற்கரிய கொம்பிற்கட்டப்பட்டிருக்கின்றதேனை (உண்ண) முடவன் இச்சித்தபடி ஆகும் - முடவன் விரும்பினவிதமாகும், (இவ்வாறாயின்) அறிவு அவிழ - (எனது) அறிவானது மாறும்படி, இன்பம்தாக்கும்வகை ஏது - சுகமுண்டாகும் வகையாது, இந்நாள் - இன்றுவரை, சரியைகிரியாயோகசாதநம் விடுத்தது எல்லாம் - சரியை கிரியையோகம் என்பவற்றின்அப்பியாசத்தைவிட்டு விட்டதெல்லாம், சன்மார்க்கம் அல்ல - நல்ல நெறியன்று, இவை நிற்க - இவை (இம்மட்டு) நிற்கட்டும், எம்மார்க்கங்கள் சாராக பேரறிவதாய் - எத்தன்மையாகிய மார்க்கங்களும் அணுகாத பெரிய அறிவுருவாகி, வாக்குமனம் அணுகாத - வாக்கும் மனமும் பொருந்தாத, பூரணப்பொருள் - பரிபூரணவஸ்துவானது, வந்துவாய்க்கும்படிக்கு - வந்துகிடைக்கும்பொருட்டு, உபாயம் வருவித்து - உபாயத்தை யுண்டாக்கி, உவட்டாத - தெவிட்டாத, பேரின்பமான - பேரானந்தமான, சுகவாரியினை - இன்பக்கடலை, வாய்மடுத்து - வாய்வைத்து (பருகி), தேக்கித்திளைக்க - நிறைய அநுபவிக்க, நீ முன்நிற்பது என்று - நீ எனக்குப் பிரத்தியக்ஷமாவது எக்காலம், சித்தாந்த முத்திமுதலே எ - று.—

இடிகரை - ஆற்றோரத்தில் வெள்ளத்தால் கீழறுக்கப்பட்டு நின்றகரை பொய்யாகிய உடலை மெய் என்றது உபசாரவழக்கு, இதுகாறும் தேகாதிப் பிரபஞ்சமே மெய்யென்றெண்ணி யிருந்தேனாதலால் "ஆக்கையெனு மிடிகரையை மெய்யென்ற பாவிநான்" என்றும், நான் ஒன்றிரண்டெண்ணாத வுண்மைநெறியைவிரும்பியது "அரியகொம்பிற்றேனை முடவனிச்சித்தபடி யாகும்" என்றும், அஃதிவ்வாறெனின் இன்பநிலைகிடைப்ப தில்லையென்பார் "அறிவவிழ வின்பந் தாக்கும் வகையேது" என்றும், அது கைவரச் சரியை யாதிகளைச் செய்துவந்தும் கிட்டாமையால் "சரியை கிரியாயோக சாதனம் விடுத்ததெல்லாம் சன்மார்க்கமற்ற" என்றும் அச்சிந்தையு மொழியுஞ் செல்லா நிலைமைத்தாய அந்தமிலின்பத் தழிவில் வீடுபேற்றை அருள் செய்யவேண்டும் என்பார் "நீ முன்னிற்ப தென்றுகாண்" என்றும் கூறினார். (உ)

28. ஔவிய மிருக்கநா னென்கின்ற வாணவ
மடைந்திட் டிருக்கலோபம்
அருளின்மை கூடக் கலந்துள் ளிருக்கமே
லாசாபி சாசமுதலாம்

வெவ்விய குணம்பல விருக்குமென் னறிவூடு
  மெய்யனீ வீற்றிருக்க
விதியில்லை யென்னிலோ பூரண னெனும்பெயர்
  விரிக்கினுரை வேறுமுளதோ
கவ்வுமல மாகின்ற நாக பாசத்தினற்
  கட்டுண்ட வுயிர்கண்மூர்ச்சை
கடிதகல வலியவரு ஞானசஞ் சீவியே
  கதியான பூமிநடுவுள்
செவ்விதின் வளர்ந்தோங்கு திவ்வியகுண மேருவே
  சித்தாந்த முத்திமுதலே
சிரகிரி விளங்கவரு தக்ஷிண மூர்த்தியே
  சின்மயா னந்தகுருவே.

(ப - ரை) ஒள்வியம் இருக்க - பொறாமையானது இருக்கவும், நான் என்கின்ற ஆணவம் - நான் என்கிற ஆணவமானது, அடைந்திட்டிருக்க - சேர்ந்திருக்கவும், லோபம் - லோபகுணமும், அருள் இன்மைகூட - கிருபையில்லாமையும், கலந்து உள் இருக்க - கலந்து உள்ளே இருக்கவும், மேல் - பின்னும், ஆசாபிசாசம் முதல் ஆம் - ஆசையாகிய பேய்முதலாகிய, வெவ்வியகுணம் - தீக்குணங்கள், பல இருக்கும் - அனேகம் பொருந்தியிருக்கின்ற, என் அறிவூடு—என்னறிவினிடத்தில், மெய்யன் - சத்தியனாகிய, நீ வீற்றிருக்க - நீ எழுந்தருளியிருக்க, விதியில்லை என்னில் - நியாயமில்லையென்று சொல்வாயாயின், பூரணன் என்னும்பெயர் - சர்வபரிபூரணன் என்கிற (உன்) திருநாமத்தை, விரிக்கில் - விரித்தால், உரை - அதின் பொருளானது, வேறும்உளதோ - வேறாயும் இருக்குமோ(இல்லை), கவ்வும் மலம் ஆகின்ற - பற்றுகின்ற மும்மலமாகிய, நாகபாசத்தினால் - நாகபாசத்தால், கட்டு உண்ட - கட்டுப்பட்ட, உயிர்கள் - உயிர்களது, மூர்ச்சை - மூர்ச்சித்துக் கிடக்கிறநிலை, கடிது அகல - விரைவாக ஒழியும்படி, வலியவரும் - பிரார்த்தியாமலே வந்த, ஞானசஞ்சீவியே - ஞானசஞ்சீவினியே, கதிஆன பூமி நடு உள் - மோக்ஷமென்கிற நிலத்தின் மத்தியில், செவ்விதின் வளர்ந்து ஓங்கு - செவ்வையாக வளர்ந்துயர்ந்த, திவ்யம் - தெய்விகமான, குணமேருவே - குணமலையே, சித்தாந்த முத்திமுதலே—எ - று.

மெய்யனாகிய நீ ஒளவிய முதலான தீக்குணத் தொகுதியோடு வீற்றிருப்பது தகுதியன்றாயினும் பூரணநாமப்பொருள் விரிக்குமிடத்து நீ வீற்றிருந்தே தீரவேண்டுமென்றாயிற்று. ஆன்மாக்கள் மும்மலங்களால் அனாதியே கண்டிருத்தலால் அதனை உருவகப்படுத்தி "கவ்வுமலமாகின்ற நாகபாசத்தினற் கட்டுண்டவுயிர்கள்" என்றும், அந்நாகபாசம் சஞ்சீவியாலல்லது நீங்காதென்பர். அம்மலமாயா கன்மங்களை நீக்கும் இறைவனை கடிதகல வலியவரு ஞானசஞ்சீவி" என்றுங் கூறினர். (ரு)

29. ஐவகை யெனும்பூத மாதியை வகுத்ததனு
ளசரசர பேதமான
யாவையும் வகுத்துநல் லறிவையும் வகுத்துமறை
யாதிநூ லையும்வகுத்துச்
சைவமுத லாமளவில் சமயமும் வகுத்துமேற்
சமையங் கடந்தமோன
சமரசம் வகுத்தநீ யுன்னைநா னணுகவுந்
தண்ணருள் வகுக்கவிலையோ
பொய்வளரு நெஞ்சினர்கள் காணாத காட்சியே
பொய்யிலா மெய்யரறிவில்
போதபரி பூரண வகண்டிதா காரமாய்ப்
போக்குவர வற்றபொருளே
தெய்வமறை முடிவான பிரணவ சொரூபியே
சித்தாந்த முத்திமுதலே
சிரகிரி விளங்கவரு தக்ஷிணா மூர்த்தியே
சின்மயானந்த குருவே.

(ப - ரை) ஐவகையெனும் - ஐந்துவகையென்று சொல்லப்படுகிற, பூதம் ஆதியைவகுத்து - பூதங்கள் முதலானவற்றைப் படைத்து, அதனுள் - அதனிடத்தில், அசரம் சரம் பேதம் ஆன - அசரம் சரம் என்று வேறுபட்டிருக்கிற, யாவையும் வகுத்து - (உயிர்கள் எல்லாவற்றையும் படைத்து, நல் அறிவையும் வகுத்து - (அவைகளுக்கு) நல் உணர்வையுஞ் சிருஷ்டித்து! மறை ஆதி நூலையும் வகுத்து - வேதம் முதலான நூல்களையும் படைத்து, சைவம் முதல் ஆம் சைவம் முதலாகிய, அளவில் சமயமும் வகுத்து - அளவில்லாத சமயங்களையும் ஏற்படுத்தி, மேல் - அதற்குமேல், சமயம்கடந்த - சமயாதீதமான, மோனசமரசம்வகுத்த நீ - மோனமாகிய சமரசநிலையை யுண்டாக்கிய நீ, உன்னை நான் அணுகவும் - உன்னையான் அடையவும், தண் அருள் வகுக்க இலையோ - குளிர்ந்த கிருபையை யுண்டு செய்யவில்லையோ. பொய்வளரும் நெஞ்சினர்கள் - பொய்யானது விருத்தி யடைகின்ற மனத்தையுடைய அஞ்ஞானிகள், காணாத காட்சியே - காணமுடியாத காட்சியே, பொய் இல்லா மெய்யர் அறிவில் - பொய்யில்லாத மெய்யரது அறிவினிடத்து, போதபரிபூரண அகண்டித ஆகாரமாய் - ஞான பரிபூரண அகண்ட ரூபமாகி, போக்குவரவு அற்றபொருளே - போக்குவரவுகள் இல்லாதிருக்கிற (நித்திய) வஸ்துவே, தெய்வமறை முடிவு ஆன - தெய்விகமான வேதத்தின் முடிவாக விளங்கும், பிரணவ சொரூபியே- ஓங்கார சொரூபனே, சித்தாந்த முத்திமுதலே—எ - று.

பஞ்சபூதாதிகளைப் படைத்த நீ, உன்னை நான் அணுகுமாறு வகுத்திலையாதலால் உனது சர்வ சக்திக்குப் பங்கம் நேரிடுமென் றையுற்றிரங்கா நின்றே

னென்பது கருத்து. இதனால் அவ்வாறு வகுக்கவேண்டுமென்பது பிரார்த்தனை செய்தபடி. (ச)

30. ஐந்துவகை யாகின்ற பூதபே தத்தினு
லாகின்ற வாக்கைநீர்மேல்
அமர்கின்ற குமிழியென நிற்கின்ற தென்னநா
னறியாத காலமெல்லாம்
புந்திமகி ழுறவுண் டுடுத்தின்ப மாவதே
போந்தநெறி யென்றிருந்தேன்
பூராய மாகநின தருள்வந் துணர்த்தவிவை
போனவழி தெரியவில்லை
எந்தநிலை பேசினு மிணங்கவிலை யல்லா
லிறப்பொடு பிறப்பையுள்ளே
எண்ணினு னெஞ்சது பகீரெனுந் துயிலுறா
திருவிழியு மிரவுபகலாய்ச்
செந்தழலின் மெழுகான தங்கமிவை யென்கொலோ
சித்தாந்த முத்திமுதலே
சிரகிரிவிளங்கவரு தக்ஷிணு மூர்த்தியே
சின்மயா னந்தகுருவே.

(ப - ரை) ஐந்துவகை ஆகின்ற - ஐந்துவகையா யிருக்கிற, பூதபேதத்தினுல் - பூதங்களின் விகற்பத்தால், ஆகின்ற ஆக்கை - உண்டாக்கப்படுகிற சரீரமானது, நீர்மேல் அமர்கின்ற - நீரின்மீது அமைந்த, குமிழி என-மொக்குள் போல, நிற்கின்றது என்ன-நிற்கிறதென்றும், நான் அறியாதகாலமெல்லாம் - நான் உணராத காலமுழுதும், புந்தி மகிழ் உற - மனமகிழ்ச்சி கொள்ளும்படி உண்டு உடுத்து இன்பம் ஆவதே - புசித்து உடுத்து இன்பம் நுகர்வதே, போந்த நெறி என்று இருந்தேன் - கைவந்த (நல்ல) மார்க்கமென்று கருதியிருந்தேன், நினது அருள் வந்து - உன் திருவருள்வந்து, பூராயமாக உணர்த்த - ஆத்யந்தமாகத் தெரிவிக்க, இவை - இவைகள், போனவழி தெரிய இல்லை - போனவழி (இன்னதென்று) தோற்றவில்லை, எந்த நிலைபேசினும் - எந்தநிலையை எடுத்துப்பேசினுலும், இணங்க இல்லை-சம்மதிக்கஇல்லை, அல்லால் - அல்லாமலும், இறப்பொடு பிறப்பை - மரணத்துடன் ஜனனத்தையும், உள்ளே எண்ணினுல் - மனத்தில் நினைத்தால். நெஞ்சது - மனமானது, பகீர் எண்ணும் பகீரென்கின்றது. இருவிழியும் - இரு கண்களும், துயில் உறாது - நித்திரை செய்யா, அங்கம் - உடலானது, இரவுபகலாய் - இராப்பகலாக, செந்தழலில்—செந்தீயில் இட்ட, மெழுகு ஆனது - மெழுகா யுருகுகின்றது. இவை என் - இத்தன்மைகள் என்னிடத்துண்டாவதற்குக் காரணம் யாது, சித்தாந்த முத்தி முதலே—எ - று.

பூதபஞ்சீகரணத்தா லாக்கப்படுகின்ற சரீரமென்றபடி "ஐந்துவகையாகின்ற பூதபேதத்தினுலாகின்ற ஆக்கை" என்ருர்.

நிலமுதலிய பஞ்சபூதபரிணமம் சரீரமாகையால் " ஐந்து வகையாகின்ற பூதபேதத்தினுலாகின்ற வாக்கை" என்றும், அது நிலையின்மை யென்றுகொள்ளாமற் காலங்கழித்தே னென்பார். நீர்மேல்மலர்கின்ற குமிழியென நிற்கின்றதென்ன நானறியாத காலமெல்லாம் புத்திமகிழுற வுண்டுடுத்தின்பமாவதே போந்தநெறியென்றிருந்தேன் "என்றும் இவ்வாருகக் காலங்கழித்தவெனக்குச் சத்திநிபாதம் வருவித்து என்னையும் உன்னையும் உணர்ந்த மலவாசனையொழிந்தது தெரியாதென்பார் "நினதருள்வந் துணர்த்தவைபோனவழிதெரியவில்லை', என்றும், இனிப் பிறப் பிறப் புக்களான் வருந்துன்பங்கள் இல்லையாதலால் அவற்றை நோக்கின்நெஞ்சந் துணுக்குறலால் "இறப்பொடு பிறப்பை யுள்ளே எண்ணினல் நெஞ்சது பகீரெனுந் துயிலுரு திருவிழியும்" என்றும், இதனல் உடல் குழம்ப வருந்துகின்றேன் அதற்குக்காரணமென்னவென்பார் "செந்தழலின் மெழுகான தங்கமிவையென்" என்றும் கூறினர். (ரு)

இது "சென்றநாட்கிரங்கவும் வருமே" என்ருர் சொற்படி கூறியதாம்.

31. காரிட்ட வாணவக் கருவரையி லறிவற்ற
கண்ணிலாக் குழவியைப்போல்
கட்டுண் டிருந்தவெம் வெளியில்விட் டல்லாங்
காப்பிட்ட தற்கிசைந்த
பேரிட்டு மெய்யென்று பேசுபாழ்ம் பொய்யுடல்
பெலக்கவிளை யமுதமூட்டிப்
பெரியபுவ னத்தினிடை போக்குவர வுறுகின்ற
பெரியவிளை யாட்டமைத்திட்
டேரிட்ட தன்சுருதி மொழிதப்பி னமனைவிட்
டிடருற வுறுக்கியிடர்தீர்த்
திரவுபக லில்லாத பேரின்ப வீட்டினி
லிசைந்துதுயில் கொண்மினென்று
சீரிட்ட வுலகன்னை வடிவான வெந்தையே
சித்தாந்த முத்திமுதலே
சிரகிரி விளங்கவரு தக்ஷிணு மூர்த்தியே
சின்மயா னந்தகுருவே.

(ப-ரை) கார்இட்ட - கருமையாகிய, ஆணவக்கரு அறையில் - ஆணவமல நிறைந்த கருப்பாசயமாகிய சிறுவீட்டில், அறிவு அற்ற - உணர்ச்சியில்லாத, கண் இல்லா-கண்ணற்ற, குழவியைப்போல்- குழந்தையைப்போல , கட்டுண்டு

இருந்தஎம்மை - பிணிபட்டிருந்த எங்களை, வெளியில்விட்டு - வெளியில் வரச் செய்து, அல்லல் ஆம் காப்பு இட்டு - துன்பமாகிய காவலை அமைத்துஅதற்கு இசைந்த பேர் இட்டு-அதற்குப்பொருத்தமான நாமகரணஞ்செய்து, மெய்யென்றுபேசு - உண்மையென்று பேசப்படுகின்ற, பாழ்,பொய் உடல் - பாழாகிய நிலையற்ற சரீரமானது, பெலக்க- வலிமைபெறும்படி, விளை அமுதம் ஊட்டி விளைகின்ற (பலவகை) உணவுகளை உண்பித்து, பெரிய புவனத்தினிடை-பெரிதாகிய பூலோகத்தில். போக்குவரவு உறுகின்ற - இறப்புப் பிறப்புகளாகப் பொருந்துகின்ற, பெரியவிளையாட்டு அமைத்திட்டு -பெரிதாகிய திருவிளையாடலை யமையச்செய்து, ஏர்இட்ட - அழகுபொருந்திய, தன்மொழி - தன்சொல்லாகிய, சுருதி - வேதமார்க்கத்தில் தப்பில்-தவறினால் (அவர்களை)நமனைவிட்டு - யமனை அனுப்பி, இடர் உற உறுக்கி - துன்பம் மிகும்படி தண்டித்து இடர்தீர்த்து - (பின்னர்) அத்துன்பத்தையும் நீக்கி, இரவுபகல் இல்லாத - இராப் பகல்கள் அற்ற, பேரின்பவீட்டினில் இசைந்து - பேரானந்த வீட்டில்பொருந்தி துயில்கொண்மின் என்று - (இளியேனும்) தூங்குங்கள் என்று, சீரிட்ட (எல்லாச் சிறப்புகளையும்) அமைத்துவைத்த, உலகு அன்னை வடிவு ஆனஎந்தையே உலகமாதாவின் ரூபமான எமது தந்தையே, சித்தாந்தமுத்தி முதலே —எ- று,

இருளொளிகளின்றி யெப்பொழுதும், தேஜோராசியாய்விளங்குமோர் ஒளிப்பிழம்பு என்பார். ''இரவுபகலில்லாத பேரின்பவீடு'' என்றார் இதனைச் சுயஞ்சோதி யென்பார். (சு)

32. கருமருவு குகையனைய காயத்தி னடுவுட்
களிம்புதோய் செம்பனையயான்
காண்டக விருக்கநீ ஞானவனன் மூட்டியே
கனிவுபெற வுள்ளுருக்கிப்
பருவம தறிந்துநின் னருளான குளிகைகொடு
பரிசித்து வேதிசெய்து
பத்துமாற் றுத்தங்க மாக்கியே பணிகொண்ட
பக்ஷத்தை யென்சொல்லுகேன்
அருமைபெறு புகழ்பெற்ற வேதாந்த சித்தாந்த
மாதியா மந்தமீதும்
அத்துவித நிலையரா யென்னையாண் டுன்னடிமை
யானவர்க ளறிவினூடும்
திருமருவு கல்லா லடிக்கீழும் வளர்கின்ற
சித்தாந்த முத்திமுதலே
சிரகிரிவி ளங்கவரு தக்ஷிண மூர்த்தியே
சின்மயா னந்தகுருவே.

(ப - ரை) கருமருவு குகை அனைய - நருப்பாசயத்திற் பொருந்திய குகையைப்போன்ற, காயத்தின் நடு உள் - உடலினடுவில், களிம்புதோய்செம்பு அனைய - களிம்பு பற்றிய தாமிரத்தைப்போன்ற, யான்-நான், காண்கத இருக்க - காணலாம்படி இருக்க, நீ ஞான அனல் மூட்டி - நீ ஞானக்கினியை மூள்வித்து. கனிவுபெற - இளகும்படி, உள் உருக்கி-உள்ளேதானேஉருகச்செய்து பருவமது அறிந்து - பக்குவமுணர்ந்து, நின் அருள்ஆன - உன் திருவருளாகிய, குளிகைகொடு பரிசித்து - குளிகையினால் தீண்டி, வேதிசெய்து - வேதித்து, பத்துமாற்றுத் தங்கம் ஆக்கி - பத்துமாற்றுப் பசும் பொன்னாகச் செய்து பணிகொண்ட - (என்னை) அடிமையாகக் கொண்ட, பட்சத்தை - (உனதுபெருங்) கருணையை, என்சொல்லுகேன் - என்னென்றுரைப்பேன், அருமைபெறு - அருமையைச் கொண்ட, புகழ்பெற்ற கீர்த்தியையடைந்த, வேதாந்த சித்தாந்த - வேதாந்த சித்தாந்தங்களாகிய, ஆதியாம் அந்தமீதும் - முதலீறுகளின் மேலும், அத்துவிதநிலையராய் - அத்துவிதநிலையையுடையராகி,என்னை ஆண்டு - என்னை ஆட்கொண்டு, உன்அடிமைஆனவர்கள் - உனக்குஅடிமைப்பட்டவர்களது, அறிவின் ஊடும் அறிவினிடத்தும், திருமருவு - அழகுபொருந்திய கல்லால் அடிக்கீழும் - கல்லாலமரத்தின் அடியிலும், வளர்கின்ற - வாழ்ந்திராநின்ற, சித்தாந்த முத்தி முதலே —எ - று.

தன்மாயாசம்பந்தப்பட்டு இருந்தமையால் தன்னைக் களிம்பொடு கூடிய செம்பாகவும், அவ்வாறாகிய தன்னை, களிம்பை நெருப்பிலிடுவது போலஞானக்கினியில் தகிப்பித்து பின்பு அச்செம்பினைப் பக்குவமறிந்து குளிகையால் வேதிப்பதுபோல, அருளான குளிகையாற் பரிசித்துவேதி செய்து பின்பு அது பத்துமாற்றப்பசும்பொன்னாவதுபோல,மலகேவலியாக்கி யாண்டமுறைமைநோக்கி "கருமருவுகுகையனைய * * * * * * பத்து மாற்றுத் தங்கமாக்கியே பணிகொண்ட பட்சத்தை யென் சொல்லுவேன்,, என்றார். வேத முடிவாகிய உபநிடதப்பொருளும் ஆகமாந்தமாகிய சித்தாந்தப்பொருளுமே யவ்விறைவனிடமென்பார், வேதாந்த சித்தாந்த மாதியா மந்தமீதும் என்றும், அவன் மெய்யுணர்ந்தா ருள்ளத்தும் கல்லாலடியினு மிகுந்தா னென்பார் ,,அத்துவித நிலையரா யென்னை யாண்டுன்னடிமை யானவர்க ளறிவினூடும் திருமருவுகல்லாலடிக்கீழும் வளர்கின்ற" என்றுங் கூறினர். இச்செயுள் தம்மை யடிமை கொண்ட முறைமையைக் கூறியவாறென்க.

தங்கம்ஆக்குதல் பணிசெய்தற்காதலால் தங்கமாக்கிப் பணிகொண்டஎன வேறுமொரு பொருள் தோன்றுமாறு கூறினர். வேதி தரிசவேதி பரிசவேதி யென இருவகைத்து. இவற்றுள் தரிசவேதி இரும்பு முதலியவற்றின் முன் காட்டப் பொன்னாக்குவது, பரிசவேதி பிறஉலோகங்களைத் தொடப் பொன்னாக்குவது. (எ)

33. கூடுத லுடன்பிரித லற்றுநிர்த் தொந்தமாய்க்
குவிதலுடன் விரிதலற்றுக்
குணமற்று வரவினொடு போக்கற்று நிலையான
குறியற்று மலமுமற்று
நாடுதலு மற்றுமேல் கீழ்நடுப் பக்கமென
நண்ணுதலு மற்றுவிந்து
நாதமற் றைவகைப் பூதபே தமுமற்று
ஞாதுருவின் ஞானமற்று
வாடுதலு மற்றுமே லொன்றற் றிரண்டற்று
வாக்கற்று மனமுமற்று
மன்னுபரி பூரணச் சுகவாரி தன்னிலே
வாய்மடுத் துண்ட வசமாய்த்
தேடுதலு மற்றவிட நிலையென்ற மௌனியே
சித்தாந்த முத்திமுதலே
சிரகிரி விளங்கவரு தக்ஷிணா மூர்த்தியே
சின்மயா னந்தகுருவே.

(ப-ரை.) கூடுதலுடன் பிரிதல் அற்று-சேருதலோடு பிரிதலும் இல்லாததாகி, நிர்த்தொந்தம் ஆய்-தொந்த மில்லாததாகி, குவிதலுடன் விரிதல் அற்று கூம்புதலும் இல்லாததாகி, குணம் அற்று-நிர்க்குணமாகி, வரவினொடு போக்கு அற்று-வருகையும் போக்கும் இல்லாததாகி, நிலையான குறி அற்று-நிலையாகிய அடையாளம் இல்லாததாகி, மலமும் அற்று—மலரகிதமாகி, நாடுதலும் அற்று-நினைத்தலும் இல்லாததாகி, மேல் கீழ் நடு பக்கம் என-மேல் கீழ் நடு பக்கமென்று. நண்ணுதலும் அற்று-(சொல்லப்) பொருந்துதலும் இல்லாததாய், விந்து நாதம் அற்று விந்துநாதங்கள் இல்லாததாய் ஐவகை பூதபேதமும் அற்று-பஞ்சபூத விகற்பங்களும் இல்லாததாய், வாடுதலும் அற்று-வாட்டமடைதலும் இல்லாததாய், மேல்-மேலும், ஒன்று அற்று-ஒன்றுந்தன்மை இல்லாததாய், இரண்டு அற்று-இரண்டாந்தன்மை இல்லாததாய், வாக்கு அற்று-வார்த்தைஇல்லாததாய், மனமும் அற்று - மனமும் இல்லாததாய். மன்னு-நிலைபெற்ற பரிபூரணம்-பரிபூரணமாகிய, சுகவாரி தன்னில்-இன்பக்கடலில், வாய்மடுத்து உண்டு-வாய்மடுத்துக்குடித்து, அவசமாய்-பரவசமாய், தேடுதலும் அற்ற இடம்-தேடுதலும் இல்லாத இடம், நிலை என்ற - உண்மைநிலையென்று உபதேசித்த; மௌனியே - மௌனகுருவே, சித்தாந்த முத்திமுதலே—எ - று.

ஞாதுரு - காண்பவன். ஞானம் - காணும்கருவியாகிய அறிவு.

எல்லாப் பொருள்களிலும் ஒட்டியும் ஒட்டாதிருத்தலை "கூடுதலுடன் பிரிதலற்று' என்றும், சுகதுக்கங்களில்லாமையை, 'நிர்த்தொந்தமாய்' என்றும்,

விருத்தி க்ஷயமில்லாமையை, 'குவிதலுடன் விரிதலற்று' என்றும், பிறப்பிறப்பின்மையை 'வரவினொடு போக்கற்று' என்றும், நாமரூபமின்மையை 'நிலையான குறியற்று' என்றும், சுத்தமாயையின்நீக்கத்தை 'விந்து நாதமற்று' என்றுங்கூறினர். (அ)

34. தாராத வருளெலாந் தந்தருள மௌனியாய்த்
 தாயனைய கருணைகாட்டித்
தாளிணையென் முடிசூட்டி யறிவிற் சமாதியே
 சாசுவத சம்ப்ரதாயம்
ஓராமன் மந்திரமு முன்னுமன் முத்திநிலை
 யொன்றோ டிரண்டெனுமல்
ஒளியெனவும் வெளியெனவு முருவெனவு நாதமா
 மொலியெனவு முணர்வுறுமல்
பாராது பார்ப்பதே யேதுசா தனமற்ற
 பரமவனு பூதிவாய்க்கும்
பண்பென் றுணர்த்தியது பாராம லந்நிலை
 பதிந்தநின் பழவடியர்தம்
சீரா யிருக்கநின தருள்வேண்டு மையனே
 சித்தாந்த முத்திமுதலே
சிரகிரி விளங்கவரு தக்ஷிண மூர்த்தியே
 சின்மயா னந்தகுருவே.

(ப - ரை.) தாராத அருள் எல்லாம் - அனுக்கிரகிக்கக் கூடாத உனது திருவருள் முழுதும், தந்து அருள் - அனுக்கிரகிக்கும்படி, மௌனி ஆய் - மௌனகுருவாகி, தாய் அனைய - தாயைப்போன்ற, கருணைகாட்டி-கிருபைசெய்து தாள் இணை - உபய திருவடிகளையும், என் முடிசூட்டி – என்சிரசில் தரித்து, அறிவில் சமாதியை - அறிவினிடத்துக் கூடும் நிஷ்டையே, சாசுவத சம்ப்ரதாயம் (என்று) - நிலையாகிய சாம்பிரதாயமென்றும, ஓராமல் - பகுத்தறியாமலும், மந்திரமும் உன்னமல் - மந்திரத்தை நினைக்காமலும், முத்தி நிலை-மோக்ஷநிலையானது, ஒன்றோடு இரண்டு என்னுமல் - ஒன்று இரண்டு என்று (பேதப்பட) சொல்லாமலும், ஒளி எனவும் ஒளியென்றும், வெளி எனவும் - வெளியென்றும், உரு எனவும் - உரு என்றும், நாதம் ஆம் ஒலியெனவும் - நாதமாகிய ஒலியென்றும், உணர்வு உறுமல் - அறியாமல், பாராது பார்ப்பதே - காணுமற் காண்பதே, ஏது சாதனம் அற்ற - எவ்வகைப்பட்ட சாதனங்களும் இல்லாத, பரம அநுபூதி வாய்க்கும் பண்புஎன்று - மேலானஅநுபூதி கிடைத்தற்குயப உபாயமென்றும், உணர்த்தியது - நீ அறிவுறுத்தினதை, பாராமல்-பகுத்தறியாமல், அந்நிலைபதிந்த - அந்த நிலையிற்றங்கிய, நின் பழ அடியர்தம்

உனது பழைய அடியார்களது, சீர் ஆய் இருக்க - சிறப்பை யடைந்திருக்க, நினது அருள் வேண்டும் - உன் திருவருள் வேண்டும், ஐயனே-கடவுளே, சித்தாந்த முத்தி முதலே—எ - று.

தற்போதத்தை முன்னிட்டுப்பாராமல் திருவருளை முன்னிட்டுப்பார்ப்பதைப்பாராது பார்ப்பதென்றார்.

மானைக்காட்டி மானைப் பிடிப்பார்போல் நின்திருவருள் ஞானம்பெற, மௌனகுருவாகிய இருவுருவங் கொண்டெழுந் தருளிவந்தாய் என்பார் 'தாராதவருளெலாந் தந்தருள மௌனியாய்த் தாயனைய கருணை காட்டி' என்றும், அங்ஙனம் காக்ஷிதந்தது மன்றித் திருவடி தீக்ஷைசெய்தானென்பதுந் தோன்ற, 'தாளிணையென்முடிசூட்டி' என்றும், அறிவிடத்துக்கூடும் சமாதியே வேண்டுமென்பதை யறியாமலிருந்தேன் என்பார் "அறிவில் சமாதியே சாசுவதசம்ப்ரதாயம்" என்றும், அதன்றி மந்திரமுன்னுமலும், முத்தி நிலையை ஒன்றென்றும் இரண்டென்றும் சொல்லாமலும் இன்னம் பலபடக் கொள்ளாமலும் பாராமற் பார்க்குநெறியே சிவானுபூதிச் செல்வனென்பார் 'ஏது சாதனமற்ற பரமவனுபூதிவாய்க்கும் பண்பு' என்று அதனை அறிவுறுத்தியும், தனக்கு அவனருள் வேண்டும் என்பார், 'உனதருள்வேண்டும்' என்றும் கூறினார். (௬)

35\. போதமா யாதிநடு வந்தமு மிலாததாய்ப்
புனிதமா யவிகா ரமாய்ப்
போக்குவர வில்லாத வின்பமாய் நின்றநின்
பூரணம் புகலிடமதா
ஆதரவு வையாம லறிவினை மறைப்பதுநி
னருள்பின்னு மறிவின் மைதீர்த்
தறிவித்து நிற்பதுநி னருளாகி யெளியனேற்
கறிவான தேதறிவிலா
ஏதம்வரு வகையேது வினையேது வினைதனக்
கீடான காயமேதென்
இச்சாசு தந்தரஞ் சிறிதுமிலை யிகபர
மிரண்டினுண் மலைவுதீரத்
தீதிலருள் கொண்டினி யுணர்த்தியெனை யாள்வையோ
சித்தாந்த முத்திமுதலே
சிரகிரி விளங்கவரு தக்ஷிண மூர்த்தியே
சின்மயா னந்தகுருவே.

(ப - ரை.) போதமாய் - ஞானவடிவமாகி, ஆதி நடு அந்தமும் இல்லாதது ஆய் - முதலிடையீறற்றதாய், புனிதமாய்- பரிசுத்தமாய் அவிகாரம் ஆய்-விகாரமற்றதாய், போக்குவரவு இல்லாத இன்பம் ஆய் - போக்குவரவற்ற சுகவடி

வாய், நின்ற - நிலைபெற்ற, நின் பூரணம்-உனது பரிபூரண நிலையையே, புகல் இடமது ஆ - அடைக்கலத் தானமாகக்கொண்டு, ஆதரவு வையாமல் - அதனிடத்து அன்புவைக்காது, அறிவினை மறைப்பதும்—என்னறிவைத் தடுப்பதும், நின் அருள் - உன் திருவருளே, பின்னும் இன்னும், அறிவு இன்மை தீர்த்து- அறியாமையை நீக்கி, அறிவித்து நிற்பதும் - (என் மனதில்) உணர்த்தி நிற்பதும், நின் அருள் - உன் திருவருளே, ஆகில்-ஆனால், எளியனேற்கு - எளியேனுக்கு, அறிவு ஆவது எது-அறிவாவது யாது, அறிவு இல்லா ஏதம் வருவகை எது - அறிவில்லாத குற்றம் உண்டாகும் வகையாது, வினை எது - (அறிதற்குக் காரணமான) வினையாது, வினை தனக்கு ஈடான காயம் எது — வினைக்கு இடமான சரீரம் யாது, என் இச்சாசுதந்தரம் - என்னுடைய இச்சாசுதந்தரங்கள், சிறிதும் இல்லை - கொஞ்சமும் இல்லை, இகபரம்இரண்டினுள் - இகபரம் என்னும் இரண்டிடத்தும், மலைவு தீர-எனது மயக்கமகல, தீது இல் அருள் கொண்டு - குற்றமற்ற திருவருளால், இனி உணர்த்தி - இனியேனும் அறிவுறுத்தி, என்னை ஆள்வையோ — என்னை அடிமை கொள்வையோ, சித்தாந்த முத்திமுதலே—, எ - று.

"அறிவினை மறைப்பது நின்னருள், அறிவின்மை தீர்த்தறிவித்து நிற்பதுநின்னருள்" என்றது, திரோபவாநுக்கிரஹகாரணன் நீயெனக் கூறியதாம்.

ஞானசொரூபமே இறைவனது பூரணநிலையி னிலக்கணம் என்பார்'போதமாய், என்றும், அதற் கடிநடுமுடி யென்பன வொன்றுமில்லை யென்பார் 'ஆதிநடு வந்தமு மிலாததாய்' என்றும், அது தூயதும் நிர்விகாரத்ததும் என்பார் 'புனிதமாய் அவிகாரமாய்' என்றும் இவ்வகை இலக்கண முடையதனைச் சிறிதேனும் புகலிடமாகக் கொள்ளாவகை, அறிவை மறைப்பதும் அறிவைவிளக்குவதும் நின்திருவருளே யென்பார், ஆதரவுவையாம லறிவினை மறைப்பது நினருள் பின்னும் அறிவின்மை தீர்த்து அறிவித்து நிற்பதும் நினருள்' என்றும், அஃதாயின் யான் சுதந்தரஹீனனாதலால் ,எளியனேற் கறிவாவதேது, என்றும், அவ்வறிவின்மையால் 'ஏதம்வரு வகையேது' அவ்வறி வறியாமைகட்குக் காரணமான வினையேது' அவ்வினைப்போகமாகிய 'காமமேது,என்றும் எனக்கெனச் செயலொன் றில்லையாதலால், என்னிச்சாசுதந்தரஞ் சிறிதுமிலை என்றும், எல்லாம்உன்திருவருட்பாரமென்பார் 'தீதிலருள் கொண்டினியுணர்த்தியென்னை யாள்வையோ' என்றும் முறையே யொன்றன்பி னொன்றாக வரிசைபடக் கூறினார். (கo)

36. பத்திநெறி நிலைநின்று நவகண்ட பூமிப்
பரப்பைவல மாகவந்தும்
பரவையிட மூழ்கியு நதிகளிடை மூழ்கியும்
பசிதாக மின்றியெழுநா
மத்தியிடை நின்றுமுதிர் சருகுபுனல் வாயுவினை
வன்பசி தனக்கடைத்தும்

மவுனத் திருந்துமுயர் மலைநுழை தனிற்புக்கு
 மன்னுதச நாடிமுற்றும்
சுத்திசெய் தும்மூல ப்ராணனே டங்கியைச்
 சோமவட் டத்தடைத்தும்
சொல்லரிய வமுதுண்டு மற்பவுடல் கற்பங்க
 டோறுநிலை நிற்கவீறு
சித்திசெய் துஞ்ஞான மலதுகதி கூடுமோ
 சித்தாந்த முத்திமுதலே
சிரகிரி விளங்கவரு தக்ஷிண மூர்த்தியே
 சின்மயா னந்தகுருவே.

(ப - ரை) பத்திநெறி நிலைநின்றும் - பத்திமார்க்கத்தில் நிலையாய் நின்றும், நவகண்ட பூமிபரப்பை - ஒன்பது கண்டங்களாகப்பிரிந்த பூமியின் விஸ்தீரணத்தை, வலமாகவந்தும் - பிரதக்ஷிணமாய்ச் சுற்றியும், பரவை இடை மூழ்கியும் - சமுத்திரத்தில் ஸ்நாநஞ்செய்தும், நதிகள் இடைமூழ்கியும் - நதிகளில் ஸ்நாநஞ்செய்தும், பசி தாகம் இன்றி - பசிதாகங்களில்லாமல், எழுநாமத்தி இடை நின்றும் - அக்கினியின் மத்தியினின்றும், உதிர் சருகு-உதிர்கின்ற உலர்ந்த இலைகளையும், புனல் வாயுவினை - ஜலத்தையும் வாயுவையும், வன்பசி தனக்கடைத்து - வலிய பசிக்கு வயிற்றில் நிரப்பி. மவுனத்து இருந்தும்-மௌனநிலையில் இருந்தும், உயர்மலை நுழைதனில் புக்கும் - உயர்ந்த மலைக்குகைகளில் பிரவேசித்தும், மன்னு - நிலைபெற்ற, தசநாடி முற்றும் - தசநாடி முழுதையும், சுத்திசெய்தும் – சுத்தப்படுத்தியும், மூலப்ராணனோடு - மூலாதாரத்திலுள்ள ப்ராணவாயுவுடன், அங்கியை - அக்கினியை, சோமவட்டத்து அடைத்தும் – சந்திரமண்டலத்திற் செலுத்தியும், சொல் அரிய - சொல்லுதற்கரிதாகிய, அமுது உண்டும் - அமிர்தத்தைப் புசித்தும், அற்ப உடல் - அற்ப சரீரம், கற்பங்கள் தோறும் நிலைநிற்க - ஊழிக்காலங்கள் தோறும் நிலைநிற்கும்படி, வீறு - மேலான, சித்தி செய்தும் - சித்தியை யடைந்தும், ஞானம் அலது- ஞானமுண்டானாலல்லது, கதி கூடுமோ - மோக்ஷம் சித்திக்குமோ, சித்தாந்த முத்தி முதலே—எ - று.

முத்தடைதீர்ந்த ஞான முதித்தால் அன்றி ஒருவற்கு முத்தி சித்தியாதென்பது இதனாற் கூறப்பட்டது. அஞ்ஞான சந்தேக விபரீதங்கள் முத்தடை யெனப்படும்.

கீழ்விதேகம், மேல்விதேகம், வடவிதேகம், தென்விதேகம். வடவிரேபதம், தென்னிரேபதம், வடபாதம், தென்பாதம், மத்திமகண்டம் என்பன நவகண்டங்கள். சுழுமுனை, இடை, பிங்கலை, காந்தாரி, அத்தி, சிகுவை, அலம்புடை, புருடன், குரு, சங்கினி, என்பன தசநாடிகள். தீக்கடவுளுக்கு நாக்கள் ஏழாதலால், தீ எழுநா வெனப்பட்டது. கற்பங்களுண்டு நாடிகளின் மலிநமகற்றலே தசநாடி சுத்திசெய்தலென்பார்.

ஞானம் வாயிலாக முத்தியெய்தற்பாலதாகலான், பூப்பிரதக்ஷிணம் செய்தும், தீர்த்த ஸ்நாநஞ்செய்தும், பஞ்சாக்கினி மத்தியில் நின்றும், சரு கருந்தியும், சலபக்ஷணம், வாயுபக்ஷணம்செய்தும், எண்வகை யோகவுறுப்பினைப் பயின்றும், மதியமுதமுண்டும், எண்வகைச் சித்திபெற்றும் முத்தி யில்லையென்பார், "ஞானமலது கதிகூடுமோ" என்றார், "மூல நிலத்தி லதோ முகமாய் முகிழ்த்து விழியின்பொடுதுயி லு-மூரிப் பாம்பைக் காலனலை மூட்டி யெழுப்பி நிலமாறும். சிலமொடும்போய்த் தெரிசித்துச் செழுமாமதியி னமுதகடல் - தேக்கித்திளைத்து" என்றபடி "மூலப்ராணனோ டங்கியைச் சோமவட்டத்தடைத்தும்" என்றார். மூலாதாரம், சுவாதிட்டானம், மணிபூரம்,அநாகதம், விசுத்தி, ஆக்ஞை என்பவை ஆறு ஆதாரங்கள்.

### மௌனகுரு வணக்கம்.

37\. ஆசைநிக ளத்தினை நிர்த்தூளி படவுதறி
யாங்கார முளையையெற்றி
அத்துவித மதமாகி மதமாறு மாறுக
வங்கையின் விலாழியாக்கிப்
பாசவிரு டன்னிழ லெனச்சுளித் தார்த்துமேற்
பார்த்துப் பரந்தமனதைப்
பாரித்த கவளவாய்ப் பூரிக்க வுண்டுமுக
படாமன்ன மாயைநூறித்
தேசுபெற நீவைத்த சின்முத் திராங்குசச்
செங்கைக்கு ளேயடங்கிச்
சின்மயா னந்தசுக வெள்ளம் படிந்துநின்
றிருவருட் பூர்த்தியான
வாசமுறு சற்சார மீதென்னை யொருஞான
மத்தகஜ மெனவளர்த்தாய்
மந்த்ரகுரு வேயோக தந்த்ரகுரு வேமூலன்
மரபில்வரு மௌனகுருவே.

(ப-வுரை.) ஆசை நிகளத்தினை - ஆசையாகிய விலங்கை, நிர்த்தூளிபட உதறி - தூளியாகும்படி உதறி, ஆங்கார முளையை யெற்றி - ஆங்காரமாகிய அங்குரத்தைப் பிடுங்கி யெறிந்து, அத்துவித மதம்ஆகி - அத்துவிதமென்கிற மதத்தை மேற்கொண்டு, மதம் ஆறும் - ஆறுமதங்களும், ஆறு ஆக - நதிகளாக, அங்கையின் விலாழியாக்கி - துதிக்கையின் நுரையாகச்செய்து, பாச இருள் - பாசமாகிய இருள். தன்நிழல்என- தந்நிழலென்று நினைத்து, சுளித்து கோபித்து, ஆர்த்து ஆர்ப்பரித்து, மேல் — மேலே, பார்த்து பரந்த - நோக்கிப் பரவிய, மனதை - மனத்தை, பாரித்த கவளமாய் - பெருங்கவளமாய், பூரிக்க உண்டு - நிறையப்புசித்து, முகபடாம் அன்ன - நெற்றிப்படத்தை யொத்த மாயை நூறி - மாயையை அரைத்து, தேசுபெற - ஒளிபொருந்த, நீவைத்த -

நீஅமைத்த, சின் முத்திராங்குசம்-சின் முத்திரையாகிய அங்குசத்தைத் தரித்தசெங்கைக்குள்ளே அடங்கி – செங்கையில் அடங்கி, சின்மயானந்தசுக வெள்ளம் படிந்து -ஞானமாகியபேரானந்த இன்பவெள்ளத்திற்குளித்து, நின் திரு அருள் பூர்த்தியான - உனது திருவருளின் நிறைவாகிய! வாசம் உறு சற்சாரம் மீது - வசித்தல் பொருந்திய நல்ல கூடத்தில், என்னை - அடியேனை, ஒரு ஞானமத்தகஜம்என வளர்த்தாய் - ஒப்பற்றஞானமதத்தையுடைய யானை போல வளர்த்தனை, மந்த்ரகுருவே மந்த்ராசாரியனே, யோகதந்த்ரகுருவே-யோகதந்த்ராசாரியனே, மூலன் மரபில்வரும்- திருமூலரது மரபில்வந்த, மௌனகுருவே - மௌனகுருவே—எ-று.

யோகதந்த்ரம் - யோகநூல். திரு மூலர் பூர்வம் சித்தராயிருந்து, பிறகு அணிமாமுதலிய அஷ்டசித்திகளு முடையராய், மூவாயிரவருடம் நிஷ்டை கூடி, அந்த நிஷ்டானுபவத்தை மூவாயிரம்பாடலாகத் திருமந்திரம் என்றொருநூல்செய்தவர் இது சைவரது பத்தாம் திருமுறை.

தன்னை யானையாகவுருவகஞ்செய்ததற்கேற்பபிறவிக்கு வித்தாகும்ஆசையைச் சங்கிலியாகவும், தன்னைக்கெடுப்பதாகிய ஆங்காரத்தை முளையாகவும், ஒன்றிரண்டென்னு நிலைமதமாகவும், ஏனைச்சமயங்களை விலாழியாகவும், பாசவிருளைச் சுளிப்பதையே தன்னிழலைச் சுளிப்பதாகவும், மனத்தையேகவளமாகவும், மாயையே நெற்றிப்பட்டமாகவும், ।சின்முத்திரையாகிய ஞானமுத்திரையையே அங்குசமாகவும் ஒற்றுமைகருதி யுருவகஞ் செய்தனர்.

இங்கு மதம் ஆறு என்றது உலகாயதம், புத்தம், சமணம், மீமாஞ்சை, பாஞ்சராத்திரம், பாட்டசாரியம் என்பன இவை புறச்சமயங்களாம். விலாழி-அரை. குதிரை தன்வாயாலும், யானை தன் துதிக்கையாலும் உட்கொண்டு உமிழும் நீர் எனவுங்கூறுவர். (௧)

நிகளம் - விலங்கு, கவளம் - வாய்கொண்டவுணவு.

38. ஐந்துவகை யாகின்ற பூதமுத னாதமு
மடங்கவெளி யாகவெளிசெய்
தறியாமை யறிவாதி பிரிவாக வறிவார்க
ளறிவாக நின்றநிலையில்
சிந்தையற நில்லென்று சும்மா விருத்திமேற்
சின்மயா னந்தவெள்ளம்
தேக்கித் திளைத்துநா னதுவா யிருக்கநீ
செய்சித்ர மிகநன்றுகாண்
எந்தைவட வாற்பரம குருவாழ்க வாழவரு
ளியநந்தி மரபுவாழ்க
என்றடியர் மனமகிழ வேதாக மத்துணி
பிரண்டில்லை யொன்றென்னவே

வந்தகுரு வேவீறு சிவஞான சித்திநெறி
மௌனோப தேசகுருவே
மந்த்ரகுரு வேயோக தந்த்ரகுரு வேமூலன்
மரபில்வரு மௌனகுருவே.

(ப - ரை.) ஐந்துவகை ஆகின்ற பூதம் முதல் நாதமும் அடங்க - (பிருதிவிமுதலிய) பஞ்சபூதங்கள் முதல் நாதத்துவம் இறுவாயுள்ள தத்துவங்கள் முப்பத்தாறையும், வெளியாக வெளிசெய்து - பஹிரங்கமாக வெளியிட்டு, அறியாமை அறிவு ஆதி - அறியாமை அறிவு முதலியவற்றை, பிரிவு ஆச அறிவார்கள் - வேறு பிரித்தறியவல்லார், அறிவாகநின்ற நிலையில் - அறிவுவடிவாக நின்ற நிலையின்கண், சிந்தை அற நில் என்று - மனமிறநிற்பாயென்று சும்மா இருத்தி - வாளா இருக்கும்படிசெய்து, மேல் - அதன்மேலும், சின்மயானந்த வெள்ளம் - ஞானமயமாகிய ஆனந்தப் பெருக்கில், தேக்கி திளைத்து - நிறைய அநுபவித்து, நான் அது ஆய் இருக்க - நான் தன்மயமாயிருக்கும்படி, நீ செய்சித்ரம் - நீசெய்த விசித்திரம், மிக நன்று, மிகவும் நன்று, எந்தை-எமது தந்தையாகிய, வடவால் - வடவானிழற்கீழெழுந்தருளிய பரமகுருவாழ்க — பரமாசாரியர்வாழ்க, வாழ அருளிய - அப்படிவாழ்வெய்த அருளிச்செய்த, நந்தி மரபுவாழ்க என்று - நந்திதேவரது திருமரபு வாழ்கவென்று, அடியர் அன்பர்கள், மனமகிழ - மனமகிழும்படி, வேதாகமத்துணிபு வேதாகம நிச்சியமே, இரண்டு இல்லை-இருவகையாயிருக்கவில்லை ஒன்று என்னவே - ஒன்றென்று அருளிச்செய்தற்காகவே, வந்த குருவே - எழுந்தருளிய ஆசாரியனே, வீறு - விஞ்சிய, சிவஞானசித்திநெறி - சிவஞானசித்தி யடைதற்குரிய வழியைத் தரத்தக்க, மௌனோபதேச குருவே - மௌனோபதேசஞ் செய்யவந்த ஆசாரியனே, மந்த்ரகுருவே,—எ - று.

"பூதமுத னாதம்" என்றது பிருதிவிமுதல் நாதாந்தமான முப்பத்தாறுதத்துவத்தை, இதனை "ஆறாறையு நீத்ததன்மே னிலையை" என்னும் அருணகிரிநாதர் திருவாக்கானறிக. அவை ஆன்ம தத்துவம் இருபத்துநான்கு, வித்யாதத்துவம் எழு, சிவதத்துவம் ஐந்து என்பனவாம்.

தத்துவ முப்பத்தாறையுங் கடந்த பகுத்தறிவுடைய பெரியோர் தன்னையுந் தலைவனையுங் காண்டற்குரியராகலின், அவர் தம் சிந்தையிலே சும்மாவிருந்து அறியும்வண்ணம் 'ஐந்துவகையாகின்ற * * * சும்மாவிருத்தி' என்றும், அங்ஙனம் சும்மாவிருந்தறியும் காலத்தில் தோன்றும் சுகாநந்த வெள்ளத்தில் மூழ்கி அதுவாயிருக்க நீ கருணை செய்வயோ சொல்லுநதரமல்லவென்பார்'மேல்சின்மயானந்த வெள்ளந் தேக்கித் திளைத்து நானது வாயிருக்க நீ செய்சித்ர மிகநன்றுகாண்' என்றும் கூறினர். (உ)

39. ஆதிக்க நல்கினவ ராரிந்த மாயைக்கெ
னறிவன்றி யிடமில்லையோ
அந்தரப் புஷ்பமுங் கானலின் னீருமோ
ரவசரத் துபயோகமோ
போதித்த நிலையையு மயக்குதே யபயநான்
புக்கவரு டோற்றிடாமல்
பொய்யான வுலகத்தை மெய்யா நிறுத்தியென்
புந்திக்கு ளிந்த்ரசாலம்
சாதிக்குதே யிதனை வெல்லவு முபாயநீ
தந்தருள்வ தென்றுபுகல்வாய்
சண்மத ஸ்தாபனமும் வேதாந்த சித்தாந்த
சமரசநிர் வாகநிலையும்
மாதிக்கொ டண்டப் பரப்பெலா மறியவே
வந்தருளு ஞானகுருவே
மந்த்ரகுரு வேயோக தந்த்ரகுரு வேமூலன்
மரபில்வரு மௌனகுருவே.

(ப – ரை.) இந்த மாயைக்கு - (பிறவிப்பிணியைப் பெருக்குகின்ற) இந்தமாயைக்கு; ஆதிக்கம் நல்கினவர் ஆர் - (இவ்வளவு) ஏற்றம்கொடுத்தவர் எவர் என் அறிவு அன்றி இடம் இல்லையோ - (இதற்கு) என்னறி வல்லது (நிற்றற்கு) வேறிடமில்லையோ, அந்தரப்புஷ்பமும் - ஆகாயத்தாமரையும், கானலின்நீரும் - கானற்சலமும். ஓர் அவசரத்து உபயோகமாமோ போதித்த நிலைமையும - நீ எனக்குபதேசித்த நிலைமையும், மயக்குதே - மயங்கப்பண்ணுகின்றதே, நான் அபயம் புக்க - நான் அடைக்கலம் அடைந்த, அருள் தோற்றிடாமல் — திருவருள் சிறிதுந் தோற்றுவண்ணம், பொய்யான உலகத்தை — மித்தையாகிய பிரபஞ்சவாழ்வை, மெய்யாநிறுத்தி - உண்மையா.ஸ்தாபித்து, என் புந்திக்குள் - என் அறிவினிடத்தில் இந்த்ரசாலம் - இந்த்ரஜாலத்தை, சாதிக்குதே - நிலைநிறுத்துகின்றதே, இதனைவெல்லவும்-இதைச் செயித்தற்சாகவும்-உபாயம் - (ஒரு) தந்திரத்தை, நீ தந்தருள்வது-நீ உபதேசித்தருள்வது.என்று எந்நாள், புகல்வாய் - சொல்வாய், சண்மதஸ்தாபனமும் - ஆறு மதங்களையும்நிலைப்படுத்தும்வகையும், வேதாந்த சித்தாந்தசமரச நிர்வாக நிலையும் - வேதாந்த சித்தாந்தங்களைச் சமரசமாக நிர்வாகஞ்செய்யத்தக்க அநுபூதி நிலையையும், மாதிக்கொடு - பெரிய திசைகளுடன் கூடிய, அண்டப் பரப்புஎல்லாம் - லோக விஸ்தீர்ணமுழுதும், அறிய - அறியும்படி, வந்தருளும் - வந்து அடியேனுக்கு அனுக்கிரகஞ் செய்த, ஞான குருவே-ஞானசாரியனே, மந்த்ரகுருவே,—எ-று.

இங்குச் சண்மதம் என்றது வைணவம், வாமம், காளாமுகம், மாவிரதம். பாசுபதம், சைவம் என்பவற்றை. இவ்வாறும் அகச்சமயம்.

மாயை யாவரையும் மயக்கத்தக்க மிக்க வல்லமை யுடையதாதலின் அதற்கென் நெஞ்சிடந் தந்தார் யார் என்பார் 'ஆதிக்க நல்கினவராரிந்த மாயைக்கென் னறிவன்றி யிடமில்லையோ' என்றும், அம்மாயா காரியமாகிய உலகம் பொய்யாயிருந்தும் அதை மெய்யாகக்கருதிக் காலங்கழிக்க அமையுமோ என்பார் 'அந்தரப் புட்பமுங் கானலின் னீருமோ ரவசரத் துபயோகமோ' என்றும், அம்மாயையின் வசப்பட்டழியும் அடியேனுக்கு உண்மை ஞானம்பெறவுபாயந் தரவேண்டுமென்பார்'இதனை வெல்லவு முபாயம்நீ தந்தருள்வதென்று புகல்வாய்' என்றும் கூறினர்.

அந்தரப்புட்பம் - கானலினீர் - என்பன இல்பொருள்கள். (௩)

40. மின்னனைய பொய்யுடலை நிலையென்று மையிலகு
விழிகொண்டு மையல்பூட்டும்
மின்னார்க ளின்பமே மெய்யென்றும் வளர்மாட
மேல்வீடு சொர்க்கமென்றும்
பொன்னையழி யாதுவளர் பொருளென்று போற்றியிப்
பொய்வேட மிகுதிகாட்டிப்
பொறையறிவு துறவீத லாதிநற் குணமெலாம்
போக்கிலே போகவிட்டுத்
தன்னிகரி லோபாதி பாழ்ம்பேய் பிடித்திடத்
தரணிமிசை லோகாயதன்
சமயநடை சாராமல் வேதாந்த சித்தாந்த
சமரச சிவானுபூதி
மன்னவொரு சொற்கொண் டெனைத்தடுத் தாண்டன்பின்
வாழ்வித்த ஞானகுருவே
மந்த்ரகுரு வேயோக தந்த்ரகுரு வேமூலன்
மரபில்வரு மௌனகுருவே.

(ப - ரை.) மின் அனைய - (தோற்றம் லயம்முதலியவற்றால்) மின்னல் போன்ற, பொய் உடலை - பொய்யாகிய தேகத்தை, நிலையென்றும் - நிலையுள்ளதென்றும், மை இலகு விழிகொண்டு - மை தீட்டப்பெற்று விளங்குகின்ற கண்களால், மையல்பூட்டும் - காமமயக்கமிட்டுத் தளைசெய்கின்ற, மின்னார்கள் இன்பமே - மாதர்சுகமே மெய்யென்றும் - உண்மை யென்றும், வளர் மாடம் - உயர்ந்த மாளிகைகளின், மேல்வீடு - மேலுப்பரிகைகள், சொர்க்கம் என்றும் - சொர்க்கலோகம்என்றும் பொன்னை-சுவர்ணத்தை அழியாது வளர் பொருள் என்றும் - அழியாமல் வளர்கின்ற பொருளென்றும், போற்றி- பாதுகாத்து. இப்பொய்வேட மிகுதிகாட்டி - இந்தப் பொய்வேஷத்தின் பெருமையைப்பலர்க்கும் வெளிப்படுத்தி, பொறை - பொறுமை, அறிவு - ஞானம், துற

வு-(இருவகைபற்றையுந் துறத்தல், ஈதல் - கொடை, ஆதி முதலாகிய, நல்குணம் எல்லாம் - சற்குணங்க ளெல்லாவற்றையும், போக்கிலே போகவிட்டு - (அவை) செல்லும்வழியில் (வீணே) செல்லவிட்டு, தன் நிகர் இல் - தனக்கொப்பில்லாதலோபாதி – உலோபகுணம் முதலாகிய பாழ் பேய் பிடித்திட - பாழாகிய பிசாசம் பற்றிக்கொள்ள, தரணிமிசை-உலகில், லோகாயதன்-லோகாயதனது, சமயநடைசாராமல் - சமயவொழுக்கத்தைப் பொருந்தாமல், வேதாந்த சித்தாந்த சமரச சிவானுபூதி மன்ன - வேதாந்த சித்தாந்த சமரச சிவானுபூதி நிலேக்கும்படி, ஒருசொல்கொண்டு, என்னைத்தடுத்து ஆண்டு - ஒருமொழியால் என்னைத் தடுத்தாட்கொண்டு, அன்பின் வாழ்வித்த - அன்போடு வாழச்செய்தருளின, ஞானகுருவே - ஞானசாரியனே, மந்த்ரகுருவே—எ - று.

"மின்னனையை பொய்யுடலை நிலையென்று" என்றது, தன்னை உலோகாயதமதஞ்சாரா வண்ணம் சிவானுபூதிப் பெருஞ்செல்வம் வேண்டியிரத்தலின், மின்தோன்றி நின்றழிவதுபோன்ற தேகம் நிலையாமையினை நோக்கி நிற்றலின்அவர்கள் மாதர்போகமேமுத்தி யென்பா ராதலின். 'மையிலகுவிழிகொண்டுமையல்பூட்டும் மின்னார்கள் இன்பமே மெய்யென்றும், என்றும், அவர்கள் கலவிசெய்தற்கிடமாகிய மாடமாளிகையையே சொர்க்கலோகமாகக் கருதுவதனால் 'வளர் மாட மேல வீடு சொர்க்கமென்றும்" என்றும், அப்போகத்துக்குவேண்டும் உபகரணங்கள் பொன்னுதலால் பொன்னையழியாது வம்பொருளென்றும்' என்றும் அதனையேபோற்றி நின்று பொய்வேட்ங்காட்டி யொழிதலின் 'போற்றி இப்பொய்வேட மிகுதிகாட்டி' என்றும், அச்செய்கையால் பொறையுடமை, மெய்யுணர்ச்சி துறவு. ஈகையுடைமை முதலிய நற்குணமெல்லாம் போக்கலின் 'பொறையறிவு துறவீத லாதிநற்குணமெல்லாம் போக்கிலே போகவிட்டு, என்றும், இத்துணைக்கொடுமை புரியவல்ல உலோகாயதமதத்திற் சேர்வது. பிறவிநோய்க்கிடமாகலின் தன்னிகரிலோபாதி பாழ்ம்பேய்ப் பிடித்திடத் தரணிமிசை லோகாயதன் சமயநடை சாராமல்" என்றும், யான் வேதாந்தம் ஆகமாந்தமாகிய சமரசநிலைபெற வேண்டுகின்றேன் அதுஒருமொழியாகிய உபதேசவகையால் அன்றிக்கிட்டாதாகலான் 'வேதாந்த சித்தாந்தசமரசசிவானுபூதி மன்னவொருசொற்கொண்டு' என்றும், இறைவனல்லது என்னைத் தடுத்தாண்டபின்வாழ்வித்த ஞானகுருவே' என்றும்,கூறினார். உலோகாயதன் தேகமேயான்மா, போகமேமுத்தி என்பன். இதனை.

"வாசமார் குழலி னார்கண் மணியல்குற் றடத்தே மூழ்கி
நேசமார் குமுதச் செவ்வா யமுதினை நிறையவுண்டு
தேசுலா மணிமென் றோண்மேற் சேர்ந்துவீற் றிருந்தி டாத
மாசுலா மனத்தோ ரெல்லா மறுமைகொண் டறிவர் மன்னோ"—என்றும்.
"மதிநிலா நுதலா ரோடு மணிநிலா முன்றி லேறி
முதிர் நிலா வெறிப்பச் செவ்வா யிளநிலா முகிழ்ப்ப மொய்த்த
கதிர்நிலா வடங்கொள் கொங்கைக் கண்கண்மார் பகல மூழ்கும்
புதுநிலா விநயன் போகம் விடுவர்புன் சமயத்தோரே"—என்றும் வரும்

சிவஞான சித்தியார் பரபக்கத் திருவிருத்தங்களால் உலோகாயதன் கொள் கையை யறிக. (ச)

41. போனக மிருக்கின்ற சாலையிடை வேண்டுவ
புசித்தற் கிருக்குமதுபோல்
புருஷர்பெறு தர்மாதி வேதமுடனாகமம்
புகலுமதி னுலாம்பயன்
ஞானநெறி முக்யநெறி காட்சியனு மானமுத
னனவிதங்க டேர்ந்து
நானு னெனக்குழரு படைபுடை பெயர்த்திடவு
நான்குசா தனமுமோர்ந்திட்
டானநெரி யாஞ்சரியை யாதிசோ பானமுற்
றணுபக்ஷ சம்புபக்ஷம்
ஆமிரு விகற்பமு மாயாதி சேவையு
மறிந்திரண் டொன்றென்னுமோர்
மானத விகற்பமற வென்றுநிற் பதுநமது
மரபென்ற பரமகுருவே
மந்த்ரகுரு வேயோக தந்த்ரகுரு வேமூலன்
மரபில்வரு மௌனகுருவே.

(ப - ரை.) போனகம் இருக்கின்ற சாலையிடை - அன்னமானது (சேக ரிக்கப்பட்டு) இருக்கும் சத்திரத்தில், புசித்தற்கு வேண்டுவ - உண்ணுதற்கு வேண்டிய பொருள்க ளெல்லாம், இருக்குமதுபோல் - இருக்கும் வகைபோல புருஷர்பெறு-புருஷரால் அடையப்படுகின்ற, தர்மாதி - அறம் பொருள் இன் பம் வீடு என்னும் (சதுர்வித) புருஷார்த்தங்களும், வேதமுடன்ஆகமம் - (நா ன்கு) வேதத்துடன் (இருபத்தெட்டு) ஆகமங்களும் புகலும் அதினல் ஆம்ப யன் - சொல்லுகின்ற அதனுலுண்டாகும் பலனும், ஞானநெறி முக்யநெறி - ஞானவழியாகிய முக்கியவழியும், காட்சி அனுமானம் - காட்சி அனுமானம்எ ன்கிற பிரமாணங்களும், முதல்-முதலாகிய, நானுவிதங்கள் தேர்ந்து- பலவகை மார்க்கங்களையு மாராய்ந்து, நான் நான் என் நான் நான் என்று, குழறுபடை- குளறுபாட்டை, புடை பெயர்த்திடவும் தூளிசெய்யவும், நான்கு சாதனமும் ஓர்ந்திட்டு - சாதந சதுஷ்டயத்தையும் விசாரித்தறிந்து, ஆனநெறிஆம்சரியை ஆதி சோபனம் உற்று - நல்ல நெறியாகிய சரியை - முதலாகிய படித்தாங்க ளை யடைந்து, அணுபக்ஷ சம்புபக்ஷம் ஆம் இருவிகற்பமும் - அணுபக்ஷம் சம் புபக்ஷம் என்கிற இரண்டுவித வேறுபாடுகளையும், மாயாதி சேவையும் - மாயா திகளுடைய தரிசனத்தையும் அறிந்து - (ஐயந்திரிபற) உணர்ந்து, இரண்டு ஒன்றுஎன்னும் - இரண்டு ஒன்றுஎன்கின்ற, ஓர் ஒப்பற்ற மானத விகற்பம் அற - மனோவிகற்பம் அறவே நீங்க, வென்று நிற்பது - ஜயித்து. நிற்பதே, நம

து மரபென்று உபதேசித்தருளிய, பரமகுருவே - பரமாசாரியனே, மந்த்ரகுருவே—எ - று.

நித்யா நித்யவஸ்து விவேகம், இகமுக்தார்த்த பலபோகவிராபம் சமாதி ஷட்கசம்பத்தி, முமுக்ஷுத்வம் என்னும் நான்குஞ் சாதனசதுஷ்டயமெனப்படும்.

சோபானம்-மேலிடத்தேற அமைத்தபடிக்கட்டு ஆன்மாக்கள் தாமேபக்குவப்பட்டடையும் வழிஅணுபக்ஷம். இறைவன் திருத்தப்பக்குவபட்டடையும் வழி சம்புபக்ஷம். அணுபக்ஷ மென்பதற்குப் பிரோகப்படுபவை யென்றும் அபரமென்றும், சம்புபக்ஷ மென்பதற்குப் பிரோகக்கருவியென்றும் பரமென்றும் கூறுதலுமுண்டு.

சமயற்கட்டில் உண்டற்குரிய பண்டங்களனைத்து மிருப்ப துபோல, வேதாகமங்கள் அறம், பொருள், இன்பம், வீடு என்பவற்றை அவ்வவ்வதிகாரிகள் அநுட்டித்து நடக்கக் கூறலின் 'போனக மிருக்கின்ற சாலையிடைவேண்டுவ புசித்தற் கிருக்கு மதுபோற் புருடர்பெறு தர்மாதி வேதமுடனாகமம் புகலும்' என்றும், இதனைக்காட்சி, அனுமானம், உவமானம் முதலிய அளவைகளால் நன்குணறவேண்டுதலின் 'காட்சியனுமானமுதல் நானுவிதங்கடேர்ந்து' என்றும் அந்த ஞானம் பெறுதற்கு ஆங்காரமுடைய யறக்களைந்து விட்டுச் சோபானங்களாகிய சரியைகிரியாயோகங்களை யனுபவிக்க வேண்டு மாகலின் 'நானு னெனக்குழறு படைபுடை பெயர்த்திடவு' நான்கு சாதனமு மோர்ந்திட்டு' என்றும் அங்கே அணுபக்ஷ சம்புபக்ஷங்களை யறிந்து மாயாதி சேவைசெய்து இரண்டொன் றென்னுத சிவானுபூதிப் பெருஞ் செல்வமெய்தவேண்டுதலின் 'அணுபக்ஷ சம்புபக்ஷமா மிருவிகற்பமு மாயாதி சேவையு மறிந்திரண்டொன் றென்னுமோர் மானதவிகற்பமற' என்றும், இவ்வாறு பெற்று நிற்பதே நமது குருமரபு என்பார். 'வென்று நிற்பதுநமதுமரபு' என்றும். இவ்வகைய அரிய விஷயங்களை யுபசித்தலின் 'என்ற பரமகுருவே' என்றுங் கூறினர். (௫)

சரியை கிரியா யோகங்கள் ஞானம் பெறுதற்குச் சோபானமென்பதனை 'விரும்புஞ் சரியைமுதல் மெய்ஞ்ஞான நான்கும் - அரும்புமலர் காய்கனிபோலன்றே' என்ற இவ்வாசிரியர் கூற்றானுணர்க. 'அளவை காண்டல் கருதலுரையபாவம் பொருளொப்பா றென்பர், அளவைமேலு மொழிபுண்மையை திகத்தோடியல்பென நான் களவைகாண்ப ரவையிற்றின் மேலுமறைவ ரவையெல்லாம், அளவைகாண்டல் கருதலுரையென் றிம்மூன் றினடங்கிடுமே' என்ற சுபக்கத்தளவைச்சூத்திரத்தாற் "காட்சியனுமானமுதல்" என்றதையறிக

42\. கல்லாத வறிவுமேற் கேளாத கேள்வியுங்
கருணைசிறி தேதுமில்லாக்
காட்சியுங் கொலைகளவு கட்காம மாடசியாக்
காதலித் திடுநெஞ்சமும்

பொல்லாத பொய்ம்மொழியு மல்லாது நன்மைகள்
  பொருந்துகுண மேதுமறியேன்
புருஷர்வடி வானதே யல்லாது கனவிலும்
  புருஷார்த்த மேதுமில்லேன்
எல்லா மறிந்தநீ யறியாத தன்றெனக்
  கெவ்வண்ண முய்வண்ணமோ
இருளையிரு ளென்றவர்க் கொளிதா ரகம்பெறு
  மெனக்குநின் னருடாரகம்
வல்லா னெனும்பெய ருனக்குள்ள தேயிந்த
  வஞ்சகனை யாளநினையாய்
மந்த்ரகுரு வேயோக தந்த்ரகுரு வேமூலன்
  மரபில்வரு மௌனகுருவே.

(ப-ரை.) கல்லாத அறிவும் - (ஞானநூல்களை) கல்லாமல் உண்டாகின்ற ஞானமும், மேல் - அதற்குமேல், கேளாத கேள்வியும் - (குருமுறையால்) சிரவணம் செய்யாத கேள்வியும், சிறிது ஏதும் கருணை இல்லா காட்சியும் - மிகச் சிறிதும் தயையில்லாத அறிவும், கொலை களவு கள் காமம் - கொல்லுதல் திருடுதல் கள்ளுண்டல் பிறர்மனை விரும்பல் ஆகிய இவைகளை, மாட்சி ஆ-மேலான பொருள்களாகக் கருதி, காதலித்திடும் - (அவற்றின்கண்) விருப்பத்தைச் செய்கின்ற, நெஞ்சமும்-மனமும், பொல்லாத பொய் மொழியும்- தீமைசெய்யத்தக்க பொய்வார்த்தையும், அல்லாது - அல்லாமல், நன்மைகள் பொருந்து குணம் - நன்மை பொருந்தியகுணங்கள், ஏதும் அறியேன் - சிறிதும் உணர்ந்திலேன், புருஷர்வடிவு ஆனதே அல்லாது-ஆண் வடிவுடன் பிறந்ததேயன்றி, கனவிலும்–சொர்ப்பனத்திலும், புருஷார்த்தம் ஏதும் இல்லேன்-சிறிதும் புருஷார்த்தம் உடையனல்லேன், எல்லாம் அறிந்த நீ அறியாதது அன்று - இது சர்வஜ்ஞனாகிய நீ அறியாதது அல்ல, எனக்கு - அடியேனுக்கு, எவ்வண்ணம் உய்வண்ணமோ - எந்தவகை உச்சீவிக்கும் விதமோ (அறிகிலேன்), இருளை இருள் என்றவர்க்கு - இருளை இருளென்று கொண்டவர்களுக்கு, ஒளிதாரகம் ஒளியானது ஆதாரமா யிருக்கும், (அதுபோல) பெறும் எனக்கு - உன்னையடைந்த அடியேனுக்கு, நின் அருள் தாரகம்-உன் திருவருளே ஆதாரம் ஆகும் வல்லான் என்னும்பெயர் - சர்வசக்தன் என்னும் பெயரானது, உனக்கே உள்ளது-உனக்கே உண்டாயிருக்கின்றது. (ஆதலால்) இந்தவஞ்சகனை ஆள நினையாய்-இந்தவஞ்சகனை ஆண்டருள நினைவாயாக மந்த்ரகுருவே. எ-று.

புருஷார்த்தம் - புருஷனால் தேடப்படுவது. தர்மம், அர்த்தம், காமம், மோக்ஷம் என நான்கு புருஷார்த்தமெனப்படும் இதனைச் சதுர்வித புருஷார்த்தமென்பர் வடநூலார். கல்லாதாரது ஞானம் ஞானமன்றென்றும், அவ்வாறே அறிஞர்பாற் சென்று கேளாததோற் கேள்வி கேள்வியெனப் படுதவன்றென்றும், உணர்த்தக் ‘கல்லாதவறிவுமேற் கேளாதகேள்வியும்’ என்றும் தயா

மூலதன்மமே பெற்றிருப்பது அறிஞர்கள் தன்மையாதலின் அது பெற்றிராமையைக் ‘கருணைசிறி தேது மில்லாக் காட்சியும்’ என்றும், கொலை, களவு, கட்குடி, பிறர்மனை நயத்தல் என்பனவாகிய இவைகளை மேற்கொண்டொழுகினேனென்பார் ‘கொலை களவு கட்காம மாட்சியாக் காதலித்திடு நெஞ்சமும்’ என்றும், இப்பெருந்தீமைக்கும் பொய்ம்மையே இடமாகலின் ‘பொல்லாத பொய் மொழியும்’ என்றும், இவை யல்லது வேறு நன்மையை விரும்புந் தன்மையேனல்லேனென்பார் அல்லாமல் நன்மைகள் பொருந்துகுணமேது மறியேன்’ என்றும், மானிடதேகம் பெற்றதன்றிப் புருடார்த்த மென்பது சிறிதுமில்லேனென்பார் ‘கனவினும் புருடார்த்த மேதுமிய்லேன்’ என்றும். சர்வஞ்ஞனாகிய நீ யறியாத தொன்று மில்லை என்பார் ‘எல்லா மறிந்த நீ யறியாததென்று’ என்றும், நீயே யுய்வித்தாலன்றி யுய்கிலேன் என்பார், ‘எனக்கெவ்வண்ண முய்வண்ணமோ’ என்றுங் கூறினர். (சு)

43. கானக மிலங்குபுலி பசுவொடு குலாவுநின்
கண்காண மதயானைநீ
கைகாட்ட வுங்கையா னெகிடிக் கெனப்பெரிய
கட்டைமிக வேந்திவருமே
போனக மமைந்தென வக்காமதேனுநின்
பொன்னடியி னின்றுசொலுமே
புவிராஜர் கவிராஜர் தவராஜ னென்றுனைப்
போற்றிஜெய போற்றியென்பார்
ஞானகரு ணாகர முகங்கண்ட போதிலே
நவநாத சித்தர்களுமுன்
நட்பினை விரும்புவார் சுகர்வாம தேவர்முதன்
ஞானிகளு முனைமெச்சுவார்
மானகமு மண்ணகமும் வந்தெதிர் வணங்கிடுமுன்
மகிமையது சொல்லவெளிதோ
மந்த்ரகுரு வேயோக தந்த்ரகுரு வேமூலன்
மரபில்வரு மௌனகுருவே.

(ப-ரை.) கால்நகம் இலங்குபுலி-காலில் நகங்கள் விளங்குகின்ற புலியானது பசுவொடு குலாவும்-பசுவோடு கூடிவிளையாடும், நின் கண்காண-உன்கண் காணும்படி, மதயானை-மதம்பொழியும் யானையானது, நீகைகாட்டவும்-நீகை காட்டின அளவில், கையால் துதிக்கையினால், நெகிடிக்கு என-நெகிடிக்காக, பெரியகட்டை-பெருங்கட்டைகளை, மிக ஏந்திவரும்-மிகவும் தாங்கிவரும், அக்காமதேனு-அந்தக்காமதேனுவானது, நின் பொன் அடியில் நின்று-உன் திருவடியிற்பணிந்து, போனகம அமைந்தது என சொல்லும்-உணவுசித்தமாயிருக்கிறது என்றுசொல்லாநிற்கும். புவிராஜர் பூலோகமன்னரும், கவிராஜர் - கல்வி

மான்களும், உன்னை தேவரீரை, தவராஜன் என்று-தபோநிதியென்று, போற்றி-நமஸ்காரம், ஜய - ஜயவிஜயீபவ, போற்றி - நமஸ்காரம் என்பார் - என்று புகழ்ந்துரைப்பார்கள், ஞான கருணாகர முகம் - ஞானத்துக்கும் கருணைக்கும் பிறப்பிடமாயிருக்கிற (உனது) திருமுகத்தை, கண்டபோதிலே - கண்டபொழுதிற்றானே, நவநாத சித்தர்களும் - (சத்தியநாதர்முதலிய ஒன்பது) சித்தர்களும் உன் நட்பினை விரும்புவார்-உனது சிநேகத்தை யிச்சிப்பார்கள், சுகர் வாமதேவர்முதல் ஞானிகளும்-சுகர் வாமதேவர் முதலாகிய ஞானவான்களும், உன்னை மெச்சுவார் - உன்னைமெச்சிக்கொள்வார்கள், வானகமும் மண்ணகமும் வந்து-விண்ணுலகததாரும் மண்ணுலகத்தாரும் வந்து, எதிர் வணங்கிடும்-எதிரே நின்றுபணியும், உன்மகிமையது-உன்பெருமையாகிய அதனை, சொல்ல எளிதோ-புகழ்ந்து சொல்லுதற்கு இலேசாகுமோ, மந்த்ரகுருவே. எ-று.

கானகமிலங்கு என்பதை, கானகம் இலங்கு எனப்பிரித்து காட்டில் வசிக்கின்ற எனப் பொருளுரைத்தலும் ஒன்று நெகிடி-குளிர்காயு நிமித்தம் எரிக்கப்படும் தீ மூட்டம்.

காமதேனு-தேவலோகப்பசு. இது பெண்முகமும் பசுவினுடலும் பறவையின் சிறகும் மயிலின் கலாபமுடைய ஓர் அற்புதரூபமுடையது ஆகாரம்-பிறப்பிடம்.

ஆசாரியன் சந்நிதானத்தினது பெருமை இன்னதென்று சொல்லவந்தவர் பகைமையின்றி யாவரும் நட்புகொண்டு விளங்குவரெனக்காட்ட 'கானகமிலங்குபுலிப்சுவொடுகுலாவும்' என்றும், நெகிடியைக் கண்டஞ்சும் யானையும் அந்நெகிடிக்காகக் கட்டையை யேந்திவருமென்பார், மதயானை நீ கைகாட்டவுங் கையால் நெகிடிக்கெனப்பெரியகட்டைமிக வேந்திவரும் என்றும், உனக்கு அறியதோர் பொருளில்லை யென்பார். போனக மமைந்ததெனவக் காமதேனுநின் பொன்னடியினின்று சொலும்' என்றும், அரசச்செல்வமும் கல்விச்செல்வமும் உடையாரும் உன் தவச்செல்வத்தின் பெருமையைக்கண்டு வணங்குவா ரென்பார், 'புவிராசர் கவிராசர் தவராச னென்றுனைப் போற்றி ஜய போற்றி யென்பார்' என்றும் உன் திருமுகங்கண்ட மாத்திரையே நவசித்தர்களும் உன்நட்பினை வேண்டுவார் என்பார் 'ஞானகருணாகர முகங்கண்டபோதிலே நவநாத சித்தர்களுன் னட்பினை விரும்புவார்' என்றும், மெய்ஞ்ஞானிகளும் மகிழ்வாரென்பார், சுகவாமதேவர் முதல் ஞானிகளு முனைமெச்சுவார்' என்றும், ஆதலால் ஏனையோர் உனைவந்து பணிவது சொல்லவேண்டுவதில்லை யென்பார், 'வானகமும் மண்ணகமும் வந்தெதிர் வணங்கிடு முன்மகிமையது சொல்லவெளிதோ' என்றுங்கூறினர். வானகமு மண்ணகமும் வந்தெதிர்வணங்குமென்பதை ஞால முண்டவன் றலைமிசைச்சுமப்பன் மெய்ஞ்ஞானி வேண்டுவ வெல்லாம், ஆலமுண்டவ னவன்பினே திருகுவன், என்னுந் திருவாக்கானறிக. (எ)

44\. சருகுசல பக்ஷிணிக ளொருகோடி யல்லாற்
சகோர பக்ஷிகள்போலவே
தவளநில வொழுகமிர்த தாரையுண் டழியாத
தன்மையா னந்தகோடி
இருவினைக ளற்றிரவு பகலென்ப தறியாத
வேகாந்த மோனஞான
இன்ப நிஷ்டையர்கோடி மணிமந்த்ர சித்திநிலை
யெய்தினர்கள் கோடிசூழக்
குருமணி யிழைத்திட்ட சிங்கா தனத்தின்மிசை
கொலுவீற் றிருக்குநின்னைக்
கும்பிட் டனந்தமுறை தெண்டனிட் டென்மனக்
குறையெல்லாந் தீரும்வண்ணம்
மருமல ரெடுத்துனிரு தாளையர்ச் சிக்கவெனை
வாவென் றழைப்பதெந்நாள்
மந்த்ரகுரு வேயோக தந்த்ரகுரு வேமூலன்
மரபில்வரு மௌனகுருவே.

(ப-ரை.) சருகுசல பக்ஷணிகள் ஒருகோடி - உலர்ந்த இலைகளையும் நீரையும் உண்டு சீவிப்போர் ஒருகோடி பேர்களும், அல்லால்-அல்லாமல் சகோர பட்சிகள்போல - சகோர பட்சிகளைப்போல, தவள நிலவு ஒழுகு - வெண்மையாகிய சந்திரிகையோடு பிரகாசிக்கின்ற, அமிர்ததாரை உண்டு-(சந்திரனிடத்துள்ள) அமிர்த வருஷதாரைகளை யுண்டு. அழியாததன்மையர் - இறவாத தன்மையை யுடையவர்கள், அநந்தகோடி - அநேககோடி பேர்களும், இருவினைகள் அற்று - இருவினைப் பற்றுகள் நீங்கி, இரவு பகல் என்பது அறியாத- இராப்பகல் உணராத, ஏகாந்த மோனஞானம் - தனிமையும் மௌன ஞானங்களுமுடைய, இன்பநிஷ்டையர் கோடி - சுகநிஷ்டையை யுடையவர்கள் கோடிபேர்களும், மணிமந்த்ர சித்திநிலை எய்தினர்கள் கோடி - மணிமந்த்ர சித்திநிலைகளைப் பெற்றவர்கள் கோடிபேர்களும், சூழசுற்றிநிற்க, குருமணி இழைத்திட்ட - நிறமுள்ள ரத்நங்களாற் செதுக்கிய, சிங்காதனத்தின் மிசை- சிம்ஹாசனத்தின் பேரில், கொலுவீற்றிருக்கும் நின்னை-கொலுக்கொண்டு எழுந்தருளியிருக்கின்ற உன்னை, கும்பிட்டு - கைகூப்பி, அனந்தமுறை தெண்டனிட்டு - அனேகந்தரம் நமஸ்காரஞ்செய்து, என் மனக்குறை யெல்லாம்- என் மனத்தின் கண்ணுள்ள குறைகளெல்லாம், தீரும் வண்ணம் - நீங்கும் விதம், மருமலர் எடுத்து - வாசனைபொருந்திய மலர்களை (விதிப்படி) எடுத்து, உன் இருதாளை அர்ச்சிக்க - உன் இரண்டு திருவடிகளையும் பூசைசெய்யும்பொருட்டு, என்னை வா என்று அழைப்பது-என்னை வாவென்று தேவரீர் அழைத்தருளுவது, எந்நாள் - எந்தக்காலமோ, மந்த்ரகுருவே. எ-று.

சகோரபக்ஷ என்பது சந்திரகிரணத்தையுண்டு ஆகாயத்திற்றனே சஞ்சரிப்பதோர் பறவை. சூருமணி - மாணிக்கமெனினுமாம்.

சருகுசல முண்டாலும் தேகம் பாதுகாக்க வியலுமாகலின், அச்சருகு சலபக்ஷணஞ்செய் துயிர்காத்துத் தவஞ்செய்வாரை முன்னும், அதனினும் மதியினமுதுண்டு சுகிப்பாரை 'சகோரபக்ஷிகள் போலவே தவள நிலவொழு கமிர்த தாரையுண்டழியாத தன்மைய ரனந்தகோடி' என அவர்கள் பின்னும், இவர்கள் தேகவாஞ்சை யுடையராதலின் அவ்வாஞ்சையற்றவரை 'இருவினைகளற்றிரவு பகலென்ப தறியாத வேகாந்தமோனஞான வின்ப நிஷ்டையர்கோடி' என்று அவர்கள் பின்னும், அவர்களினும் எண்வகைச் சித்திபெற்றோர் சிலராதலின் 'மணிமந்த்ர சித்திநிலை யெய்தினர்கள்கோடி' என்றவர் பின்னும், இவ்வாறு அவர்கள் சூழக் கொலுவீற்றிருக்கும் உன்னை யருச்சிக்க என்குறையெலாந் தீருமாதலின் வாவென்றென்னை யழைப்ப தென்றோ என்பார் கும்பிட்டநந்தமுறை தெண்டனிட் டென்மனக் குறையெலாந் தீரும் வண்ணம், மருமலரெடுத்துனிரு தாளையர்ச்சிக்கவெனை வாவென்றழைப்ப தெந்நாள்' என்றுங்கூறினர். இருவினை யென்றது நல்வினை தீவினைகளை இரவுபகல் என்றது கேவல சகலங்களை. (அ)

45. ஆங்கார மானகுல வேடவம் பேய்பாழ்த்த
வாணவத் தினும்வலி து காண்
அறிவினை மயக்கிடும் நடுவறிய வொட்டாதி
யாதொன்று தொடினுமதுவாய்த்
தாங்காது மொழிபேசு மரிகரப் பிரமாதி
தம்மொடு சமானமென்னும்
தடையற்ற தேரிலஞ் சுருவாணி போலவே
தன்னிலசை யாதுநிற்கும்
ஈங்கா ரெனக்குநிக ரென்னப்ர தாபித்
திராவணா காரமாகி
இதயவெளி யெங்கணுந் தன்னரசு நாடுசெய்
திருக்குமித னுடேநாமும்
வாங்கா நிலாதடிமை போராட முடியுமோ
மௌனோப தேசகுருவே
மந்த்ரகுரு வேயோக தந்த்ரகுரு வேமூலன்
மரபில்வரு மௌனகுருவே.

(ப-ரை.) ஆங்காரம் ஆன - ஆங்காரமாகிய, குலவேடவெம்பேய் - குலவேடரைப்போன்ற வெவ்விய பேயானது, பாழ்த்த ஆணவத்திலும் வலிது - பாழாகிய ஆணவப்பேயினும் வலியுடையது, (அது) அறிவினை மயக்கிடும் -

என்னறிவை மயக்கிவிடும், நடு அறியவொட்டாது - நடுவு நிலைமையை உணரவொட்டாமல், யாதொன்று தொடினும் - ஏதொரு பொருளைப் பற்றினாலும், அது ஆய் - அது தானேயாகி நின்று, தாங்காது மொழிபேசும் - சகிக்காமல் வார்த்தைசொல்லும், அரிஅர பிரமாதி தம்மொடு சமானம் என்னும் - ஹரிஹர ப்ரஹ்மாதிகளோடு நான் சமமாவேனென்று சொல்லும், தடை அற்றதேரில்-தடையறச் செலுத்துகின்றதேரினிடத்து, அஞ்சுறு ஆணிபோல - அச்சாணியைப்போல, தன்னில் அசையாது நிற்கும் - தன்னிடத் தசைவில்லாதிருக்கும், ஈங்கு - இவ்வுலகத்தில், எனக்கு நிகர் ஆர் என்னப் பிரதாபித்து - எனக்கொப்பு யாவரென்று ப்ரஸ்தாபித்து, இராவணாகாரம் ஆகி - இராவணரூபங் (கருநிறங்) கொண்டு, இதயவெளி எங்கணும் — இதயாகாசமெல்லாம். தன்னரசுநாடு செய்து இருக்கும் - தன்னரசு நாடாகச்செய்து கொண்டிருக்கும், இதனொடு - இதனுடன், எந்நேரமும் எப்பொழுதும், வாங்காநில்லாது - நீங்கில்லாமல், அடிமை - உனதடிமையாகிய நான், போராட முடியுமோ - போர் செய்ய இயலுமோ, மௌனோபதேசகுருவே - மௌனநிலையை உபதேசித்தருளுகின்ற குருவே, மந்த்ரகுருவே—ஈ - று.

இராவணாகாரமாகி - இருளுருவாகி. அவனது நிறம் கருமையாதலால் இவ்வாறு கூறப்பட்டது. இது தமோகுணப் பெருமையை வெளியிட்டு நின்றது.

தற்போத வொழிவு ஆங்காரங் கெட்டவிடத்தே யாகலால், 'ஆங்காரமானகுல வேடவெம்பேய்பாழ்த்த வாணவத்தினும் வலிதுகாண்' என்றும், மெய்யுணர்ச்சி அது இருக்குந்துணையும் தோன்றாமையின் 'அறிவினைமயக்கிடும்நடுவறியவொட்டாது' என்றும், எதைக்குறித்துப் பேசினும் அது தானேயாகித் தருக்கலான் 'அதுவாய்த் தாங்காது மொழிபேசும்' என்றும், இதனோடகலாது முத்தொழிற் கர்த்தாக்களையும் ஒரு அணுவாகக் கருதச் செய்யுமென்பார் 'அரிகரப்பிரமாதி தன்னொடு சமானமென்னும்' என்றும். இதுவுமன்றி அச்சாணி அசையாது நின்று தேரைச் செலுத்துவதுபோல, தான் சலியாமல் நின்று பொறிமுதலிய வியக்கலான் 'தடையற்ற தேரிலஞ் சுறுவாணி போலவே தன்னிலசையாது நிற்கும்' என்றும், தன்னறிவு முழுவதுங் கொள்ளை கொண்டு இதயவெளி யெங்கணுந் தன்னரசு நாடு செய்திருக்கும்' என்றும், இதனொ டெந்நேரமும் போராட முடியாதென்பார் 'எந்நேரமும் வாங்கா நிலாதடிமை போராட முடியுமோ' என்றுங் கூறினர். 'தன்னரசு நாடு" என்பது "தன்னடித்த நாடு, என இக்காலத்து வழங்குகின்றது இது இஷ்டப்படி காரியங்களை நடத்தல் எனப் பொருள்படும். (கூ)

46. பற்றிவெகு விதமாகி யொன்றைவிட் டொன்றனைப்
பற்றியழல் கிருமிபோலப்
பாழ்ஞ்சிந்தை பெற்றநான் வெளியாக நின்னருள்
பகர்ந்துமறி|யேன் றுவிதமோ

சிற்றறிவ தன்றியு மெவரேனு மொருமொழி
திடுக்கென் றுரைத்தபோது
சிந்தை செவியாகவே பறையறைய வுதரவெந்
தீநெஞ்ச மளவளாவ
உற்றுணர வுணர்வற்றுன் மத்தவெறி யினர்போல
வுளறுவேன் முத்திமார்க்கம்
உணர்வ தெப்படியின்ப துன்பஞ்ச மானமா
யுறுவதெப் படியாயினும்
மற்றெனக் கையநீ சொன்னவொரு வார்த்தையினை
மலையிலக் கெனநம்பினேன்
மந்த்ரகுரு வேயோக தந்த்ரகுரு வேமூலன்
மரபில்வரு மௌனகுருவே.

(ப - வுரை.) பற்று - பற்றுதற்குரிய இடம், வெகுவிதம் ஆதி - அநேக வகைகளாகக்கொண்டு,ஒன்றைவிட்டு ஒன்றனைப்பற்றி - ஒன்றைநீக்கி மற்றொன்றைப் பிடித்து, உழல் - சுழல்கின்ற, கிருமிபோல - புழுவையொத்து, பாழ் சிந்தை பெற்ற நான் - கொடுமையாகிய மனதையடைந்த நான், வெளியாக - வெளிப்படையாக, நின் அருள் - உன் திருவருளை பகர்ந்தும் அறியேன் - புகழ்ந்து மறியேன், துவிதமோ சிற்றறிவு - துவிதநிலையோ சிற்றறிவாய் முடியும், அது அன்றியும் - அதையல்லாமலும், எவர் எனும் - யாவராயினும், ஒரு மொழி - ஒருசொல்லை, திடுக்கென்று உரைத்தபோது - திடுக்கென்று சொன்னபொழுது, செவியே சிந்தையாக - காதே மனமாக, பறை அறைய - பறையறையவும், வெம் - கொடிய, உதரத்தீ - உதராக்கியானது, நெஞ்சம் அளவளாவ - மனத்தைக் கலக்கும்படி, உற்று - பொறுந்துவதனுல, உணர உணர்வு அற்று - அறிய அறிவும் அற்று, உன்மத்த வெறியினர்போல - உன்மத்தங் கொண்ட பித்தரைப்போல, உளறுவேன்-குழறுவேன், (இப்படிப்பட்ட நான்) முத்திமார்க்கம் உணர்வது எப்படி - முத்தி வழியை அறிவதுஎவ்வாறு, இன்பதுன்பம் - சுகதுக்கங்கள், சமானமாய் உறுவது எப்படி - சமானமாகப் பொருந்துவது எவ்விதம், ஆயினும்-ஆனாலும், ஐய - ஐயனே, நீ எனக்குசொன்ன- நீயெனக்குபதேசித்தருளிய, ஒரு வார்த்தையினை - ஒருசொல்லை, மலைஇலக்கு என நம்பினேன் - மலையைக் குறியாகக் கொண்டாற்போல (மிகுதியும்)நம்பியிருக்கிறேன், மந்த்ரகுருவே.—எ - று.

கிருமியோரிடத்து நில்லாது பலவிடங்களைப் பற்றுதலான் அதை மனத்துக்கு உவமையாகக்கொண்டு ‘பற்றுவெகு விதமாகி யொன்றைவிட்டொன்றனைப் பற்றியுழல் கிருமிபோலப் பாழ்ஞ்சிந்தை பெற்றநான்’ என்றும், அவ்வாறு பெற்றநான் வீடுபேறு திருவருள்ஞானத்தால் என்றறியா திருந்தேனென்பார் ‘வெளியாக நின்னருள் பகர்ந்துமறியேன்’ என்றும், துவிதஞானமானது அத்துவிதமாகிய இரண்டன்மைபோலச் சிறந்த தன்றென்பார் ‘துவிதமோ

சிற்றறிவது' என்றும், ஏதேனும் ஒருமொழி சொன்னபொழுது சிந்தை செவியாய்ப் பறையறைய உதாரக்கினி நெஞ்சங்கலக்க உணர்வற்று உன்மத்தன் போல வுளறுவேன் என்றும், முத்திநெறி இருவினை யொப்பு கிடைத்தாலன்றி அமையாதென்பார், 'இன்ப துன்பஞ் சமானமாயுறுவதெப்படி' என்றும், நீ சொன்ன உபதேச மொழியையன்றிப் பிறிதொன்றையுங் கருதே னென்பார் 'ஐய நீசொன்ன ஒரு வார்த்தையினை மலையிலக்கென நம்பினேன்' என்றுங் கூறினார். (௪0)

**கருணாகரக்கடவுள்.**

47. நிர்க்குண நிராமய நிரஞ்சன நிராலம்ப
நிர்விஷய கைவல்யமா
நிஷ்கள வசங்கசஞ் சலரகித நிர்வசன
நிர்த்தொந்த நித்தமுக்த
தற்பரவிஸ் வாதீத வ்யோமபரி பூரண
சதானந்த ஞானபகவ
சம்புசிவ சங்கர சர்வேச வென்றுநான்
சர்வகாலமு நினைவனே
அற்புதவ கோர்சர நிவர்த்திபெறு மன்பருக்
கானந்த பூர்த்தியான
அத்துவித நிச்சய சொரூபசா க்ஷாத்கார
வனுபூதி யனுகூதமும்
கற்பனை யறக்காண முக்கணுடன் வடநிழற்
கண்ணூ டிருந்தகுருவே
கருதரிய சிற்சபையி லானந்த நிர்த்தமிடு
கருணா கரக்கடவுளே.

(ப - ரை.) நிர்க்குண - குணமற்றவனே, நிராமய — நோயற்றவனே, நிரஞ்சன - களங்கரகிதமானவனே, நிராலம்ப - பற்றுக்கோடில்லாதவனே, நிர்விஷய - விஷயரகிதனே, கைவல்யமாம் நிஷ்கள - மோக்ஷரூபமான கலாசூந்யனே, அசங்க - சங்கரகிதனே, சஞ்சலரகித - சஞ்சலமற்றவனே, நிர்வசந - வசநாஹிதனே, நிர்த்தொந்த - தொந்தமற்றவனே, நித்த - எப்பொழுது முள்ளவனே, முத்த - பாசவிமுக்தனே, தற்பர - தற்பரனே, விஸ்வாதீத-லோகமுதல்வனே, வ்யோமபரிபூரண - பரமாகாசத்தில் நிறைவாயுள்ளவனே, சதாநந்த-எப்பொழுதும் ஆநந்தத்தையுடையவனே, ஞான-ஞானத்தையுடையவனே, பகவ-பகவச்சப்தத்தின் பொருளாயிருப்பவனே, சம்பு - சம்புவே, சிவ - சிவனே, சங்கர-சங்கரனே, சர்வேச - சர்வேச்சுரனே, என்று - என்றுசொல்லி, நான்சர்வகாலமு நினைவனே - நான் - எப்பொழுதும் உன்னை த்யாநிப்பேனோ, அற்

புத - ஆச்சர்யபூதனே, அகோசர - யாவராலும் அறியப்படாதவனே, நிவர்த்தி பெறும் அன்பருக்கு - நிவ்ருத்திமார்க்கத்தை யடைந்த அடியார்களுக்கு, ஆனந்தபூர்த்தியான - இன்பநிறைவாகிய, அத்துவித நிச்சய - அத்துவித நிலையாகிய உண்மையை யுடையவனே, சொரூப சாக்ஷாத்கார அநுபூதி அநுகூதமும் - பரப்பிரம சொரூபத்தையும் அதன் பிரத்தியக்ஷத்தையும் அதனது அநுபவ சித்தியையும், கற்பனை அற - பொய்மையொழிய காண - (முகக்கண்ணால்) சேவிக்கும்படி, முக்கண்ணுடன் — மூன்றுகண்களோடு, வடநிழற் கண்ணூடு இருந்த - கல்லாலினிழலி லெழுந்தருளியிருந்த, குருவே — ஞானசிரியனே, கருது அறிய — நினைத்தற்கு அறிதாகிய, சிற்சபையில் — சிற்றம்பலத்தில், ஆனந்த நிர்த்தம் இடு — ஆனந்தத் திருநடனஞ்செய்கின்ற, கருணாகரக்கடவுளே — கருணைக்குப் பிறப்பிடமாயிருக்கிற கடவுளே.—எ - று.

பகவன் என்பதற்கு, ఐశ్వర్యస్య సమగ్రస్య వీర్యస్య యశస(శ్రియః-జ్ఞాన) వైరాగ్యయోశ్చైవ షణ్ణాం భగ ఇతీరణః॥ என்றபடி ஐசுவரியம், வீரியம், புகழ் திரு. ஞானம், வைராக்கியம் என்னும் அறுகுணங்களை யுடையவனென்பது பொருள், அநுஸ்யூதம் என்னும் வடமொழி அநுகூதமென நின்றது. கடவுள் ப்ருதிவ்யாதி நாதாந்தமாயுள்ள தத்துவங்களைக்கடந்து நின்றவன். தற்பரன் — ஆன்மாக்களிடத்தில் பிரியமுள்ளவன். சம்பு — சுகத்தை யுண்டாக்குவோன், அன்றிச் சுகரூபியாயிருப்பவன் என்னலுமாம், சிவன் மங்களத்தோடு கூடியிருப்பவன் என்று பொருள்படும். சங்கரன் — சுகத்தைச்செய்கிறவன்; வேதமானது ப்ரவ்ருத்திமார்க்கம் நிவ்ருத்திமார்க்கம் என இருவகைப்படும், அவற்றுள் நிவ்ருத்திமார்க்கம் — மோக்ஷநெறியை யுணர்த்தும். வடநிழற்கண்ணூடு என்பதற்கு ஆலநீழலாகிய இடத்தில் என்றுரைப்பினுமாம். கேவலத்தின் வுண்மை கைவல்யம். (க)

48. மண்ணாதி யைந்தொடு புறத்திலுள கருவியும்
வாக்காதி சுரோத்ராதியும்
வளர்கின்ற சப்தாதி மனமாதி கலையாதி
மன்னுசுத் தாதியுடனே
தொண்ணூற்றொ டாறுமற் றுள்ளனவு மௌனியாய்ச்
சொன்னவொரு சொற்கொண்டதே
தூவெளிய தாயகண் டானந்த சுகவாரி
தோற்றுமதை யென்சொல்லுவேன்
பண்ணாரு மிசையினொடு பாடிப் படித்தருட்
பான்மைநெறி நின்றுதவருப்
பக்குவ விசேஷராய் நெக்குநெக் குருகிப்
பணித்தெழுந் திருகைகூப்பிக்

கண்ணாறு கரைபுரள நின்றவன் பரையெலாங்
கைவிடாக் காட்சியுறவே
கருதரிய சிற்சபையி லானந்த நிர்த்தமிடு
கருணாகரக் கடவுளே.

(ப - ரை) மண் ஆதி ஐந்தொடு – பிரிதிவிமுதலிய பஞ்சபூதங்களுடன், புறத்தில் உள கருவியும் – புறக்கருவிகளும், வாக்கு ஆதி சுரோத்ராதியும் – வாக்குமுதலான (கர்மேந்த்ரியம்) ஐந்தும் சுரோத்திரம் முதலான (ஞானேந்திரியம்) ஐந்தும் வளர்கின்ற சப்தாதி –விருத்தியடையாநின்ற சப்தமுதலான (விஷயம் ஐந்தும்), மனம் ஆதி – மனம்முதலான (அந்தக்கரணம்) நான்கும் கலை ஆதி – கலைமுதலான (வித்தியாதத்துவங்கள்) ஏழும், மன்னு சுத்தாதியுடனே – நிலைபெற்ற சுத்த தத்துவத்துடனே, தொண்ணூற்றொடு ஆறும் – தொண்ணூற்றாறும். மற்று உள்ளனவும் – இன்னும் முள்ளவைகளும், மௌனி ஆய் – மௌனகுருவாகி, சொன்ன – நீ(வந்து) சொன்ன, ஒரு சொல்கொண்டதே – ஒருமொழியை உட்கொண்டபொழுதே, தூ வெளியதாய்– பரிசுத்தமான ஆகாயமாகி, அகண்ட ஆநந்த சுகவாரி – இடையறாத இன்பசுக சாகரம் தோற்றுமதை என் சொல்லுவேன்–காணப்படுவதை யென்னென்று சொல்லுகேன், பண் ஆரும் இசையினொடுபாடி பண்ணிறைந்த இராகத்துடன் பாடி, படித்து அருள்பான்மை நெறிநின்று –திருவருட்பான்மை வழிநின்று, தவறு பிழையாத, பக்குவ விசேஷர் ஆய் – (தீவிரதர)பக்குவத்தை யுடையவர்களாய், நெக்குநெக்குஉருகி – நெகிழ்ந்து நெகிழ்ந்துருகி, பணிந்து எழுந்து – வணங்கியெழுந்து, இருகைகூப்பி - இரண்டுகைகளையுங் குவித்து, கண் ஆறுகரைபுரளநின்ற - கண்ணீராலாகியநதியானது கரைபுரண்டோடநின்ற, அன்பரை எல்லாம் - அடியார்களை யெல்லாம், கைவிடாகாட்சி உற - கைவிடாத சேவையை யடையும்படி, கருது அரிய சிற்சபையில்.—எ - று.

திருவருணெறிநின்ற அன்பர்கள் சேவிக்கச் சிற்சபையில் நடிக்கின்ற நீ என்னளவில் அகண்டாநந்தசுகவாரி தோற்றும்படி கிருபைபுரிந்ததைக் குறித்து என்னசொல்லிப் புகழ்வேன் என்பது கருத்து.

மண்ணாதி ஐந்தாவன:—பிருதுவி, அப்பு, தேயு, வாயு, ஆகாயம் வாக்காதி ஐந்து:—வாக்கு, பாதம், பாணி, பாயு, உபத்தம, இவற்றைக் கன்மேந்திரியமென்பர். சுரோத்திராதி ஐந்து:—சுரோத்திரம், தொக்கு, சட்சு, சிங்குவை, ஆக்கிரானம், இவற்றை ஞானேந்திரியமென்பர். சப்தாதி ஐந்து:—சத்தம்,பரிசம், ரூபம், இரசம், கந்தம்; இவற்றை ஐம்புலனென்பர். மனமாதி நான்கு:—மனம், புத்தி, சித்தம், அகங்காரம்; இவற்றை அந்தக்கரணமென்பர். கலையாதி ஏழு:—காலம், நியதி, கலை, வித்தை, இராகம், புருடன், மாயை; இவற்றை வித்தியாதத்துவமென்பர்,சுத்தாதி நான்கு:—சுத்தவித்தை, ஈசுரம், சாதாக்கியம்,சத்தி. சிவம்; இவற்றைச் சுத்ததத்துவ மென்பர், இன்னும் விரிக்கிற்பெருகுமாதலின் 'தொண்ணூற்றொடாறு மற்றுள்ளனவும்' என்றுகூறினர். இவற்றைச் சாத்திரங்களுட் பரக்கக்காண்க. (உ)

49. எல்லாமு னடிமையே யெல்லாமு னுடைமையே
எல்லாமு னுடையசெயலே
யெங்கணும் வியாபிநீ யென்றுசொலு மியல்பென்
றிருக்காதி வேதமெல்லாம்
சொல்லான் முழக்கியது மிக்கவுப காரமாச்
சொல்லிறந் தவரும்விண்டு
சொன்னவையு மிவைநல்ல குருவான பேருந்
தொகுத்தநெறி தானுமிவையே
அல்லாம லில்லையென நன்று வறிந்தே
னறிந்தபடி நின்றுசுகநான்
ஆகாத வண்ணமே யிவ்வண்ண மாயினே
னதுவுநின தருளென்னவே
கல்லாத வறிஞனுக் குள்ளே யுணர்த்தினை
கதிக்குவகை யேதுபுகலாய்
கருதரிய சிற்சபையி லானந்த நிர்த்தமிடு
கருணா கரக்கடவுளே.

(ப - ரை.) எல்லாம் உன் அடிமையே – (எவ்விடத்துமுள்ள) எல்லாரும் உன்னடிமைகளே, எல்லாம் உன் உடைமையே – எல்லா வஸ்துக்களும் உன் சுதந்தரங்களே, எல்லாம் உன்னுடைய செயலே – எல்லாச்செயல்களும் உன் செய்கைகளே, எங்கணும் வியாபி நீ - எவ்விடத்தும் வியாபித்திருப்பவன் நீயே, என்று சொல்லும் இயல்பு என்று-என்னுகூறு மியல்பையுடையதென்று இருக்குஆதிவேதம் எல்லாம்- இருக்குமுதலான வேதங்கள் யாவும், சொல்லால்முழக்கியது - சொல்லினுற் பிரதிபாதித்தது! சொல்லிறந்தவரும்-பேச்சிறந்தவர்களாகிய (மௌன) ஞானிகளும்; மிக்க உபகாரம்ஆ - மிகுந்த வுபகாரமாயெண்ணி-விண்டுசொன்னவையும் இவை விவரித்துச் சொன்னவைகளுமிவையே, நல்ல குருவானபேரும் - சற்குருவான பேர்களும், தொகுத்தநெறி தானும் இவையே அல்லால் - தொகுத்துரைத்த மார்க்கங்களும் இவையேயன்றி; இல்லையென - வேறில்லையென்று, நன்று அறிந்தேன் - தெளிவாகத் தெரிந்தேன்-அறிந்தபடி நின்று-உணர்ந்த வண்ணம் இருந்து, நான்சுகம்ஆகாதவண்ணம் - நான் இன் புறுமல், இவ்வண்ணம் ஆயினேன்-இப்படியானேன் அதுவும் - நினது அருள்என்ன - உன்திருவருளேயென்று, கல்லாதவறிஞனுக்கு உள்ளே உணர்த்தினை-கல்லாதவறியேனுக்கு உள்ளத்திற்குள்ளேயறிவித்தாய், கதிக்குவகைஏதுபுகலாய் - மோக்ஷகதிக்கு வழியாதுசொல்லாய், கருதரியசிற்சபையில்—,எ-று.

உலகிலுள்ளார்க் கெல்லாந்தானேகருத்தாவாகவின்'எல்லாமுனடிமையே என்றும், எல்லாந்தானே யுடையவனாகலின் 'எல்லாமுனுடைமையே' என்றும் அவனசைந்திடி லுலகசைந்திடு மென்றபடி'எல்லாமுனுடைய செயலே' என்றும் ஹிரண்ணியகற்ப பிபிலிகாபரியந்தம் சர்வபரி பூரணனாக விளங்கலின் எங்கணும் வியாபி நீ'என்றும், இவ்வாறவேதமுதலிய ஆப்தகலைகள் கூறியதல்லது மெய்யுணர்ச்சியுடையா ரனுபவமுமிதுவே என்பதுநோக்கி'இருக்காதி வேதமெல்லாம் சொல்லான் முழக்கியது மிக்கவுபகாரமாகச்|சொல்லிறந்தவரும்விண்டு சொன்னவையுமிவை'என்றும், உத்தம ஆசிரியபரம்பரையார் உபதேசித்த நெறியிதுவே யென்பதுபற்றி' நல்லகுருவானபேருந் தொகுத்தநெறி தானுமிவையே யல்லாமலில்லை' என்றும்,இதனைநன்றாக வாராய்ந்து அறிந்தும்அவ்வாறு சுகாரம்ப நிலைபெறாது வீணிற்காலஞ்செலுத்தினேன் என்பது பற்றிச்சென்ற நாட்கிரங்கி நன்றா அறிந்தே னறிந்தபடி நின்று சுகநானாகாத வண்ணமே 'யிவ்வண்ணமாயினேன்' என்றும், அதுவு நின்னருளல்ல தில்லை யென்றெனக்குணர்த்தினை யென்பது கருதி, அதுவு நினைதருளென்னவேகல்லாதவறிஞனுக்குள்ளே யுணர்த்தினை' என்றும் "பிறவி தாங்கடத்தாரக்கடத்துமென்றேற்றுதலிற் பயனில்லை" ஆகலின், எனக்கு நின்னையல்லது பேரின்ப வீடெய்த வளிப்பாரெவர் என்பார், கதிக்குவகை யேதுபுகலாய், என்றுங்கூறினார். எல்லாமுனுடையசெயலே என்றது,சிவன்செயலாலே யாதும்வறமெனத்தேறேன், என்றிவ்வாசிரியர் கூறுவதனாலு முணர்க.

இருக்காதி வேதமென்றது. இருக்கு - யசுர் - சாமம் - அதர்வணம் என நான்கு.

50. பட்டப் பகற்பொழுதை யிருளென்ற மருளர்தம்
பக்ஷமோ வெனதுபக்ஷம்
பார்த்தவிட மெங்கணுங் கோத்தநிலை கொலையாது
பரமவெளி யாகவொருசொற்|
றிட்டமுடன் மௌனியா யருள்செய் திருக்கவும்
சேராம லாராகநான்
சிறுவீடு கட்டியதி னடுசோற்றை யுண்டுண்டு
தேக்குசிறி யார்கள்போல
நட்டனைய தரக்கற்ற கல்வியும் விவேகமும்
நன்னிலய மாகவுன்னி
நானென்று நீயென் றிரண்டில்லை யென்னவே
நடுவேமுளைத்த மனதைக்
கட்டவறி யாமலே வாடினே னெப்போது
கருணைக் குரித்தாவனோ
கருதரிய சிற்சபையி லானந்த நிர்த்தமிடு
கருணா கரக்கடவுளே.

(ப - ரை.) பட்டப்பகற்பொழுதை - நடுப்பகற்காலத்தை, இருள்என்ற- இருட்பொழுதென்னும், மருளர்தம்பக்ஷமோஎனதுபக்ஷம், அறியாதவரதுபக்ஷந்தானோ எனதுபக்ஷம், பார்த்த இடம் எங்கணும் கண்ட இடங்களெல்லாம், கோத்தநிலை குலையாது - என்னை விழுங்கினநிலைதவறாமல், பரமவெளி ஆக- பரமாகாயமாக, ஒருசொல் – ஒருமொழியை, மௌனி ஆய் – மௌனியாகிய, திட்டமுடன் அருள்செய்திருக்கவும்-திருத்தமா யருள்செய்திருந்தும், சேராமல்—அதையடையாமல், நான் ஆர் ஆக-நான் யாராகக்கருதி, சிறு வீடு கட்டி– சிறியமணல்வீடுகட்டி, அதின் அடுசோற்றைஉண்டு உண்டு- அதில் சமைத்த மணற்சோற்றைப் பலகாலுண்டாற்போலநடித்து, தேக்கு சிறியார்கள்போல ஏப்பமிடுகின்ற சிறுர்கள்போல, நட்டணைய தாக்கற்ற – நடுவு நிலைமையாகக் கற்றறிந்த, கல்வியும்—கல்வியையும், விவேகமும்—கேள்வியறிவையும் 'நல்நிலயமாகவுன்னி—நல்லநிலையிடமாக நினைத்து, நான் என்றும் நீ என்றும் – நானென்றும் நீயென்றும் இரண்டு இல்லையென்ன-இரண்டு பதார்த்தங்க ளில்லையென்று துணிந்து, நடுவேமுளைத்தமனதை - நடுவிலுண்டான எண்ணத்தை, கட்டஅறியாமல் - புறம்போகாது தளையிடவறியாமல், வாடினேன் - மெலிந்தேன், எப்போது கருணைக்கு உரித்தாவனோ·எக்காலத்தில் உன் கிருபைக்குப்பாத்திரமாவேனோ, கருதரியசிற்சபையில்—,எ–று.

பட்டப்பகல் - கடும்பகல் - நடுப்பகல் என்பன ஒருபொருளென இதனை நீதிநெறிவிளக்கம்.

> "நெடும்பகற் கற்ற வவையத் துதவா
> துடைந்துளா ருட்குவருங் கல்வி - கடும்பகல்
> ஏதிலான் பாற்கண்ட வில்லினும் பொல்லாதே
> தீதென்று நீப்பரி தால்,,—என்பதனுனறிக.

"சினமிறக்கக் கற்றாலுஞ் சித்தியெலாம் பெற்றாலு - மனமிறக்கக் கல்லார்க்கு வாயேன் பராபரமே" எனத் தாமேகூறியபடி, மனத்தைத் தடுக்க, அறிந்தால் கருணைக்குரித்தாதல் திண்ணம். அதைத் தடுக்கவறியாமையால் எப்போது கருணைக்குரித்தாவனோ என்றார்.

நேர்நின்று காக்கை வெளிதென்பார்போல, நடுப்பகற்காலத்தை யிருளென்பார் மதம் தான்கொண்ட மதமல்ல வென்பதனுல் 'பட்டப்பகற்பொழுதை யிருளென்ற மருளர்தம் பக்ஷமோ வெனது பக்ஷம்' என்றும் இறைவன் சத்தி வியாபகப்பட்டு யாண்டும் பரிபூரணமாகிய நிலையை மௌனகுருவாகவந் துபதேசித்திருக்கவும், தான் கண்டு கேட்டு உண்டுடுத்துக் காலங்கழிக்குங் கயவர் போன்று கல்வியுங் கேள்வியுமாகக் கலக்குற்றமையால் பார்த்தவிடமெங்கணும்கோத்தநிலைகுலையாது*****நட்டணைய தாக்கற்ற கல்வியும் விவேகமுநன்னிலயமாக வுன்னி'என்றும்' நானீயென நின்ற பேதங்க ளொழித்து நடுவே தோன்றிய மனத்தை என்வயப்படுத்தாமல் வருந்தினேன் என்பது கருதி,நா

னென்று நீயென் றிரண்டில்லை யென்னவே நடுவேமுளைத்த மனதைக்கட்ட வறியாமலே வாடினேன்'என்றும், அப்படிப்பட்ட நான் உனது திருவருளைப் பெறுவது எந்நாளோ வென்பதுகருதி 'எப்போது கருணைக்குரித்தாவனோ' என்றுங்கூறினர். 'கருத்தடங்கின் முத்தியது கையகலிற்கட்டாகும்' என்றதே விகாலோத் தரத்தின்படி மனதைத் தடுத்தாலன்றி முத்திகை கூடாதாகலின் "மனதைக் கட்டவறியாமலே வாடினேன்" என்றார். (ச)

51. மெய்விடா நாவுள்ள மெய்யரு ளிருந்துநீ
மெய்யான மெய்யையெல்லாம்
மெய்யென வுணர்த்தியது மெய்யிதற் கையமிலை
மெய்யேது மறியாவெறும்
பொய்விடாப் பொய்யினே னுள்ளத் திருந்துதான்
பொய்யான பொய்யையெல்லாம்
பொய்யெனு வண்ணமே புகலவைத் தாயெனிற்
புன்மையே னென்செய்குவேன்
மைவிடா தொழுநீல கண்டகுரு வேவிஷ்ணு
வடிவான ஞானகுருவே
மலர்மேவி மறையோது நான்முகக் குருவே
மதங்கடொறு நின்றகுருவே
கைவிடா தேயென்ற வன்பருக் கன்பாய்க்
கருத்தூ டுணர்த்து குருவே
கருதரிய சிற்சபையி லானந்த நிர்த்தமிடு
கருணு கரக்கடவுளே.

(ப - ரை.) மெய்விடா நாஉள்ள - உண்மையொழியாத நாவினையுடைய மெய்யர் உள்நீ இருந்து - உண்மையினரிடத்தில் நீ(சந்நிதிசெய்து) இருந்து மெய்ஆன மெய்யை எல்லாம் உண்மையான உண்மைப்பொருள்களை யெல்லாம், மெய்என உணர்த்தியது மெய்-சத்தியமாக விளக்கிக் காட்டினதுசத்தியமே, இதற்கு ஐயம் இல்லை-இதற்குச் சமுசயமில்லை,மெய் ஏதும் அறியா-உண்மையை இலேசமுமுணராத, வெறும் பொய்விடா-வெறும் அசத்தியத்தை நீங்காத, பொய்யினேன்-பொய்யினனுகிய எனது உள்ளத்து இருந்து - மனத்தின்கண் வீற்றிருந்து, பொய்யானபொய்யையெல்லாம் அபத்தமாகியபொய்ப்பொருள்களையெல்லாம், பொய் எனுவண்ணம் -பொய்யென்றுசொல்லாதபடி; புகலவைத்தாய் எனின் - (மெய்யென்று)சொல்லும்படி(நியமித்து)வைத்தனையாயின், புன்மையேன் என்செய்குவேன் - அற்பனுகிய நான்(இதற்குக் கைம்மாருக)என்செய்யவல்லேன், மைவிடாதுஎழும் நீலகண்குருவே-கருமைநிறம் நீங்காது வளர்கின்ற நீலகண்டத்தையுடைய (சிவரூபமாகிய)ஆசிரியனேவிஷ்ணுவடிவு ஆன ஞானகுருவே - திருமாலுருவாகிய ஞானசிரியனே, மலர்மேவி

தாமரைமலரை வாசஸ்தானமாக வீற்றிருந்து,மறைஓதும்-வேதாத்யநம் பண்ணுகிற, நான்முகக்குருவே-பிரமனுருவாகிய ஆசிரியனே, மதங்கள்தொறும் நின்றகுருவே-எல்லாச்சமயங்களிலும்(அவரவர் கருதியபடி)நின்றஆசிரியனே கைவிடாதே என்ற அன்பருக்கு-(எம்மை)கைவிடவேண்டாமென்று பிரார்த்தித்தஅன்பர்கட்கு, அன்புஆய்-அன்புருவாகி, கருத்தூடு-(அவரது)உள்ளத்தினுள்ளே, (இருந்து)உணர்த்துகுருவே - (அறியவேண்டுவன யாவும்) அறிவித்த ஆசிரியனே, கருதரிய—எ-று.

நாவுள்ளமெய்யருள் என்பதை நாஉள்ளம் மெய்யருள் எனப் பதம்பிரித்து,(மெய்நீங்காத)நாவினையும் உள்ளத்தினையு முடைய மெய்யரிடத்தில் எனப்பொருள் கூறினும் பொருந்தும். மெய்யானமெய் - முழுமெய், பொய்யான பொய் - முழுப்பொய். இதனால் ஆசிரியனே முத்தொழில் நடாத்து முதல்வராயிருப்பவனென்பது கூறப்பட்டது. 'நான் சுரன் ஞானியாமென்பது நன்றல, பிரமமே ஞானியாம் பேதமின்றென்பது' என்றார் பிறரும்.

குருவே சிவபரம்பொருளும், திருமாலும், நான்முகனுமென்பது பற்றி மைவிடாதெழுநீலகண்டகுருவே விஷ்ணுவடிவான ஞானகுருவே, மதர்மேவி மறையோது நான்முகக்குருவே'என்றும், எம்மதப்பொருளுமா யிருப்பதுபற்றிமதங்கடொறு நின்றகுருவே' என்றும், நீ மெய்யன்பராவார்க் குள்ளத்திலுணர்த்தி நிற்கின்றனை யென்பதுபற்றிக்' கைவிடாதே யென்றவன்பருக்கன்பாய்க் குருத்தூடுணர்த்து குருவே, என்றுங் கூறினர்.

மைவிடாதெழு நீலகண்டகுருவே யென்பதிலுள்ள சரிதம்.

யாதொரு தெய்வங்கொண்டீரத் தெய்வமாகியங்கே மாதொருபாகனார்தாம்வருவர் எனவும், நிற்கின்றதெல்லா நெடுமாலென்றோராதார், கற்கின்றதெல்லாங்கடை, என ஆழ்வாருங்கூறியபடி சிவவிஷ்ணு 'பிரமரூபங்களாக உள்ளவனென்றார் எனினுமமையும். (௬)

52. பண்ணே னுனக்கான பூசையொரு வடிவிலே
  பாவித்திறைஞ்ச வாங்கே
பார்க்கின்ற மலரூடு நீயே யிருத்தியப்
  பனிமல ரெடுக்கமனமும்
நண்ணே னலாமலிரு கைதான் குவிக்கவெனி
  னாணுமென் னுளநிற்றிநீ
நான்கும்பி டும்போ தரைக்கும்பி டாதலா
  னான்பூசை செய்யன் முறையோ
விண்ணே விணுதியாம் பூதமே நாதமே
  வேதமே வேதாந்தமே
மேதக்க கேள்வியே கேள்வியாம் பூமிக்குள்
  வித்தே யவித்தின் முளையே

கண்ணே கருத்தேயெ னெண்ணே யெழுத்தே
கதிக்கான மோனவடிவே
கருதரிய சிற்சபையி லானந்த நிர்த்தமிடு
கருணா காக்கடவுளே.

(ப—ரை.) உனக்கு ஆன பூசைபண்ணேன்—உனச்குச் சம்மதியான பூசையைச்செய்யேன், ஒருவடிவிலேபாவித்து இறைஞ்ச—ஒருருவத்தில் (நீ வீற்றிருப்பதாக) பாவனைசெய்து பணிய, ஆங்கே—அதற்காகவே, பார்க்கின்தமலருடும் — பார்க்கிற மலர்களெல்லாவற்றுள்ளும், நீயே இருத்தி — நீயே விளங்குகிறாய், (ஆதலால்) அப்பனிமலர் எடுக்க மனமும் நண்ணேன்—அந்தத்தட்பாகிய மலர்களைப்பறிக்கவும் மனங்கொள்ளேன், அல்லாமல்—அன்றியும், இருகைகுவிக்க எனின்—இருகை-சேர்க்கவென்றால், நீ என் உள்ளம் நிற்றி—நீயென்மனத்திலிருக்கிறாய், (ஆதலால்) நாணும்—என்மனம் நாணுகின்றது, (அப்படியொருமைப்பாடின்றி) நான் கும்பிடும்போது—நான் நமஸ்கரிக்கும்போது, அரைக்கும்பிடு ஆதலால்—(அது) அரை நமஸ்காரமாகையால், நான்—பூசைசெய்யல் முறையோ—நான் பூசனை புரிதல் நியாயமாகுமோ, (ஆகாது) விண்ணே—ஆகாயமே, விண் ஆதி ஆம்பூதமே—விண்முதலாகிய (ஆகாயம், வாயு, தேயு, அம்பு, பிருதுவியென்னும் பஞ்ச) பூதமே, நாதயே—நாததத்துவமே, வேதமே வேதாந்தமே—வேதமே வேதமுடிவே, மேதக்ககேள்வியே—மேன்மைபொருந்திய கேள்வியே, கேள்வி ஆம் பூமிக்குள் வித்தே—அக்கேள்வியாகிய நிலத்தில் முளைக்கின்ற விதையே, அவ்வித்தின் முளையே—அவ்விதையினின்று முண்டாகிற அங்குரமே, கண்ணே—கண்ணே, கருத்தே—மனமே, என் எண்ணே—என்தருக்கமே, எழுத்தே — இலக்கணமே, கதிக்கு ஆன மோனவடிவே—மோக்ஷத்திற்கேதுவாகிய மௌனரூபமே, கருதரிய, எ — று.

ஒருவடிவு—கல், மரம், செம்பு, மண் முதலியவற்றாற் செய்யப்பட்ட விக்ரஹங்களில் ஒன்று. பூதமே நாதமே என்றாரேனும் ப்ருதிவ்யாதி நாதாந்தமாகிய தத்துவத்தொகுதியா யிருப்பவனேயென்றதாகக்கொள்க. பதார்த்த தரிசநத்துக் கேதுவாய் நன்மை தீமைகளைப்பகுத்துணர்த்தலின்கண் என்றார். தீமைகளையொழித்து நன்மைகளை எண்ணுதற்குக் கருவியா யிருத்தலின் கருத்து என்றார்.

சிவாகமங்களிற் கூறியபடி செய்யும் பூசையை நான் அறியேன் என்பார் 'பண்ணேனுனக்கான பூசை' என்றும், அப்படிச்செய்வதும் பரமசிவத்தின் நவபேதங்களுள் ஒரு மூர்த்தியினுருவைப் பாவித்துப் பூசிக்க வேண்டுமென்பார் 'ஒருவடிவிலே பாவித்திறைஞ்ச' என்றும், அவன் சர்வபரிபூரணனுதலின் யான் அருச்சிக்கு மலரிலும் இருக்கின்றான் என்பார் 'ஆங்கேபார்க்கின்ற மலரூடு நீயேயிருத்தி' என்றும், ஆதலால் அம்மலரினைக்கொண்டு அர்ச்சிப்பதெவ்வாறென்பார், 'அப்பனிமலரெடுக்க மனமு நண்ணேன்' என்றுங் கூறினார். அகமும் புறமுமாக அமர்ந்திருத்தலின் அவனை வணங்குவ தெவ்வாறென்பார், 'நான் கும்பிடும்போ தரைக்கும்பிடாதலால் நான்பூசைசெய்தல் முறை

யோ' என்றார். பிரமன், விஷ்ணு, உருத்திரன், மகேச்சுரன், சதாசிவன், நாதம், விந்து, சத்தி, சிவமென்பவை நவந்தருபேதம் கண்ணே கருத்தே என்றது கட்புலனுக்குத் தோன்றும் பொருள்களிலும், மனத்திற்கு விஷயமாகும் பொருள்களிலும் இருப்பதுபற்றி. வேதங்களிற் கூறப்படும் எல்லாப்பொருள்களையும் ஒருவனுணர்தற்குத் தருக்கமும் இலக்கணமுமாகிய கருவியன்றியுணரப்படாமையின் 'எண்ணே யெழுத்தே' என்றார். சத்தப்பிரமத்தை நாதமென்றார்.

53. சந்ததமும் வேதமொழி யாதொன்று பற்றினது
தான்வந்து முற்றுமெனலால்
சகமீ திருந்தாலு மரணமுண் டென்பது
சதாநிஷ்டர் நினைவதில்லை
சிந்தை யறியார்க்கிது போதிப்ப தல்லவே
செப்பினும் வெகுதர்க்கமாம்
திவ்யகுண மார்க்கண்டர் சுகாதி முனிவோர்கள்
சித்தாந்த நித்யரலரோ
இந்த்ராதி தேவதைகள் பிரமாதி கடவுள
ரிருக்காதி வேதமுனிவர்
எண்ணரிய கணநாதர் நவநாத சித்தர்க
ளிரவிமதி யாதியோர்கள்
கந்தருவர் கின்னரர்கண் மற்றயர்க ளியாவரும்
கைகுவித் திடுதெய்வமே
கருதரிய சிற்சபையி லானந்த நிர்த்தமிடு
கருணா கரக்கடவுளே.

(ப—ரை.) வேதமொழி — வேதவாக்கியமானது, சந்ததமும் — எப்பொழுதும், யாதொன்றுபற்றின்—யாதொன்றிலாகிலும் பற்றுவைத்தால், அதுதான் வந்து முற்றும் எனலால்—அதுவேவந்து முடிவுபெறுமென்று சொல்லுதலால், சகமீது இருந்தாலும்—உலகத்திலிருப்பினும், மரணம் உண்டு என்பது—மரணமுளதென்பதை, சதாநிஷ்டர் நினைவது இல்லை-சதாநிஷ்டர்கள் நினைப்பதேயில்லை, ஈது—இது, சிந்தை அறியார்க்கு—மனதிலுணராதவர்க்கு, போதிப்பது அல்ல—அறிவுறுத்திக் கூறுவதன்று, செப்பினும் — (அப்படி அவர்கட்கு)—அறிவுறுத்தினும், வெகுதர்க்கம் ஆம் — அநேகமாகிய வாதுகள்விளையும், திவ்யகுணம்—தெய்விகமான குணத்தையுடைய, மார்க்கண்டர் சுகர் ஆதி முனிவோர்கள்—சுகர்முதலாகிய முனிவர்களும், சித்தாந்த நித்யர் அல்லரோ?— முடிவுசெய்யப்பட்ட நித்யாத்மாக்களல்லரோ, இந்த்ராதி தேவதைகள் — இந்திரன் முதலான (சாமாந்ய) தேவர்களும், பிரமாதி கடவுளர் — பிரமன் முதலான—(விசேஷ) தேவர்களும், இருக்கு ஆதிவேதம் முனிவர்-இருக்குமுதலிய வேதங்களை

(ஐயந்திரிபற) உணர்ந்த முனிவர்களும், எண் அரிய கணநாதர் – எண்ணுத லருமையாகிய கணதிபதிகளும், நவநாதசித்தர்கள் - ஒன்பது சித்தர்களும், இரவிமதி ஆதியோர்கள் - சூரியன் சந்திரன் முதலானவர்களும், கந்தருவர்– கந்தருவரும், கிந்நரர்கள் - கிந்நரரும், மற்றையர்கள் யாவரும் - வேறுளோரெல்லாரும், கைகுவித்திடு தெய்வமே - கைகூப்பிப் பணிதற்குரிய தெய்வமே, கருதரிய, எ–று.

ஜகம் - தோன்றியழிதன் மாலையவாகிய வுலகங்கள். யாரொருவர் எப்பொருளை யிடைவிடாது மநநம்பண்ணுகிறார்களோ அவரப்பொருளாகவே முடிவரென்பது வேதநூற் றுணிபாதலாலும், மரணமுண்டென்னு நினைப்பே மரணத்தை யுண்டாக்குமாதலாலும், சுகர் முதலானோர் பூததேஹத்தோடு சிதாகாயத்தை யடைந்ததனுலும் குமாரதேவர் முதலானோர் சுத்தசாதகம் முதலிய நூல்களில் இவ்வாறு கூறுதலாலும் மரணமுண்டென்பது சதாநிஷ்டர் நினைவதில்லையென்றார்.

'சந்ததமும் வேதமொழி யாதொன்று பற்றினது தான்வந்து முற்றும்' என்றது, நான்குவேத மகாவாக்கியங்களில் எந்தவேத மகாவாக்கியத்தையனுசந்திக்கினும் அதுவாகவே முடிவுபெறலாலும் 'சகமீதிருந்தாலும் மரணமுண்டென்பது சதாநிஷ்டர் நினைவதில்லை' என்றது, அதுபற்றி யுலகின்கண் உடம்பொடு கூடியிருக்கினும் சீவன் முத்திபெற்று மரணமுண்டென்ப தறியாராகலாலும், சிந்தையறி யார்க்கிது போதிப்பதல்லவே செப்பினும் வெகுதர்க்கமாம்' என்றது, பிறர்க்குப் போதிப்பினும் தர்க்கிக்கவிடந்தரலாலும், 'திவ்யகுண மார்க்கண்டர் சுகராதி முனிவோர்கள் சித்தாந்த நித்யரலரோ' என்றது, இத்தகைய அரியதவங்கைகூடினோர் மார்க்கண்டேயர் சுகர்முதலான முனிசிரேஷ்டராதலாலும் எனக்கொள்க. (எ)

54. துள்ளுமறி யாமனது பலிகொடுத் தேன்கர்ம
துஷ்டதே வதைகளில்லை
துரியநிறை சாந்ததே வதையா முனக்கே
தொழும்பனன் பபிஷேகநீர்
உள்ளுரையி லென்னுவி நைவேத்தி யம்ப்ராண
னேங்குபதி தூபதீபம்
ஒருகால மன்றிது சதாகால பூசையா
வொப்புவித் தேன்கருணைகூர்
தெள்ளிமறை வடியிட்ட வமுதப் பிழம்பே
தெளிந்ததே னேசீனியே
திவ்யரச மியாவுந் திரண்டொழுகு பாகே
தெவிட்டாத வானந்தமே

கள்ளனறி வூடுமே மெள்ளமெள வெளியாய்க்
கலக்கவரு நல்லவுறவே
கருதரிய சிற்சபையி லானந்த நிர்த்தமிடு
கருணா கரக்கடவுளே.

(ப—ரை.) துள்ளுமறியாமனது - விஷயாதிகளிற் றுள்ளிப்பாயும் ஆடாகியமனதை, பலிகொடுத்தேன் - பலியிட்டேன், (ஆதலால்) கர்மதுஷ்ட தேவதைகள் இல்லை—பாபரூபமாகிய துஷ்டதேவதைகள் (இனி யென்னைவருத்த) உளவான அல்ல, துரியம் நிறை - துரியபதத்தில் நிறைந்த, சாந்ததேவதை ஆம் உனக்கே - சாந்ததேவதையாகிய, உனக்கே, தொழும்பன் அன்பு - உன் தொண்டனாகிய அடியேனது அன்பானது, அபிஷேக நீர் - திருவபிஷேக தீர்த்தமாகும், உள் உறையில் - தேவரீர் என் மனத்திற்றங்கினால், என் ஆவி—என்னுயிரானது, நைவேத்தியம்-(தேவரீருக்கு)-நைவேத்யமாகும், ப்ராணன்—ப்ராணவாயுவும், ஓங்கும்மதி - உயர்ந்த அறிவும், தூபதீபம் - தூபதீபங்களாகும், இது-(இவ்வாறு அடியேன் பூசனைபுரிவதாகிய)-இது, ஒருகாலம் அன்று-ஒருபொழுதில் மாத்திரமே யல்ல, சதாகாலபூசை ஆ ஒப்பிவித்தேன்-எக்காலமுமுள்ள பூசையாக ஒப்பிவித்தேன், (ஆதலால்) கருணைகூர்-மிகுந்த கிருபையைச்செய், மறைதெள்ளிவடியிட்ட - வேதங்களால் தெளிவித்து வடிக்கப்பட்ட - அமுதப்பிழம்பே அமிர்தத்தொகுதியே, தெளிந்த தேனே - தெளிந்த தேனே, சீனியே - சீனிசர்க்கரையே, திவ்யரசம்யாவும் - மதுரமான சுவைகளெல்லாம், திரண்டு ஒழுகுபாகே—ஒருசேரக்கூடி யொழுகாநின்றபாகே, தெவிட்டாத ஆநந்தமே—வெறுக்கப்படாத ஆனந்தமே, கள்ளன் அறிவூடும்—கள்வனாகிய என்னறிவினிடத்தும், மெள்ள மெள்ள—பையப்பைய, வெளியாய்க் கலக்கவரும்—வெளிப்படச் சேரவருகின்ற, நல்லவுறவே—நன்மைதரத்தக்க சுற்றமே, கருதரிய—,எ - று.

பிராணவாயு புகைரூபமாதலால் அதனைத் தூபமாகவும், மதி ஒளிரூபமாதலால் அதனைத்தீபமாகவுங் கூறினார். கள்ளனறிவூடும் என்னும் உம்மை இறந்தது தழீஇயது, கள்ளமற்றவர் அறிவூடு பலத்தலேயன்றி யெனப்பொருள் தருதலால். மனது பலிகொடுத்தல்—மனதை நசிப்பித்தல் என்பதாம்.

'சங்கற்ப நாசத்தா லெளிதாக மனநாசந் தானேயெய்தும்
அங்குற்ற மனமிறக்கிற் சனனமரணங்களெனு மரமுமாயும்'
என்றார் மேலோர்.

"துள்ளுமறியாமனது" என்பதை, துள்ளும் அறியா மனது எனச்சொல்வகைசெய்து பொருள்கொள்ளினும் பொருந்தும். பிறவுயிர்களைக்கொன்று பலியிடல் துர்த்தேவதைகட் காதலாலும், இறைவன் மெய்யுணர்ந்தா ருள்ளத்தே தோன்றுகின்றவ னாதலாலும், மனத்தைப் பலியிட்டதாக 'துள்ளுமறி யாமனது பலிகொடுத்தேன்' என்றும், ஆதலால் இனிஎன்னைத் துர்த்தேவதைகள் த

ருத்தா வென்பதுணர்த்திக் கர்மதுஷ்ட 'தேவதைகளில்லை' என்றும், மனத்தைப் பலியிடும்பொருளாக உருவகஞ் செய்ததற்கேற்ப அன்பேயபிடேக நீராகக் கொண்டாரென்பார் 'துரியநிறை சாந்ததேவதையா முனக்கே தொழும்பனன்பபிஷேகநீர்' என்றும், அதற்கு நைவேத்தியமாக 'உள்ளுறையு மென்னுவி நைவேத்தியம்' என்றும், தூபதீபம் 'பிராண னோங்குமதி தூபதீபம்' என்றும், இது சதாகால பூசையாகச்செய்து வருகின்றேன் என்பார் ஒருகால மன்றிது சதாகாலபூசையாய் 'ஒப்புவித்தேன்' என்றும், ஆதலால் நீ யருள்செய்ய வேண்டுமென்பார் 'கருணைகூர்' என்றுங்கூறினர். (அ)

55\. உடல்குழைய வென்பெலா நெக்குருக விழிநீர்க
ளூற்றென வெதும்பியூற்ற
வூசிகாந் தத்தினைக் கண்டணுகல் போலவே
யோருறவு முன்னியுன்னிப்
படபடென நெஞ்சம் பதைத்துண் ணடுக்குறப்
பாடியா அக்குதித்துப்
பனிமதி முகத்திலே நிலவனைய புன்னகை
பரப்பியார்த் தார்த்தெழுந்து
மடலவிழு மலரனைய கைவிரித் துக்கூப்பி
வானேய வானிலின்ப
மழையே! மழைத்தாரை வெள்ளமே நீடூழி
வாழியென வாழ்த்தியேத்தும்
கடன்மடை திறந்தனைய வன்பரன் புக்கெளியை
கன்னெஞ்ச னுக்கெளியையோ
கருதரிய சிற்சபையி லானந்த நிர்த்தமிடு
கருணா கரக்கடவுளே.

(ப-ரை.) உடல்குழைய—தேகம் இளகவும், என்பு எல்லாம் நெக்கு உருக—எலும்புகள்யாவும் நெகிழ்ந்துருகவும், விழிநீர்கள் ஊற்று என வெதும்பி ஊற்ற—கண்ணீர் (மணற்கேணி) ஊற்றென்னலாம்படி கொதித்தொழுகா நிற்கவும், ஊசிகாந்தத்தினைக்கண்டு அணுதல்போல—இருப்பூசியானது காந்தக் கல்லினைக்கண்டு (அதனிடத்துச்சென்று) பொருந்துதல்போல, ஓர் உறவும்உன்னி உன்னி ஒப்பற்ற (ஆத்ம) உறவாகியவுன்னையும் நினைத்து நினைத்து, நெஞ்சம் படபடென பதைத்து—மனம் படபடெனத்துடித்து, உள் நடுக்குற—மனம் நடுக்கமடையவும், பாடி ஆடி குதித்து—பாடி ஆடி (களிப்பால்) துள்ளி, பனிமதி முகத்திலே நிலவு அனைய—தட்பம்பொருந்திய சந்திரனிடத்தி லுண்டாகுஞ் சந்திரிகைபோன்ற, புன்னகை பரப்பி புன்சிரிப்பை விரித்து, ஆர்த்து ஆர்த்து எழுந்து — பலகா லாரவாரித் தெழுந்து, மடல் அவிழும் மலர் அனைய கை — இதழ்கள் விரியாநின்ற தாமரைமலர்போன்ற கைகளை, விரித்து கூப்பி — விரித்து குவித்து, வானே—சிதாகாயமே, அவ்வானில் இன்ப மழையே—அப்பரமா

காயத்திநின்றுஞ் சொரிகின்ற ஆநந்தவருஷமே மழைதாரை வெள்ளமே—அந் தமழைத்தாரைகளா லுண்டாகும் வெள்ளப்பெருக்கே, நீடூழிவாழியென—நீடூ ழிகாலம் வாழ்கவென்று, வாழ்த்தி எத்தும்—திருப்பல்லாண்டு பாடித்துதிக்கின் ற, கடல்மடை திறந்தனைய – கடலானது மடைதிறந்து பாய்ந்தாற்போன்ற, அன்பர் அன்புக்கு எளியை – அன்பரது அன்புக்கு எளியையாயிருக்கிறாய்; கல்நெஞ்சனுக்கு எளியையோ—இக் கல்மனமுடையேனுக்கு எளியையா யிரு ப்பாயோ, கருதரிய—,௭ - று.

என்புருகுதற்குக் காரணம் இவரது அன்பெனக்கொள்க. ஊற்றுநீரும் கண்ணீரும் வெதும்புத லியற்கையாகலின் ஊற்றுஎன வெதும்பி என்றார் ம திமுகத்துக்கும் நிலவு புன்னகைக்கும் உவமையாக்கப்பட்டன. ஒருவரால் கா ரியங்கொள்வோர் அவரை வாழ்த்துதல் பெருவழக்காதலால், தமக்கெளியனுக் குகைக்கு நீடூழிவாழி யென வாழ்த்துவாராயினர். இதனை ‘வாழ்த்துவதும் வா னவர்கள் தாம் வாழ்வான் மனநின்பால்—தாழ்த்துவதும் தாமுயர்ந்துதம்மையெ லாந் தொழவேண்டி’ என்னுந் திருவாசகத்தானறிக. (௬)

56. இங்கற்ற படி யங்கு மெனவறியு நல்லறிஞ
ரெக்கால மும்முதவுவார்
இன்சொறவ ருர்பொய்ம்மை யாமிழுக் குரையா
ரிரங்குவார் கொலைகள்பயிலார்
சங்கற்ப சித்தரவ ருள்ளக் கருத்திலுறை
சாக்ஷிநீ யிகபரத்தும்
சந்தாத கற்பகத்தேவா யிருந்தே
சமஸ்தவின் பமுமுதவுவாய்
சிங்கத்தை யொத்தெனைப் பாயவரு வினையினைச்
சேதிக்க வருசிம்புளே
சிந்தாகு லத்திமிர மகலவரு பானுவே
தீனனேன் கறையேறவே
கங்கற்ற பேராசை வெள்ளத்தின் வளருட்
கனவட்டக் கப்பலே
கருதரிய சிற்சபையி லானந்த நிர்த்தமிடு
கருணா கரக்கடவுளே.

(ப—ரை.) இங்கு அற்றபடி—இப்பிறப்பில் அற்றுத் தீர்ந்தவகை, அங்கு ம் என அறியும்—மறுபிறப்பிலு மாமென்றறிகின்ற, நல் அறிஞர் – பேரறிவா ளர், எக்காலமும் உதவுவார்—எக்காலத்திலும் பிறருக்கு உதவிசெய்வார்கள், இ ன்சொல்தவருர்—மதுரமொழி பிசகார்கள், பொய்ம்மை ஆம் இழுக்கு உரையா ர்—பொய்யாகிய வழு உச்சொற்களைச் சொல்ல, இரங்குவார் – (ஜீவர்கள்மேல்) இரக்கங்கொள்வார்கள், கொலைகள் பயிலார்—ஜீவஹிம்சை செய்யமாட்டார்கள்,

சங்கற்பசித்தர்—சங்கல்பமனத்தை யுடையவராகிய, அவர் — அவரது, உள்ளக் கருத்தில்—மனக்கருத்தில், உறை — வாசஞ்செய்கின்ற, சாக்ஷிநீ — சாக்ஷிபூதனுகிய நீ, இகபரத்தும்—இம்மை மறுமைகளிலும், சந்தானம் கற்பகம் தேவு ஆய் இருந்து — சந்தான விருக்ஷம்போலவும் கற்பக விருக்ஷம்போலவும் உள்ள கடவுளா யிருந்து, சமஸ்த இன்பமும் உதவுவாய் — எல்லாச் சுகங்களையுந் தருவாய், சிங்கத்தை ஒத்து—சிங்கத்தைப்போன்று, எனை பாயவரு வினையினை-என்னைப் பாயவருகின்ற வினைகளை, சேதிக்க வருசிம்புளே—கிழித்தெறிதற்காக வருகிறசரபமே, சிந்தா ஆகுலம் திமிரம் அகலவரு—மனக்கிலேசங்களாகிய இருள் நீங்க வருகின்ற, பானுவே-சூரியனே, தீனனேன்—எளியேனுகிய நான், கரைஏற — (பிறவிக்கடலைக்கடந்து) கரை ஏறும்படி, கங்கு அற்ற—வரம்புகடந்த, பேராசை வெள்ளத்தின்வளர்—எனது பேரன்பாகிய நீர்ப்பக்கத்திற் சஞ்சரிக்கிற, அருள் ககனம் வட்டம் — கிருபையுடைய ஆகாயவட்டத்தில் (உலாவுகிற), கப்பலே—மரக்கலமே, கருதரிய—,எ - று.

இங்கற்றபடி அங்கும் என அறிதலும், உதவுதலும், இன்சொல்தவருமையும், பொய்யுரையாமையும், உயிர்கட்கிரங்குதலும், கொலைகள் பயிலாமையும் ஆகிய ஏற்பாட்டை, மனத்தில் அமைத்துக் கோடலையுடையாரை சங்கற்ப சித்தர் என்ருர். சந்தானம் கற்பகம் என்பன பஞ்சதருக்களில் இரண்டு. பஞ்சதருக்களாவன—சந்தனம்—கற்பகம் மந்தாரம்—அரிசந்தனம்—பாரிசாத மென்பன. அவை அவ்விடத்துச் சென்றவர்க்கே எல்லா இன்பங்களையும் உதவுதற்கு உரியனவேயன்றி, கடவுள்போல இகத்தும் பரத்தும் எல்லா இன்பங்களையும் உதவுதற்குரியனவாகா என்பதுதோன்ற இகத்தும்பரத்தும் சமஸ்த இன்பமும் உதவுவாய்என்ருர். சரபம் என்பது எட்டுக் கால்களையுடைய ஒருபட்சி. அதுசிங்கத்தை மிகவும் எளிதாகக் கவர்ந்து உண்பது என்பர். ஆகாயவட்டம்—ஆகாய மண்டலம் பூமண்டலம் என்பதுபோல.

இம்மை மறுமை இன்பநுகர்ச்சி யுயர்ந்த மெய்யுணர்ச்சி யுடையோர் ஈகை, இன்சொல், பொய்யாமை, சீவகருணை, கொல்லாமைமுதலிய நற்குணங்கள் கூடிவாழ விளங்குபவராதலாலும், அவர்கள் இக்குணங்களையே சங்கற்பமாகவுடையாராகலாலும், அவருள்ளத்தில் அவர் நினைத்த வடிவொடுஞ் சென்றெய்தலாலும் அவர் வேண்டிய வேண்டியாங் கெய்தவுதவு கின்றதாலும், அப்படிப்பட்ட நீயென் வினையை நீக்கவேண்டு மென்பதற் குருவகமாக்கி "இங்கற்ற படியங்கு மெனவறிபுநல்லறிஞ ரெக்காலமும்முதவுவார், இன்சொறவருர்பொய்ம்மையா யிழுக்குரையா ரிரங்குவார் கொலைகள்பயிலார், 'சங்கற்ப சித்தரவருள்ளக்கருத்திலுறை சாக்ஷிநீயிகபரத்தும், சந்தான கற்பகத்தேவாயிருந்தே சமஸ்தவின்பமுமுதவுவாய், சிங்கத்தையொத்தெனைப் பாயவரு வினையினைச் சேதிக்க வருசிம்புளே' என்றும், மனக்கவலையை யகற்றவேண்டும் என்பார் 'சிந்தாகுலத்திமிர மகலவருபானுவே' என்றும், யான் பிறவிக்கடல் கடப்பதற்கோர் புணையாயினை என்பார் 'தீனனேன் கரையேறவே கங்கற்றபேராசைவெள்ளத்தின் வளரருட் ககனவட்டக் கப்பலே' என்றுங் கூறினர். (கo)

**சித்தர்கணம்.**

57. திக்கொடு திகந்தமும் மனவேக மென்னவே
சென்றோடி யாடிவருவீர்
செம்பொன்மக மேருவொடு குணமேரு வென்னவே
திகழ்துருவ மளவளாவி
யுக்ரமிகு சக்ரதர னென்னநிற் பீர்கையி
லுழுந்தமிழு மாசமனமா
வோரேழு கடலையும் பருகவல் லீரிந்த்ர
னுலகுமயி ராவதமுமே
கைக்கெளிய பந்தா வெடுத்துவிளை யாடுவீர்
ககனவட்டத்தை யெல்லாம்
கடுகிடை யிருத்தியே யஷ்டகுல வெற்பையுங்
காட்டுவீர் மேலுமேலும்
மிக்கசித் திகளெலாம் வல்லநீ ரடிமைமுன்
விளங்கவரு சித்தியிலிரோ
வேதாந்த சித்தாந்த சமரசநன் னிலைபெற்ற
வித்தகச் சித்தர்கணமே.

(ப - ரை.) திக்கொடு திக் அந்தமும் – அஷ்டத்திக்குகளிலும் அத்திக்குகளின் முடிவிலும், மனவேகம் என்ன–மனோவேகம் என்று சொல்லும்படி, சென்று – (விரைந்து) சென்று, ஓடி ஆடி வருவீர் – ஓடியும் விளையாடியும் வருவீர்கள், செம்பொன் மகமேருவோடு–செம்பொன்னாகிய மகம் மேரு மலையோடு, குணமேரு என்ன நற்குணமாகிய மேருமலை என்றுசொல்ல, திகழ் விளக்குகின்ற, துருவம் அளவு அளாவி – துருவமண்டலத்தின் அளவும்போய், உக்ரமிகு – வேகம் மிகுந்த சக்ரதரன் என்ன–சக்ராயுதத்தை ஏந்திய திரிவிக்கிரமன்போல, நிற்பீர்–நிலைத்திருப்பீர், கையில் உழுந்து - கையில் உள்ள உழுந்தினளவாக, அமிழும் ஒரேழுகடலையும்-ஆழ்ந்த சப்த சமுத்திரங்களையும், ஆசமனமாபருகவல்லீர்–ஆசமன நீராகக் குடிக்கவல்லீர்கள், இந்த்ரன் உலகும் ஐராவதமும்–இந்திரலோகத்தையும் அதிலுள்ள ஐராவதமென்னும்யானையையும் கைக்கு எளிய பந்தாஎடுத்து–கைக்கு இலேசான பந்துபோல எடுத்து, விளையாடுவீர்-விளையாட்டுச் செய்வீர்கள், ககனவட்டத்தைஎல்லாம்–ஆகாய மண்டலங்கள் முழுவதையும், கடுகிடை இருத்தி – கடுகைத் தொளைத்து (அதில்) புகட்டி, அஷ்டகுலவெற்பையும்–அஷ்டகுலபர்வதங்களையும், காட்டுவீர்–காணச்செய்வீர்கள், மேலுமேலும் – மென்மேலும், மிக்க சித்திகளெலாம்–மிகுந்த சித்திகளை யெல்லாம், வல்லநீர்– (செய்துகாட்ட) வல்ல நீங்கள், அடிமைமுன் விளங்கவரு சித்தியிலிரோ – உங்கள் அடிமையாகிய எனக்கு எதிரில் பலருமறிய வாராநின்ற சித்தியையுடையீர் அல்லீரோ, வேதாந்த சித்தாந்த சமரசநல் நிலைபெற்ற–வேதாந்தத்தையும் சித்தாந்தத்தையும் சமரசமாகப் பாவித்தலாகிய

சிறந்த நிலையை யடைந்ததனல் உண்டாகிய, வித்தகம் – ஞானத்தையுடைய, சித்தர்கணமே–சித்தர் கூட்டமே—எ - று.

சக்ரதரன் எனப் பொதுப்படக் கூறினும் துருவம் அளவளாவி என்றதனுல் பேருருக்கொண்ட திரிவிக்கிரமாவதாரத்தை உணர்த்தி நின்றது ஆசமனம்–சந்த்யாவந்தனகாலத்தில் மூன்றுதரம் அள்ளிக்குடிப்பதாகிய நீர். "ககன வட்டத்தை யெல்லாம் கடுகிடை யிருத்தி அஷ்டகுல வெற்பையுங் காட்டுவீர்" என்றதனுல் அண்டத்தை அணுவாகவும் அணுவை அண்டமாகவும் செய்ய வல்லவர் என்றதாயிற்று.

இதனுல் அச்சித்தர் பெருமை கூறினர்–இவ்வாசிரியற்குப் பரமாசிரியராகிய திருமூலர், சித்தர் மரபினராதலின் என்க.

எழுகடல்–உவர்நீர், பால், தயிர், நெய், கருப்பஞ்சாறு, தேன், என்பனவாம். இதனை "பரவுமிவ் வுலகி லுப்பு பால் தயிர் நெய்யே கன்னல், இரதமா மது நீராகு மெழுகட லேழு தீவும்" என்னுங் கந்தபுராணத்தானறிக. ஐராவதம்–பாற்கடலி அமுதொடுபிறந்த நாற்கோட்டு வெள்ளையானை. இது கீழ்த் திசைக் களிறனவும் படும், அட்டகுலவெற்பு-கயிலை, இமயம், மந்தரம், விந்தம், நிடதம், ஏமகூடம் நீலகிரி, கந்தமாதனம் என்பனவாம்.

வேதாந்த சித்தாந்த சமரசநிலையாவது-வேதாந்தத்தின் கருத்தையும் சித்தாந்தத்தின் கருத்தையும் ஒரு நிகரானவாகக் கருதுதல். மிக்க சித்திகளென்றது அணிமாமுதலிய அஷ்ட சித்திகளையும். (க)

58. பாட்டளி துதைந்துவளர் கற்பகந னீழலைப்
பாரினிடை வரவழைப்பீர்
பதுமநிதி சங்கநிதி யிருபாரிசத்திலும்
பணிசெயுந் தொழிலாளர்போல்
கேட்டது கொடுத்துவர நிற்கவைப் பீர்பிச்சை
கேட்டுப் பிழைப்போரையும்
கிரீடபதி யாக்குவீர் கற்பாந்த வெள்ளமொரு
கேணியிடை குறுகவைப்பீர்
ஓட்டினை யெடுத்தாயி ரத்தெட்டு மாற்றுக
வொளிவிடும் பொன்னுக்குவீர்
உரகனு மிளைப்பாற யோக தண்டத்திலே
யுலகுசுமை யாகவருளான்
மீட்டிடவும் வல்லநீரென்மனக் கல்லையனன்
மெழுகாக்கி வைப்பதரிதோ
வேதாந்த சித்தாந்த சமரசநன் னிலைபெற்ற
வித்தகச் சித்தர்கணமே,

(ப - ரை.) பாட்டு அளி துதைந்து வளர் - பண்பாடுதலையுடையவண்டுகள் நெருங்கி வளரும், கற்பக நல் நீழலை-கற்பக விருக்ஷத்தினதுநல்லநீழலை,பாரின் இடை வரவழைப்பீர்—உலகத்தில் வரும்படி செய்வீர்கள், பதுமநிதிசங்கநிதி-பதுமநிதியும் சங்கநிதியும், இருபாரிசத்திலும்-இரண்டு புறத்திலும், பணிசெயும் தொழிலாளர்போல் - வேலைசெய்கின்ற ஊழியக்காரர்போல, கேட்டது கொடுத்துவர-கேட்ட வஸ்துக்களைக் கொடுத்துக்கொண்டு வருதற்காக, நிற்கவைப்பீர் - நிற்கும்படி செய்வீர்கள், பிச்சை கேட்டுப் பிழைப்போரையும்-பிச்சை கேட்டு (வாங்கி) புசித்து உயிர்வாழ்வோரையும், கிரீடபதி ஆக்குவீர் - முடிமன்னராகச் செய்வீர்கள், கற்பாந்தவெள்ளம் - கற்பமுடிவில் உண்டாகிற பிரவாகத்தை, ஒரு கேணியிடை குறுகவைப்பீர்-ஒரு கிணற்றினிடத்துச் சுருங்கி அடங்கவைப்பீர்கள், ஓட்டினை எடுத்து - (மட்கலம் சிதைந்த) ஓட்டை எடுத்து, ஆயிரத்தெட்டு மாற்றாக ஒளிவிடும் - ஆயிரத்தெட்டு மாற்றுள்ளதாகப் பிரகாசிக்கிற, பொன் ஆக்குவீர்-சுவர்ணமாகச் செய்வீர்கள், உரகனும் இளைப்பாற - ஆதி சேஷனும் இளைப்பாறும்படி, உலகு - உலகத்தை, யோகதண்டத்திலே சுமையாக - யோகதண்டத்தில் சுமையாய்நிற்க, அருளால் மீட்டிடவும் வல்ல நீர் - கிருபையினால் மீட்கவும் வல்லமையுடையீராகிய நீங்கள், என் மனக்கல்லை-என் மனமாகிய பாறையை, அனல் மெழுகு ஆக்கிவைப்பது அரிதோ—நெருப்பிலிட்ட மெழுகுபோல் உருகும்படி செய்துவைப்பதாகிய இது உங்களுக்கு அரிதாமோ, வேதாந்த—எ - று.

பத்மநிதி-தாமறைவடிவினதாகியநிதி சங்கநிதி-சங்கின்வடிவினதாகியநிதி இவ்விரண்டுந் திருப்பாற் கடல்கடைகையில், அதில்தோன்றிக் குபேரனுக்குக் கொடுக்கப்பட்டவை அவை எடுக்குந்தோறுங் குறைபடாது வெள்ளியையும் பொன்னையுங் கொடுக்குமென்பர்.

கற்பகநிழலைப் பாரினிடை வரவழைத்தல் முதலிய செயற்கரிய செயல்களைச் செய்யவல்லவுங்களுக்கு என்மனம் குழையும்படி செய்தல் அருமையோ என்பது கருத்து. (உ)

59. பாரோடுநன் னீராதி யொன்றொடொன் றாகவே
பற்றலிய மாம்போதினில்
பரவெளியின் மருவுவீர் கற்பாந்த வெள்ளம்
பரந்திடி னதற்குமீதே
நீரினுறை வண்டாய்த் துவண்டுசிவ யோகநிலை
நிற்பீர் விதற்பமாகி
நெடியமுகி லேழும் பரந்துவரு ஷிக்கிலோ
நிலவுமதி மண்டலமதே
ஊரென விளங்குவீர் பிரமாதி முடிவில்லிடை
யூர்தியரு ளாலுலவுவீர்

உலகங்கள் கீழ்மேல வாகப் பெருங்காற்
றுலாவினற் றாரணையினுல்
மேருவென வசையாம நிற்கவில் லீருமது
மேதக்க சித்தியெளிதோ
வேதாந்த சித்தாந்த சமரசநன் னிலைபெற்ற
வித்தகச் சித்தர்கணமே.

(ப—ரை.) பாரொடு நல் நீர் ஆதி—பூமியோடு நீர் முதலியவைகளும், ஒன்றொன்றொன்றாகவே பற்றி - ஒன்றொடொன்றாகத் தொடர்ந்து, லயம் ஆம் போதினில்—ஒடுக்கமுறுங்காலத்தில், பரவெளியில் மருவுவீர் — பரமாகாயத்தில் பொருந்தியிருப்பீர்கள், கற்பாந்தவெள்ளம் பரந்திடின்—யுகாந்த காலவெள்ளம் பரவினல், அதற்குமீது—அதற்குமேல், நீரில் உறை — நீரில்வாசம்பண்ணுகிற, வண்டு ஆய் துவண்டு வண்டுபோலச்சுழன்று, சிவயோக நிலைநிற்பீர்-சிவயோக நிலையில் வீற்றிருப்பீர்கள், நெடிய முகில் ஏழும்—பெரிதான சப்தமேகங்களும், விகற்பமாகி — வேறுபட்டு, பரந்து — பரவி, வருஷிக்கில் — மழைபொழிந்தால், நிலவு — சந்திரிகையை யுடைய, மதிமண்டலமதே — சந்திரமண்டலமே, ஊர் என விளங்குவீர் — ஊராகக்கொண்டு பிரகாசிப்பீர்கள், பிரமாதி முடிவில் — பிரமன் முதலானோருடைய முடிவு காலத்தில், விடையூர்தி அருளால் — இடபவாஹனனுகிய பரமசிவனது கிருபையால், உலவுவீர்-சஞ்சரிப்பீர்கள், உலகங்கள்-உலகங்களெல்லாம், கீழ்மேலவாக-கீழ்மேலாகும்படி, பெருங்காற்றுஉலாவின்-ஊழிக்காற்றாகிய பிரசண்ட மாருதம் வீசினுல், நல்தாரணையினுல்—நல்லதாரணை யோகத்தினுல், மேருவென அசையாமல் நிற்கவல்லீர்-மேருமலைபோன்று சலிக்காமல் நிற்கவல்லீர், உமது — உம்முடைய, மேதக்க — மேன்மைபொருந்திய, சித்தி — சித்தியானது, எளிதோ — சொல்லுதற் கெளிதாகுமோ, வேதாந்த—எ - று.

கற்பாந்தகாலத்தை 'பாரொடுநனீராதி யொன்றொடொன்றாகவே பற்றிலய மாம்போது' என்றார். பார் நீரினும், நீர் அனலிலும், அனல் காற்றினும், காற்று ஆகாயத்திலும் ஒடுங்கு முறைமை கற்பாந்த காலத்திலென்க. பிரமாதி முடிவில் என்பது பிரமன் முதலான தேவர்கள் முடியும் காலத்தை இதனை நூறுகோடிபிரமரு நுங்கினர்-ஆறுகோடி நாராயணரங்கனே, - மாறில் கங்கை மணலெண்ணிலிந்திரர்—ஈறிலாதனீசனொருவனே, என்ற திருநாவுக்கரசு சுவாமிகள் தேவாரத்தானும், "செத்துப்பிறக்கின்ற தெய்வங்கண் மணவாள" என்ற மேலோர் திருவாக்கானுமறிக. தாரணை-எண்வகையோக வுறுப்பினுள் ஒன்று. அதுகண்டம்-இதயம் நெற்றி—கபாலம்—நாபி இவற்றிலொன்றிற் சந்ததஞ் சிந்தைவைப்பதாம்.

ஐம்பூதங்களும் ஒன்றிலொன்று ஒடுங்குங்காலத்துக்கற்பாந்தவெள்ளத்தில் வண்டாய் உலவுதல் முதலிய சித்திகளைச் செய்யவல்ல வுமது பெருமையை யெம்மாற் சொல்ல முடியுமோ என்பது கருத்து. (ரு)

60. எண்ணரிய பிறவிதனின் மானுடப் பிறவிதா
னியாதினும் மரிதரிதுகாண்
இப்பிறவி தப்பினு லெப்பிறவி வாய்க்குமோ
வேதுவருமோ வறிகிலேன்
கண்ணக னிலத்துநா னுள்ளபொழு தேயருட்
ககனவட் டத்தினின்று
காலூன்றி மழைபொழியு மானந்த முகிலொடு
கலந்துமதி யவசமுறவே
பண்ணுவது நன்மையின் னிலைபதியு மட்டுமே
பதியாயிருந்த தேகப்
பவுரிகுலை யாமலே கவுரிகுண் டலியாய்
பண்ணவித னருளினாலே
விண்ணிலவு மதியமுத மொழியாது மொழியவே
வேண்டுவே னுமதடிமைநான்
வேதாந்த சித்தாந்த சமரசநன் னிலைபெற்ற
வித்தகச் சித்தர்கணமே.

(ப-ரை) எண்ணரிய பிறவிதனில்-எண்ணுதற்கரிதாகிய பிறப்புகளில் மானுடப்பிறவிதான் – மனிதப்பிறப்பே, யாதினும் – எல்லாப் பிறவிகளினும், அரிது அரிது – கிடைத்தற்கு மிகவும் அரியது, இப்பிறவி தப்பினுல் – இந்த ஜன்மந் தவறினுல், எப்பிறவி வாய்க்குமோ–எந்த ஜன்மம் கிடைக்குமோ, ஏது வருமோ-என்ன தீமைகளுண்டாகுமோ, அறிகிலேன்–தெரிகிலேன், (ஆதலால்) கண்ணகல் நிலத்து – இடமகன்ற பூமியில், நான் உள்ளபொழுதே – நான் இருக்கும்பொழுதே, அருள் ககனவட்டத்தில் நின்று – திருவருளாகிய ஆகாய மண்டலத்தில் நின்றும், காலூன்றி ஆனந்த மழை பொழியும்-நிலைத்து நின்று இன்பமழையைச் சொரிகின்ற, முகிலொடு-மேகத்துடன், கலந்து – கூடி, மதி அவசம் உற பண்ணுவது நன்மை - என் அறிவானது பரவசப்படும்படி செய்வது நன்மையாகும், இந்நிலைபதியும் மட்டும்–இந்நிலை கைகூடுகிறவரைக்கும், பதியாய் இருந்த-எனக்கு இடமாயிருந்த, தேகப்பவுரி குலையாமல்–தேகமாகிய பவுரிக்கூத்துக் கலையாமல், கவுரி–கௌரி யாகிய, குண்டலி ஆய்-குண்டலி சத்தி என்கிற, பண்ணவிதன் அருளினாலே - மாதேவியினது கிருபையினால், விண் நிலவும் மதி அமுதம்-சிதாகாசத்தில் நிலை பெற்றிருக்கிற சந்திரனிடத்துள்ள அமிர்தமானது, ஒழியாது பொழிய - இடை யறாது பெய்ய, உமது அடிமை நான் வேண்டுவேன் - உமதடிமைத் திறத்தை நான் விரும்புவேன், வேதாந்த—எ - று.

ஞானவாசிட்டம் "எறியுங் கடலின் நுகத்துளையி னியாமைக் கழுத்துப் புகுவதுபோல், பொறிவெம் பிறவி யநேகத்தாற் புருடன் விவேகி யெனப் பிறப்பான்" எனக் கூறப்படுதலின், "எண்ணரிய பிறவிதனின் மானிடப் பிறவிதானியாதினும் அரிதரிது" என்றார். குண்டலி சக்தி-மூலாதாரத்தில் பாம் புருவமாய் இருப்பதாகிய ஓர் சத்தி பவுரி-ஓர்வகைக்கூத்து.

அண்டசம் - சுவேதசம் - உற்பீசம் - சராயுசம் என்பவை நால்வகை யோனியும், தேவர் - விலங்கு - புள் - நீர்வாழ்வன - ஊர்வன - பறப்பன — மானுடர் என்பன எழுவகைத் தோற்றமுமாகிய எண்பத்துநான் கிலக்கம் யோனிபேதத்தும் பிறந்திறந்திளைத்து, புண்ணிய மிகுதியால் மானுடப்பிறவி வாய்த்தமையால் 'எண்ணரிய பிறவிதனின் மானுடப்பிறவிதா னியாதினும் மரிதரிது காண்' என்றும், இப்பிறவியொழியின் இன்னபிறவி வருமென்று தெரியக் கூடாமையால், 'இப்புறவி தப்பினா லெப்பிறவி வாய்க்குமோ வேது வருமோ வறிகிலேன்' என்றும், ஆகையால் இவ்வுடலொடுகூடி யிருக்கையிலேயே இரண்டறக்கலக்கும் சிவானுபூதிச் செல்வம் பொருந்த வருளவேண்டலின் 'கண்ணக னிலத்துநா னுள்ளபொழுதேயருட் ககனவட்டத்தினின்று காலூன்றி மழைபொழியு மானந்த முகிலொடு கலந்துமதி யவசமுறவே பண்ணுவது நன்மை' என்றும், அவ்வனுபூதி கிடைப்பதற்கு முன் இத்தேக நீங்கிவிடின் அது பெறுதற்கரிதாதலின் 'இந்நிலைபதியுமட்டுமே பதியாயிருந்த தேகப் பவுரிகுலையாமலே கவுரிகுண்டலியாயி பண்ணவிதனருளினாலே விண்ணிலவு மதியமுதமொழியாதுபொழியவே வேண்டுவேன் உமதடிமைநான்' என்றும் கூறினார்.

61. பொய்திகழு முலகநடை யென்சொல்கே னென்சொல்கேன்
பொழுது போக்கே தென்னிலோ
பொய்யுட னிமித்தம் புசிப்புக் கலைந்திடல்
புசித்தபின் கண்ணுறங்கல்
கைதவ மலாமலிது செய்தவம தல்லவே
கண்கெட்ட பேர்க்கும்வெளியாய்க்
கண்டதிது விண்டிதைக் கண்டித்து நிற்றலெக்
காலமோ வதையறிகிலேன்
மைதிகழு முகிலினங் குடைநிழற் றிடவட்ட
வரையினொடு செம்பொன்மேரு
மால்வரையின் முதுகூடும் யோகதண்டக்கோல்
வரைந்துசய விருதுகாட்டி
மெய்திகழு மஷ்டாங்க யோகபூ மிக்குள்வளர்
வேந்தரே குணசாந்தரே
வேதாந்த சித்தாந்த சமரசநன் னிலைபெற்ற
வித்தகர் சித்தர்கணமே.

(ப-ரை.) பொய் திகழும் உலக நடை—பொய் மிகுந்து விளங்கும் உலக வொழுக்கத்தைப்பற்றி, என்சொல்கேன் என்சொல்கேன்-என்னென்று சொல்வேன் என்னென்று சொல்லுவேன், (ஆயினும் ஒருசிறிது சொல்லுகின்றேன்) பொழுது போக்கு எது என்னிலோ — (இவ்வுலகத்தார் காலங்கழித்தல் எப்படி யென்றாலோ, பொய் உடல் நிமித்தம் புசிப்புக்கு அலைந்திடல் - பொய்யுடம் பினைப் (பாதுகாத்தற்) பொருட்டு உணவுதேடுதற் காகத்திரிதல் புசித்தபின் கண்ணுறங்கல் - உண்டபின் தூங்குதல், (ஆகிய இவைகளாலேயே) இது கைதவமலாமல் - இது பொய்யொழுக்கமன்றி செய்தவம் அல்லவே —.செய்தற்குரித்தாய (உயிர்க்குறுதி கொடுப்பதாகிய) தவமல்லவே, கண்கெட்ட பேர்க்கும் — குருடருக்கும், வெளியாய்க் கண்டது இது -"வெளிப்படையாய்த் தெரியப்பட்டது இவ்வொழுக்கம், இதை கண்டித்து விண்டு நிற்றல் எக்காலமோ இக் - குருட்டொழுக்கத்தைக் கண்டித்து விட்டு நிற்பது எந்தக்காலமோ, அதை அறிகிலேன் - அதனையுணரு மாற்றலில்லேன், மை திகழும் முகிலினம் குடைநிழற்றிட - கருமை விளங்குகின்ற மேகக்கூட்டம் குடைபோல நிழல்செய்ய, அட்டவரையினொடு - அஷ்டகுலா சலங்களோடு, செம்பொன்மேரு மால்வரையின் முதுகூடும் - செம்பொன்மலையாகிய பெரிய மேருவின் புறத்தும், யோகதண்டக்கோல் வரைந்து—யோகதண்டமாகிய கோலை யெழுதி, ஜயவிருது காட்டி-வெற்றிவிருதாகக்காட்டி-மெய்திகழும்-உண்மை விளங்குகின்ற, அஷ்டாங்க யோகபூமிக்குள்வளர் - அஷ்டாங்கங்களையுடைய யோக நிலத்தில் விருத்தியடையாநின்ற, வேந்தரே-அரசரே, குணசாந்தரே-சாந்தகுணசீலரே, வேதாந்த—எ - று.

என்சொல்கேன் என்சொல்கேன்என்ற அடுக்கு இரக்கப்பொருளது,அவ்விடங்களிலெல்லாம் யோகம்பயின்றன ரென்பதையுணர்த்தி, அஷடகுலகிரிகள் மீதும் மேருவின் மீதும் யோகதண்டக்கோல் வரைந்து ஜயவிருதுகாட்டி என்றார்.

அட்டாங்கயோகங்களையே பூமியாகவுருவகஞ்செய்ததற்கேற்ப இவர்களை அவ்வரசாண்டுவரும் வேந்தரென்றும், அரசன் வெண்கொற்றக் குடை நிழலினிருக்கவேண்டு மாகலானும், 'மைதிகழு முகிலினம் குடைநிழற்றிட, என்றும், அவன் ஆணையை மேருவிற்பொறித்துவிருதுமேற்கொண்டிருக்குமாகலின் அட்டவரையினொடு செம்பொன்மேரு மால்வரையின் முதுகூடும், யோகதண்டக்கோல்வரைந்து சயவிருது காட்டி' என்றும், கூறினர். (ரு)

62. கெசதுரக முதலான சதுரங்க மனமாகி
கேள்வியி னிசைந்துநிற்பக்
கொடிகொண்ட தலமாறு மும்மண்ட லத்திலுங்
கிள்ளாக்குச் சொல்லமிக்க
தெசவிதம தாய்நின்ற நாதங்க ளோலிடச்
சிங்காச னாதிபர்களாய்த்

திக்குத் திகந்தமும் பூரண மதிக்குடை
　திகழ்ந்திட வசந்தகாலம்
இசையமலர் மீதுறை மணம்போல வானந்த
　மிதயமேற் கொள்ளும் வண்ணம்
என்றைக்கு மழியாத சிவராச யோகரா
　யிந்த்ராதி தேவர்களெலாம்
விஜயஜய ஜயவென்ன வாசிசொல வேகொலு
　விருக்குநும் பெருமையெளிதோ
வேதாந்த சித்தாந்த சமரசநன் னிலைபெற்ற
　வித்தகச் சித்தர்கணமே.

(ப-ரை.) கெசதுரக முதலான—யானை குதிரை முதலான, சதுரங்கம்—சதுரங்கங்களாக, மனமாதி – மன முதலிய அந்தக்கரண நான்கும், கேள்வியின் இசைந்து நிற்ப – (வேண்டிய) பணிவிடைக்கு இணங்கி நிற்கவும், கெடிகொண்டதல மாறும்—ஊரின் றன்மையமைந்த ஆறு ஆதாரங்களினும், மும்மண்டலத்தினும்—மூன்று மண்டலங்களினும், கிள்ளாக்கு செல்ல-கிள்ளாக்குச் செல்லவும், மிக்க தெசவிதமதாய்நின்ற நாதங்கள் ஓலிடமேலாகிய பத்துவகைப்பட்டு நின்றநாதங்கள் முழங்கிநிற்கவும், சிங்காசனாதிபர்களாய்— சிங்காசனாதிபதிகளாய், திக்கு திகந்தமும்-திக்குகளிலும் திக்குகளின்முடிவுவரையிலும் பூரணமதிக்குடை திகழ்ந்திட-பூர்ணசந்திரன் போன்ற குடையானது பிரகாசிக்கவும், வசந்தகாலம் இசைய—வசந்தகாலம்வர, மலர்மீது உறைமணம்போல—பூவிலிருக்கிற வாசனைபோல, ஆநந்தம் இதயமேற்கொள்ளும் வண்ணம்-இன்பமானது இதயத்தில் குடிகொள்ளும் விதம், என்றைக்கும் அழியாத - எப்போதுங்கெடாத, சிவராஜயோகராய் - சிவராஜயோகத்தையுடையராகி, இந்திராதி தேவர்களெலாம்-இந்திரன்முதலான தேவர்கள்யாவரும், விஜயஜயஜயஎன்ன ஆசி சொல்ல- விஜயஜயஜய வென்று மங்கலாசாசனஞ் செய்யவும், கொலு இருக்கும்-கொலுவீற்றிருக்கிற, நும்பெருமை எளிதோ-உமது பெருமையானது (சொல்லுதற்கு) எளிதாகுமோ, வேதாந்த—எ - று.

அரசச்செல்வத்திற் பிறந்தவனுக்கு யானை முதலிய சதுரங்கங்களும்பணிகேட்டல், சுவர்க்கமுதலிய மூன்றுலகங்களினும் கிள்ளாக்குச் செல்லுதல், பேரி சின்னம் தாரை முதலான பத்து வாத்தியங்களும் முழங்குதல், சிங்காசநாதிபர்களாதல், திசையின் முடிவுவரையில் தன் பூர்ணசந்திரன் போன்ற வெண்கொற்றக் குடைநிழற்றல், ஆநந்தம் நிறைந்த மனதையுடையராதல், இந்த்ராதியர் ஆசிகூறல் ஆகிய இவைகள் அமைந்திருத்தல்போல, நீங்களும் சிவராஜயோகிகளாதலால் மனமாதிகள் சதுரங்கங்களாகவும்,ஆறாதாரங்களும் மும்மண்டலங்களும் கிள்ளாக்குச்செல்லும் இடங்களாகவும், சிரத்திற்றோன்றும் தசவிதநாதங்கள் வாத்யங்கள் ஆகவும், மதிமண்டலமே வெண்கொற்றக் குடையாகவும் கொண்டு, ஆனந்த நிறைந்த ஹ்ருதயராய், என்றைக்கும் அழியாது

இந்த்ராதி தேவர்களெலாம் விசயசயவென்ன ஆசிசொல்ல, கொலு இருக்கின்றீர்கள் என்றாரயிற்று. மனமாதிகள் மனம், புத்தி, சித்தம், அகங்காரம் என்பன, மும்மண்டலங்கள் — சந்திரமண்டலம், சூர்யமண்டலம், அக்நிமண்டலம் என்பன. தசவிதநாதங்கள் சிணிநாதம், சிணிசிணீநாதம், கண்டாநாதம், சங்கநாதம், வீணாநாதம், தாளநாதம், முரளீநாதம், பேரீநாதம், மிருதங்கநாதம், மேகநாதம் என்பனவாம். பூரணமதி — நிறைந்த அறிவு என்னலுமாம், கெடிகொண்ட தலம் என்பது ராஜபாரமாம் போது அவர்க்குக் காவலாயுள்ள படைகுடி கூழ் அமைச்சு நட்பரணுறையு மென்று கொள்க. கிள்ளாக்கு—சிற்றிலே. அதாவது, பூர்வகாலத்தில் கல்விகற்கும் இளஞ்சிறார் தம்வீடுகளில் இரவிற்படித்ததற் கறிகுறியாக அவர்களுடைய தாய்தந்தையர் எழுதிக்கொடுத்த சிறுசீட்டு. இது நறுக்கெனவும் வழங்கும். (சு)

63. ஆணிலே பெண்ணிலே யென்போல வொருபேதை
யகிலத்தின் மிசையுள்ளதோ
ஆடிய கறங்குபோ லோடியுழல் சிந்தையை
யடக்கியொரு கணமேனும்யான்
காணிலேன் றிருவருளை யல்லாது மௌனியாய்க்
கண்மூடி யோடுமூச்சைக்
கட்டிக் கலாமதியை முட்டவே மூலவெங்
கனலினை யெழுப்பநினைவும்
பூணிலே னிற்றைநாட் கற்றதுங் கேட்டதும்
போக்கிலே போகவிட்டுப்
பொய்யுலக னாயினே னாயினுங் கடையான
புன்மையே னின்னமின்னம்
வீணிலே யலையாமன் மலையிலக்காகநீர்
வெளிப்படத் தோற்றல்வேண்டும்
வேதாந்த சித்தாந்த சமரசநன் னிலைபெற்ற
வித்தகச் சித்தர்கணமே.

(ப-ரை) ஆணிலே பெண்ணிலே—ஆண் பெண் ஆகிய இருபகுப்பனுள், என்போல ஒருபேதை—என்னைப்போல ஒரு அறிவற்றவன், அகிலத்தின் மிசை உள்ளதோ—பூமியிலுண்டோ, ஆடியகறங்குபோல்—சுழலாநின்ற காற்றாடிபோல், ஓடி உழல் சிந்தையை — (விஷயங்களின்மேல்) விரைந்துபோய் வீழ்ந்து (அவற்றின் கண்ணே) சுழலாநின்ற மனத்தை, அடக்கி — (அவ்வாறு செல்லாது) தடுத்து, திருவருளை ஒருகணமேனும் யான்காணிலேன் - திருவருளை ஒருக்ஷணப் பொழுதாயினும் யான்கண்டிலேன், அல்லாது - அன்றி, மௌனியாய் — மௌந நிலையை யுடையேனாகி, கண்மூடி — கண்ணிதழ்களைக் குவித்து, ஓடும் மூச்சைகட்டி — ஓடும் இயற்கையுள்ள ப்ராணவாயுவை நிறுத்தி,

கலாமதியை முட்ட - சோடசகலைகள் நிறைந்த சந்திரனைத் தொடும்படி, மூலவெம்கனல் வினை எழுப்ப - மூலாக்கினியை எழுப்புதற்குரிய, நினைவும் பூணிலேன் - கருத்துங் கொண்டேனிலன், இற்றைநாள் - இத்தனை நாள்வரையில், கற்றதும் கேட்டதும்-நான் கற்றகல்வியையும் கேட்ட கேள்வியையும், போக்கிலே போகவிட்டு - அவை இச்சைவழியிற் செல்லவிட்டு, பொய் உலகன் ஆயினேன்-பொய்யுலகவாழ்க்கையன் ஆயினேன், நாயினும் கடையான புன்மையேன் - நாயினும் அற்பத்தன்மையை யுடையவனுகியநான், இன்னம் இன்னம் - மேன்மேலும், வீணிலே அலையாமல் - வீண்காரியங்களிற் பிரவேசித்துத் திரியாமல், மலை இலக்கு ஆக - மலைக்குறிபோல, நீர் - நீங்கள், வெளிப்பட தோற்றல் வேண்டும் - பகிரங்கமாகத் தரிசனங் கொடுத்தருள வேண்டும், வேதாந்த,—எ - று.

கறங்குதல் - சுழலல், காற்றூடி சுழலுந் தன்மையதாகலின் அப்பெயர் பெற்றது. போக்கிலே போகவிட்டு என்றது மறந்தென்றபடி, உலகத்திலுள்ள ஆண்பெண் என்னும் இருபகுப்பினுள் என்போல ஒரு மூடப்பிறவியுண்டோ, சுழலாநின்ற காற்றூடி போல அலைகின்ற மனத்தை யடக்கித் திருவருளை ஒருக்ஷணகாலமாயினும் கண்டிலேன், அன்றியும் மௌநியாகிக் கண்மூடி அலையாமல் சந்திரமண்டலத்தை முட்ட, மூலாக்நியை யெழுப்புங் கருத்துமில்லேன், இதுகாறுங் கற்றகல்வியையும் கேட்ட கேள்வியையும் மறந்து பொய்யாகிய உலகவாழ்வை யுடையேனுயினேன். நாயினுங் கடையேனுகிய நான் மேலுமேலும் பயனற்றகாரியங்களில் பிரவேசியாமல் மலையிலக்குப்போல நீயெனக்குப் பிரத்தியக்ஷமாக வேண்டும் என்பதாம்.

சிந்தையை நிறுத்தினு லன்றித் திருவருள் கிட்டாதாகலின் ஆடிய கறங்குபோ லோடியுழல் சிந்தையை யடக்கியொரு கணமேனும் யான் காணிலேன் றிருவருளை, என்றூர். கற்றதும் கேட்டதும் ஆசிரியர் இன்பநிட்டையுருதவிடத்துப் பயனின்மையாய்ப் போதலின், கற்றதுங் கேட்டதும் போக்கிலே போகவிட்டு, என்றதென்க. இதனைக் கற்றதுங் கேட்டதுந்தானே யேதுக்காகக் கடபடமென் றுருட்டுதற்கோ, என் றிவ்வாசிரியர் கூறலானுமறிக.

(எ)

64. கன்னலமு தெனவுமுக் கனியெனவும் வாயூறு
கண்டெனவு மடியெடுத்துக்
கடவுளர் கடந்தகல வழுதழுதூ பேய்போற்
கருத்திலெழு கின்றதெல்லாம்
என்னதறி யாமையறி வென்னுமிரு பகுதியா
லீட்டுதமி ழென்றமிழினுக்
கின்னல்பக ராதுலக மாராமை மேலிட்
டிருத்தலா லித்தமிழையே

சொன்னவனி யாவனவன் முத்திசித் திகளெலாந்
 தோய்ந்தநெறி யேபடித்தீர்
சொல்லுமென வவர்நீங்கள் சொன்னவவை யிற்சிறிது
 தோய்ந்தகுண சாந்தனெனவே
மின்னல்பெற வேசொல்ல வச்சொல்கேட் டடிமைமனம்
 விகசிப்ப தெந்தநாளோ
வேதாந்த·சித்தாந்த சமரசநன் னிலைபெற்ற
 வித்தகச் சித்தர்கணமே.

(ப - ரை.) கன்னல் அமுது எனவும் - கருப்பஞ்சாற்றின் சுவை என்று சொல்லவும், முக்கனியெனவும் — முக்கனிகளின் சுவை என்று சொல்லவும், வாய் ஊறு கண்டு எனவும் - நா ஊறு தற்குக் காரணமான கற்கண்டு என்று சொல்லவும், அடி - (சுவையுள்ள) அடியானது, கடவுளர்கள் எடுத்துத் தந்தது அல்ல-கடவுளரால் எடுத்துக் கொடுக்கப்பட்டதல்ல, பேய்போல் அழுது அழுது — பேய்போல மிகவும் அழுது, கருத்தில் எழுகின்றது எல்லாம் - என்மனத்தில் உண்டாவதாகிய யாவும், என்னது அறியாமை அறிவு என்னும் - எனது உணர்வின்மை உணர்வு என்கிற, இருபகுதியால் - இருபகுப்புகளால், ஈட்டு தமிழ் - சொல்லிய தமிழ்மாலையாகும், என்தமிழினுக்கு - (அப்படி) என்னாற் சொல்லப்பட்ட தமிழ்மாலைக்கு, ஆராமைமேலிட்டிருத்தலால்_ பேரன்பு அதிகப்பட்டிருத்தலால், உலகம் இன்னல்பகராது-உலகமானது குற்றங் கூறாது (அதுநிற்க), முத்திசித்திகளெலாம் தோய்ந்த-முத்திசித்திகளெல்லாம் பொருந்திய, நெறியே - மார்க்கத்தையே, படித்தீர்-படித்தவர்களே, இத்தமிழையே-இந்தத் தமிழ்மாலையே, சொன்னவன் அவன்யாவன்-சொல்லினவனாகிய அவன் எவனென்று, அவர்—அவ்வுலகத்தார், சொல்லும் என—சொல்லுங்களென்று வினவ, நீங்கள் சொன்ன அவையில்—நீங்கள் (அவர்வினவுக்கு விடையாகக்) கூறிய அவ்வார்த்தைகளினல், சிறிதுதோய்ந்த குணசாந்தன் என சாந்தகுணம் சிறிது அமைந்தவன் என்று, மின்னல்பெற சொல்ல - பிரகாசம் உண்டாகப்புகழ, அடிமை-அடியேன், அச்சொல்கேட்டு—அந்த வார்த்தையைக் கேட்டு, மனம் விகசிப்பது - மனமகிழ்ச்சியடைவது, எந்த நாளோ — எந்தக் காலமோ, வேதாந்த,—எ — று.

கடவுளர்கள் அடியெடுத்துத் தந்தன. "உலகெலா முணர்ந் தோதற்கரியவன்" "திகடசக்கரச் செம்முகமைந்துளான்" என இறைவனு லடியெடுத்துக் கொடுக்கப்பட்ட பெரியபுராணம் கந்தபுராணமுதலாயின. சித்தர்களே என் தமிழ்ப்பாடலின் வரலாற்றை உலகத்தார் உங்களை வினவ, நீங்கள் சொல்லக் கேட்டு உலகத்தார் என்னைப்புகழ, அச்சொல்லை அடியேன் கேட்டு மனமகிழ்வது எந்தக்காலமோ என்பதாம்.

உலகம்—உலகிலுள்ளாரை யுணர்த்தியதால் இடவாகுபெயர். உலகமென்பது உயர்ந்தோர்மாட்டு, என்பதனுனறிக. மின்னல் என்பது இச்செய்யுளில் புகழ் எனப் பொருள் படும். (அ)

65. பொற்பினெடு கைகாலில் வள்ளுகிர் படைத்தலாற்
போந்திடை யொடுக்கமுறலால்
பொலிவான வெண்ணீறு பூசியே யருள்கொண்டு
பூரித்த வெண்ணீர்மையால்
எற்பட விளங்குகக னத்தி லிமையாவிழி
யிசைந்துமே னேக்கமுறலால்
இரவுபக லிருளான கனதந்தி படநூறி
யிதயங் களித்திடுதலால்
பற்பல விதங்கொண்ட புலிகலேயி னுரியது
படைத்துப்ர தாபமுறலால்
பனிவெயில்கள் புகுதாம னெடியவான் றெடர்நெடிய
பருமர வனங்களாரும்
வெற்பினிடை யுறைதலாற் றவராஜ சிங்கமென
மிக்கோ ருமைப்புகழ்வர்காண்
வேதாந்த சித்தாந்த சமரசநன் னிலைபெற்ற
வித்தகச் சித்தர்கணமே.

(ப-ரை.) பொற்பினெடு - அழகாக, கைகாலில் - கைகால்களில், வள் உகிர்படைத்தலால் - கூர்மையாகிய நகங்களைப் படைத்தலாலும், இடைபோந்து ஒடுக்கம் உறலால் — இடையானது சுருங்கிவந்து இருத்தலாலும், பொலிவு ஆன வெண்ணீறு பூசி—பிரகாச முள்ள திருவெண்ணீற்றைத் தரித்து அருள்கொண்டு பூரித்த - திருவருள் பெற்று இறுமாந்த, எண் நீர்மையாய் - மதிக்கத்தக்க குணத்திலும், எல்பட விளங்குககனத்தில் - பிரகாசம் உண்டாக விளங்குகின்ற சிதாகாயத்தில், இமையாவிழி இசைந்து—இமையாத கண்கள் பொருந்தி, மேல்நோக்கம் உறலால் - ஊர்தவபார்வையைப் பொருந்துதலாலும், இரவுபகல் - இரவினும் பகலினும், இருள் ஆன — அஞ்ஞான இருளாகிய, கனதந்திபட நூறி - பெரிய யானையானது இறக்கும்படி அரைத்து, இதயம் களித்திடுதலால் - மனம் செருக்கடைந் திருத்தலானும், பற்பலவிதம்கொண்ட - எண்ணிறந்த விதமான, புலி கலையின் உரிபடைத்து-புலித்தோலையும் மான்தோலையும் (ஆசனங்களாகப்) படைத்து, ப்ரதாபம் உறலால் - மனோபலவைபவத்தைப் பெற்றிருத்தலாலும், பனிவெயில்கள் புகுதாமல் - பனிவெயில் முதலியவைகள் அடையப்பெறாமல், நெடியவான்தொடர் - விசாலமான ஆகாயத்தை அளாவிய, நெடிய - உயரமான, பருமரவனங்கள் ஆரும் — பருத்த மர

ங்கள் அடரப்பெற்றகாடுசெறிந்த, வெற்பின் இடை உறைதலால்—மலையினிடத்துவாழ்தலாலும், தவராச சிங்கம்என - தவராசசிங்கம் என்று, மிக்கோர்—மேலோர்கள், உம்மைபுகழ்வர்-உம்மைக் கொண்டாடுவார்கள், வேதாந்த.

இதில் சிங்கத்துக்கும் தவசிகட்கும் செம்மொழிச்சிலேடை கூறப்பட்டிருத்தலால், மேல்தவசிகட்குக் கூறியகுணங்கள்யாவும் சிங்கத்துக்கும் பொருந்தக்கூறிக்கொள்க. அவைஆகாயத்திற் பொருந்தும்படியான மேற்பார்வையையுடையதாதலும், இரவும்பகலும் இருள்நிறமுள்ள மேகம்போன்றயானை யிறக்கும்படி அதனைக்கொல்லுதலும், அதனையழித்த வெற்றியால் மனங்களித்தலும்ஆகிய இக்குணங்கள் சிங்கத்துக்கு வேறாகவும், கைகாலில் வள்ளுகிர் படைத்தல் முதலிய ஏனையகுணங்கள் சித்தர்கட்கும் சிங்கத்துக்கும் சமமாகவு முள்ளன.

66. கல்லார்த பேர்களே நல்லவர்க ணல்லவர்கள்
கற்றுமறி வில்லாதவென்
கர்மத்தையென்சொல்கேன் மதியையென்சொல்லுகேன்
கைவல்ய ஞானநீதி
நல்லோ ருரைக்கிலோ கர்மமுக்கியமென்று
நாட்டுவேன் கர்மமுமொருவன்
நாட்டினு லோப்பழய ஞானமுக் கியமென்று
நவிலுவேன் வடமொழியிலே
வல்லா னொருத்தன்வர வுந்த்ரா விடத்திலே
வந்ததா விவகரிப்பேன்
வல்லதமி ழறிஞர்வரி னங்ஙனே வடமொழியின்
வசனங்கள் சிறிதுபுகல்வேன்
வெல்லாம லெவரையு மருட்டிவிட வகைவந்த
வித்தையென் முத்திதருமோ
வேதாந்த சித்தாந்த சமரச நன்னிலைபெற்ற
வித்தகச் சித்தர்கணமே.

ரை. கல்லாதபேர்களே நல்லவர்கள் நல்லவர்கள் - நூல்களைக் கல்லாதவர்களே நல்லவர்கள் நல்லவர்கள், கற்றும்-நூல்களைக் கற்றும், அறிவுஇல்லாத—விவேகமில்லாத, என்கர்மத்தை என்சொல்கேன்-என் கன்மபலத்தை என்னென்று சொல்லுவேன், கைவல்யஞானநீதி-கைவல்யபதவியைக் கொடுக்கத்தக்க ஞானநீதியை, நல்லோர்உரைக்கில் - மேலோர்கள்சொன்னால், கர்மம்முக்கியம் என்றுநாட்டுவேன் - கர்மமேமுதன்மையானதென்று (கல்விவலியால்) நிலைநிறுத்துவேன், ஒருவன் கர்மம்நாட்டினல்—ஒருவன்கர்மத்தை நிலைநிறுத்தினல், பழையஞானம்முக்கியம் என்றுநவிலுவேன்-முன்சொல்லிய ஞானமார்க்கமே-

முதன்மையானதென்று நிலைநிறுத்துவேன், வடமொழியிலே வல்லான் ஒருத்தன்வரவும்-வடமொழியில் வல்லனாகிய வொருபண்டிதன்வரினும், த்ராவிடத்திலே வந்ததாவிவகரிப்பேன் - தமிழ்ப்பாஷையில் கைவந்தவன்போல விவகரித்துப்பேசுவேன், வல்லதமிழ் அறிஞர்வரின் - தமிழ்வல்லவராகிய கவிஞர்வந்தால், அங்ஙனே- (வடநூல்வல்லானுக்கு தமிழ்வசனங்கள்சொன்ன) அதுபோலவடமொழியின் வசனங்கள் சிறிதுபுகல்வேன் - வடமொழீவாக்கியங்கள் சிலவற்றை யெடுத்துப்பேசுவேன், வெல்லாமல் - (நியாயவாயிலால்) வெல்லாமல், எவரையும் மருட்டிவிட வகைவந்த–யாவரையும் மருளும்படிசெய்யவகையேற்பட்டதற்கு காரணமான, வித்தை - வித்தையானது, என்–என்னபயன்தரும், முத்திதருமோ-மோக்ஷத்தைக்கொடுக்குமோ, வேதாந்த. எ-று.

கற்றும் அறிவில்லாத என்றமையால் கல்வி அறிவை கொடுக்குமென்றதாயிற்று. சிறிது–சில.

கற்றும் கற்றதற்குப் பயனடையாமல் ஞானநீதிஉயர்ந்ததென்பவர்களைக் கர்மம் உயர்ந்ததென்று மருட்டலும், கர்மம்உயர்ந்ததென்பவர்களை ஞானம்உயர்ந்ததென்று மருட்டலும், தமிழ் வல்லார்வரின், அவர்களை வடமொழியால்மருட்டலும், வடமொழி வல்லார்வரின், அவர்களைத் தமிழ்மொழியால் மருட்டலும்ஆகிய இச்செய்கைகளை மேற்கொண்டொழுகுதலாகிய இவ்வித்தை முத்தியைக் கொடுக்குமோ கொடாது. ஆகலின் கல்லாதபேர்களே நல்லவர்கள் எனக்கூறினர்.

### ஆனந்தமானபரம்.

67\. கொல்லாமை யெத்தனை குணக்கேட்டை நீக்குமக்
குணமொன்று மொன்றிலேன்பால்
கோரமெத் தனைபட்ச பாதமெத் தனைவன்
குணங்களெத் தனைகொடியபாழ்ங்
கல்லாமை யெத்தனை யகந்தையெத் தனைமனக்
கள்ளமெத் தனையுள்ளசற்
காரியஞ் சொல்லிடினு மறியாமை யெத்தனை
கதிக்கென் றமைத்தவருளில்
செல்லாமை யெத்தனை வீர்தாகோஷ்டி யென்னிலோ
செல்வதெத் தனைமுயற்சி
சிந்தையெத் தனைசலன மிந்திரஜாலம்போன்ற
தேகத்தில் வாஞ்சைமுதலா
அல்லாமை யெத்தனை யமைத்தனை யுனக்கடிமை
யானே னிவைக்குமாளோ
அண்டபகிரண்டமு மடங்கவொரு நிறைவாகி
யானந்த மானபரமே.

ப-ரை. கொல்லாமை - கொலைசெய்யாமையாகிய குணம், எத்தனைகுணக்கேட்டை நீக்கும்-எத்தனை துர்க்குணங்களை யொழிக்கும் அக்குணம் ஒன்றும்ஒன்றிலேன்பால் - அங்குணம்சிறிதும் பொருந்தாதவனுகிய என்னிடத்தில், கோரம்எத்தனை-கோரமான நடக்கைகளெத்தனை, பக்ஷபாதம் எத்தனை-பக்ஷபாதங்கள்எத்தனை, வன்குணங்கள்எத்தனை, வலியகுணங்கள் எத்தனை, கொடியபாழ்கல்லாமைஎத்தனை - கொடியனவும் பாழ்படுதற்குக் காரணமாவனவுமாகியகல்லாமைக் குணங்கள் எத்தனை, அகந்தைஎத்தனை-அகங்காரகுணங்கள் எத்தனை, மனக்கள்ளம் எத்தனை, மனக்குற்றங்கள் எத்தனை, உள்ள சற்காரியம்சொல்லிடினும் அறியாமை எத்தனை - உளதாகிய சற்காரியத்தைச் சொன்னலும் அதையறிந்து கொள்ளாமையாகிய துர்குணங்கள்எத்தனை, கதிக்கென்றமைத்த அருளில் செல்லாமை எத்தனை - மோக்ஷத்துக்கென் றமைக்கப்பட்ட அருட்குணங்களில் பிரவேசியாமையாகிய குணங்கள் எத்தனை, வ்ருதாகோஷ்டிஎன்னில்செல்வது எத்தனை, பயனற்றகூட்டமென்றால் அதில்பிரவேசித்தற்குக்காரணமாகிய கரணங்கள்எத்தனை, முயற்சி சிந்தைஎத்தனை,(பயனில்லாத) முயற்சியிற்செல்லுஞ் சிந்தைகள்எத்தனை, சலனம் இந்திரஜாலம்போன்ற தேகத்தில்-கெடும் இயற்கையில் இந்ராஜாலத்தை யொத்தசரீரத்தில், வாஞ்சைமுதலாஅல்லாமை எத்தனை, அமைத்தனை-விருப்பம் முதலியனவாகத் தகாமையாகிய குணங்கள் எத்தனை (ஆகிய இவ்விபரீதங்களை) அமைவித்தாய், உனக்கு அடிமைஆனேன்—தேவரீருக் கடிமையானேன், இவைக்கும் ஆளோ-(கோரம் முதலிய மேற்கூறிய) இத்தீகுணங்களுக்கும் நானுளாகவோ, அண்டபகிரண்டமும் - இவ்வண்டங்களும் இவற்றின் புறத்திலுள்ள பகிரண்டங்களும், அடங்க—தன்னுள்ளடங்கும்படி, ஒருநிறைவுஆகி, ஒருபரிபூரணமாகி, ஆநந்தம்ஆனபரமே-சுகவடிவமான பரம்பொருளே. எ-று.

கோரம்-கொடுமை. பக்ஷபாதம்-ஒருசார்புடமை. கொல்லாமை ஒன்றுமட்டுமிருக்குமாகின் அக்குணம் அனேகந் தீமைகளை யொழித்து நன்மைகளைத் தருமென்பது கருத்து.

68. தெருளாகி மருளாகி யுழலுமனமாய்மனஞ்
சேர்ந்துவளர் சித்தாகியச்
சித்தெலாஞ் சூழ்ந்தசிவ சித்தாய் விசித்ரமாய்த்
திரமாகி நானுவிதப்
பொருளாகி யப்பொருளை யறிபொறியு மாகியைம்
புலனுமா யைம்பூதமாய்ப்
புறமுமா யகமுமாய்த் தூரஞ் சமீபமாய்ப்
போக்கொடு வரத்துமாகி
இருளாகியொளியாகி நன்மைதீ மையுமாகி
யின்றாகி நாளையாகி

என்றுமா யொன்றுமாய்ப் பலவுமா யாவுமா
யிவையல்ல வாயநின்னை
அருளாகி நின்றவர்க ளறிவதல்லாலொருவ
ரறிவதற் கெளிதாகுமோ
அண்டபகி ரண்டமு மடங்கவொரு நிறைவாகி
யானந்தமானபரமே.

ப-ரை. தெருள்ஆகி—தெளிவாகி, மருள் ஆகி—மயக்கமாகி, உழலும்மனம் ஆய்- அலைகின்றமனதாகி, மனம்சேர்ந்து வளர்சித்துஆகி- மனமானது சேர்ந்து வளர்தற்கிடமாகிய அறிவாகி, அச்சித்தெல்லாஞ் சூழ்ந்த சிவசித்தாய்—அந்தச்சித்தெல்லாஞ் சூழப்பெற்ற சிவஞானமாகி, விசித்திரமாய்—ஆச்சரியகரமாகி, திரமாகி—உறுதியாகி, நானுவிதப்பொருள்ஆகி—பலவகை வஸ்துக்களாகி, அப்பொருள்களை யறிகின்ற ஐம்பொறிகளுமாகி, ஐம்புலனும்ஆய் - (அவற்றிற்குவிடயங்களாகிய) ஐம்புலன்களுமாகி, ஐம்பூதம்ஆய்— பஞ்சபூதங்களாகி, புறமும்ஆய்-வெளியுமாகி, அகமும்ஆய்-உள்ளுமாகி, தூரம்சமீபம் ஆய்—தூரமுஞ் சமீபமுமாகி, போக்கொடுவரத்தும்ஆகி - செலவொடுவரவுமாகி, இருள் ஆகி—அந்தகாரமாகி, ஒளிஆகி—பிரகாசமாகி, நன்மைதீமைகளுமாகி - நன்மைதீமைகளுமாகி, இன்ருகி- இன்ருகி, நாளை ஆகி—நாளையாகி, என்றும்ஆய் - என்றுமாகி, ஒன்றும்ஆய்-ஒன்றுமாகி: பலவும்ஆய்-அனந்தமாகி, யாவும்ஆய் - எல்லாமாகி, இவை அல்லஆயநின்னை - இவைகளல்லாதனவுமாகிய உன்னை, அருளாகி நின்றவர்கள்-உன்திருவருளுக் கிலக்காகிநின்றஞானிகள், அறிவதுஅல்லால் - அறிவதேயன்றி, ஒருவர்வேறொருவர், அறிவதற்கு - உணர்வதற்கு, எளிதுஆகுமோ-இலோசாகக்கைகூடுமோ, அண்டபகி. எ-று.

சிவசித்து - சிவஞானம். ஒகாரம்எதிர்மறை. தெருள்மருள் முதலியனவாகியும், அவையல்லனவாகியும்விளங்கும்உன்னை, உன்திருவருள்பெற்ற மேலோரன்றி மற்றையர் அறிதல்கூடுமோ என்பதாம். இதனை,

"மைப்பொலியங் கண்ணுளுந்தானுங் கச்சிமயானத்தான் வார்சடையான் மாசொன்றில்லான், ஒப்புடையனல்ல னொருவனல்ல னோரூரனல்லனுவமையில்லி, யப்படியுமவ்வுருவு மவ்வண்ணமு மவனருளே கண்ணுகக் காணினல்லால், இப்படியனிவ்வுருவ னிவ்வண்ணத்தனிவ னிறைவனென்! றெழுதிக்காட்டொணதே" என்னுந் திருநாவுக்கரசு சுவாமிகள் திருவாக்காலும், "அவனருளாலே யவன்றுள்வணங்கி" என்னுந்திருவாசகத்தானுமறிக. (உ)

69. மாறுபடு தர்க்கந் தொடுக்கவறி வார்சாண்
வயிற்றின் பொருட்டதாக
மண்டலமும் விண்டலமு மொன்ருகி மனதுழல
மாலாகி நிற்கவறிவார்
வேறுபடு வேடங்கள் கொள்ளவறிவாரொன்றை
மெணமெணென் றகம்வேறதாம்

வித்தையறி வாரெமைப் போலவே சந்தைபோன்
மெய்ந்நூல் விரிக்கவறிவார்
சீறுபுலி போற்சீறி மூச்சைப் பிடித்துவிழி
செக்கச் சிவக்கவறிவார்
திரமென்று தந்தம் மதத்தையே தாமதச்
செய்கைகொடு மூளறவறிவார்
ஆறுசம யங்கடொறும் வேறுவே ருகிவிளை
யாடுமுனை யாவரறிவார்
அண்டபகி ரண்டமு மடங்கவொரு நிறைவாகி
யானந்த மான பரமே.

ப—ரை. மாறுபடு தர்க்கம் தொடுக்கஅறிவார் - மாறுபடுதற்குரிய தர்க்கஞ் செய்ய அறிவார்கள், சாண்வயிற்றின் பொருட்டதாக - சாண்வயிற்றின்காரணமாக, மண்தலமும் விண்தலமும் ஒன்றுஆகி மனதுஉழல - மண்ணுலகமும் விண்ணுலகமும் ஒன்ருகப்பாவித்து மனஞ்சுழலாநிற்க, மால்ஆகி நிற்கஅறிவார்- மயக்கமுற்றுநிற்கஅறிவார்கள், வேறுபடுவேடங்கள் கொள்ளஅறிவார் - வெவ்வேறுவகைப்பட்ட வேஷங்கள்தரிக்க அறிவார்கள், ஒன்றை மெண மெணஎன்று-ஒருமந்திரத்தை மெணமெணஎன்று (நாவினுல் உச்சரியாநின்றே', அகம்வேறுஆம்—மனம்வேருதற்குரிய, வித்தைஅறிவார்-வித்தையை யறிவார்கள், எம்மைப்போலவே - எங்களைப்போலவே, சந்தைபோல்-சந்தையில் பலபண்டங்களைப் பரப்பி வைப்பதுபோல, மெய்நூல் விரிக்க அறிவார்—உண்மை நூற்பொருள்களைப் பரப்பஅறிவார்கள், சீறுபுலிபோல்சீறி—கோபிக்கின்ற புலியைப்போலக் கோபித்து, மூச்சைப்பிடித்து—சுவாச பந்தனஞ்செய்து, விழிசெக்கச்சிவக்க அறிவார்—கண்கள் மிகவுஞ்சிவக்க அறிவார்கள், தம்தம் மதத்தையே திரமென்று—தங்கள் தங்கள் மதத்தையே மேன்மையென்று, தாமதச்செய்கைகொடும்உளர அறிவார்-தாமசகுணத்தை மேற்கொண்டு உளற அறிவார்கள், ஆறுசமயங்கள்தொறும் - ஆறுசமயங்களிலும், வேறு வேறுஆகி, வெவ்வேறுருக்கொண்டு, விளையாடும் உன்னை-விளையாடாநின்ற வுன்னை, யாவர் அறிவார்அறியவல்லார் எவர் - (ஒருவருமிலர்,) அண்டபகி—எ-று.

மூச்சடக்கல் சீறுதற்கும் விழி சிவத்தற்கும் காரணமாதலால், "சீறுபுலி போற்சீறி மூச்சைப்பிடித்துவிழி செக்கச்சிவக்க அறிவார்,, என்ருர். தர்க்கம் பேசல் முதலியவை செய்ய அறிவார்களேயன்றி, ஆறுசமயங்களிலும் வெவ்வேறு வடிவுகொண்டு விளையாடும் உன்னை யறிபவர்கள் யாவர் என்பது கருத்து.

70. காயிலை யுதிர்ந்தகனி சருகுபுனன் மண்டிய
கடும்பசிதனக்கடைத்தும்
கார்வரையின் மூழையிற் கருங்கல்போ லசையாது
கண்மூடி நெடிதிருந்தும்

தீயினிடை வைகியுந் தோயமதின் மூழ்கியுந்
தேகங்க ளென்பெலும்பாய்த்
தெரியநின் றுஞ்சென்னி மயிர்கள் கூ டாக்குருவி
தெற்றவெயி லூடிருந்தும்
வாயுவை யடக்கியு மனதினையடக்கியு
மௌனத்தி லேயிருந்தும்
மதிமண்ட லத்திலே கனல்செல்ல வமுதுண்டு
வனமூடிருந்து மறிஞர்
ஆயுமறை முடிவான வருணாடி ஞரடிமை
யகிலத்தைநாடன் முறையோ
அண்டபகி ரண்டமுமடங்கவொரு நிறைவாகி
யானந்தமானபரமே.

ப-ரை. உதிர்ந்த காய் இலை கனி சருகு புனல்-உதிர்ந்த காயையும் இலையையும் பழத்தையும் சருகையும் சலத்தையும், மண்டிய கடும்பசி தனக்கு அடைத்தும் - மிகுந்த கடும்பசிக்கு உண்பித்தும், கார்வரையின் மூழையில்-கருமையாகிய மலைக்குகையில் (உள்ள) கருங்கல்போல் அசையாது-கருங்கல்லைப்போலச் சலிக்காமல், நெடிது கண்மூடி இருந்தும்-நெடுங்காலம் கண்மூடியிருந்தும், தீயினிடை வைகியும்-பஞ்சாக்நி மத்தியிற்றங்கியும், தோயமதில் மூழ்கியும் புண்யதீர்த்தங்களில் நீராடியும், தேகங்கள் சரீரங்கள், என்பு-எலும்பு ஆய்த்தெரிய நின்றும்—எலும்பெலும்பாய்த் தெரியத் தவநிலையில் நின்றும், சென்னி மவிர்கள் கூடு ஆ—தலைமயிர்களைக் கூடாகக்கொண்டு, குருவிதெற்ற-குருவிகளலைக்க, வெயிலூடு இருந்தும்-வெயிலினிடத் திருந்தும், வாயுவை அடக்கியும்-(உசுவாச நிசுவாசமாகவுள்ள) வாயுவைத் தடுத்தும், மனதினை அடக்கியும்-மனத்தைத் தடுத்தும், மௌனத்திலே யிருந்தும்-மௌன நிலையிலிருந்தும், கனல் செல்ல மதிமண்டலத்திலே அமுது உண்டு வனத்தில் வசித்தும் மூத்தாபந்தணியும்படி சந்திர மண்டலத்திலுள்ள அமிர்தத்தையுண்டுகாட்டிற்றங்கியும், அறிஞர்-ஞானியர்கள், ஆயும்-ஆராயப்பட்ட, மறைமுடிவான பொருள் நாடினர் - வேதமுடிவாகிய பொருளை விரும்பித் தேடினர்கள், அடிமை-அடிமை யொருவனும், அகிலத்தை நாடன் முறையோ—உலகவாழ்வை இச்சித்தல் முறைமை யாமோ, அண்டபகி,—எ—று.

கிழக்கு, மேற்கு, தெற்கு. வடக்கு என்னும் நான்கு திசையிலும் வளர்க்கப்பட்ட நெருப்புடன் உச்சியில் சூரியகிரணக்கியையுஞ் சேர்த்து, பஞ்சாக்நியென்பர். ஆதியாத்மிகம், ஆதிபௌதிகம், ஆதிதைவிகம் என்பன, மூத்தாபம். இவை முறையே தன்னாலும் பிறவுயிர்களாலும் தெய்வத்தானும் உளவாந்துன்பங்கள். மதிமண்டலத் தமுதுண்டார்க்குப் பிறவியில்லையாதலும், அஃதின்றாகவே பிறவித் துன்பங்களென்று சொல்லப்படுவனவாகிய தாபத்திரயங்களில்லை யாதலும் காண்க.

இச்செய்யுளின் கருத்தை,—பட்டினத்துப்பிள்ளையார்,

" மலர்தலை யுலகத்துப் பலபலபாக்கள்
மக்களை மனைவியை யொக்கலையொரீஇ
மனையும் பிறவுந் துறந்து நினைவருங்
காடு மலையும் புக்குக் கோடையிக்
கைம்மே னிமிர்த்துக் காலொன்று முடக்கி
ஐவகை நெருப்பி னழுவத்து நின்றும்
மாரி நாளிலும் வார்பனி நாளினும்
நீரிடைமூழ்கி நெடிது கிடந்தும்
சடையைப் புனைந்துந் தலையைப் பரித்தும்
உடையைத் துறந்து முண்ணு துழன்றும்
காயுங் கிழங்குங் காற்றுதிர் சருகும்
வாயுவு நீரும் வந்தன வருந்தியும்
களரிலுங் கல்லிலுங் கண்படை கொண்டும்
தளர்வுறு மாக்கை தளர்வத் தாங்கவர்
அம்மை முத்தி யடைதற் பொருட்டு
தம்மைத் தாமே சாலவுமொறுப்பர்—,,என்பதனுணறிக, (ச)

71. சுத்தமு மசுத்தமுந் துக்கசுகபேதமுந்
தொந்தமுடனிர்த்தொந்தமும்
தூலமொடு சூக்குமமு மாசையு நிராசையுஞ்
சொல்லுமொரு சொல்லின் முடிவும்
பெத்தமொடு முத்தியும் பாவமோ டபாவமும்
பேதமோ டபேதநிலையும்
பெருமையொடு சிறுமையு மருமையுடனெளிமையும்
பெண்ணினுட னுமற்றும்
நித்தமு மனித்தமு மஞ்சன நிரஞ்சனமு
நிஷ்களமு நிகழ்சகளமும்
நீதியு மநீதியு மாதியோ டனாதியும்
நிர்விஷய விஷயவடிவும்
அத்தனையு நீயலதெள் ளத்தனையு மில்லையெனின்
யாங்களுனை யன்றியுண்டோ
அண்டபகி ரண்டமு மடங்கவொரு நிறைவாகி
யானந்த மானபரமே.

ப-ரை. சுத்தமும் அசுத்தமும்-சுத்தாசுத்தங்களும், துக்கசுகபேதமும்—துக்கசுக பேதங்களும், தொந்தமுடன் நிர்த்தொந்தமும் - சம்பந்தா சம்பந்தங்களும், தூலமொடு சூக்குமமும் ஸ்தூல சூக்குமங்களும், ஆசையும் நிராசையும் ஆசையும் ஆசையின் மையும், சொல்லும் ஒரு சொல்லின் முடிவும் - வேதமும் வேதாந்தமும், பெத்தமொடு முத்தியும் – பந்த மோக்ஷங்களும், பாவமொடு அபாவமும்—நினைப்புமறப்பும், பேதமொடு அபேதநிலையும்—பேதாபேத நிலைகளும், பெருமையொடு சிறுமையும்—உயர்வு தாழ்வுகளும் அருமையுடன் எளிமையும்-அருமை எளிமைகளும். பெண்ணினுடன் ஆணும்—பெண்மை யாண்மைகளும், மற்றும்—மேலும். நித்தமும் அநித்தமும் - நித்யா நித்யங்களும். அஞ்சன நிரஞ்சனமும் - தோஷமும் தோஷரகிதமும். நிஷ்களமும்-கலைகளுக்குமேற்பட்டதும். நிகழ் சகளமும்—கலைகளோடு கூடினதும். நீதியும் அநீதியும்-நீதியோட நீதிகளும், ஆதியொடு அநாதியும் - ஆதி அநாதிகளும், நிர்விஷய விஷயவடிவும் - ஒருவர்க்கு விஷயமாகாமையும் ஆதலுமாகிய வடிவங்களும், அத்தனையும் - (ஆகிய) யாவும், நீ அல்லது-நீயன்றி, எள் அத்தனையும் இல்லையெனின் - எள்ளளவும் – (நீயில்லாப் பொருள்பிறிது) இல்லையாயின். யாங்கள் உன்னை அன்றி உண்டோ-நாங்கள் உன்னை யன்றி (வேறே) உளமாவோமோ. அண்டபகி—எ-று.

பேதம்-வேறுபாடு. சுத்தாசுத்தம் முதலிய எல்லாம் நீயன்றி இல்லனவாகலின், நாங்களும் உன்னையன்றி வேருவோமோ என்பதாம்.

திருவாசகம்.

"நிலநீர் நெருப்புயிர் நீள்விசும்பு நிலாப்பகலோன்
புலனுய மைந்தனோ டெண்வகையாய்ப் புணர்ந்துநின்றான்
உலகே ழெனத்திசை பத்தெனத்தா னொருவனுமே
பலவாகி நின்றவா தோணோக்க மாடாமோ"-என்பதனுணர்க.

சாக்கரம், சொப்பநம், சுழுத்தி, துரியம் என்னு நான்கும் ஒவ்வொன்றும் நந்நான்காகப் பிரிக்கப்பட்டுப் பதினாறு ஆம். இவைகளைக் கலைகளென்று கூறுவர். அவை:—சாக்கர சாக்கரம், சாக்கர சொப்பநம், சாக்கர சுழுத்தி, சாக்கர துரியம், சொப்பந சாக்கரம், சொப்பந சொப்பநம்: சொப்பன சுழுத்தி, சொப்பநதுரியம், சுழுத்திசாக்கரம், சுழுத்திசொப்பநம், சுழுத்தி சுழுத்தி, சுழுத்திதுரியம். துரியசாக்கரம், துரியசொப்பநம். துரியசுழுத்தி. துரிய துரியம் என்பன. ஓங்காரம் - பிரதிபாதகம். பிரம்மம்-பிரதிபாத்யம் இந்தப்பிரணவம் அகாரம். உகாரம், அர்த்தமாத்ருகை என நான் காகி. ஒவ்வொன்றும் நன்நான் காகப் பிரிக்கப்பட்டு பதினாறும்: இவைகளும் கலைகளென்று சொல்லப்படும். ஸ்தூல சூக்கும காரண மாகாரணம் என்னு நான்கு சரீரங்களும் அவ்வாறே நன்நான்காகப் பிரிக்கப்பட்டுப் பதினாறாகிக் கலைகளெனப்படும். இந்தக் கலைகளுக்கு மேற்பட்டதாகிய பரப்பிரம வஸ்து அவித்யாபாத வித்யாபாத

ஆநந்தபாத துரியபாதங்கள் என நான்கு பாதங்களையுடையது. இப்பாதம் நான்கும் பசுவின் கால்போல்வதன்று. பொன் வெள்ளி நாணயங்களின் கால்பாகம் போல்வது.

72\. காராகு மாணவக் காட்டைக் களைந்தறக்
கண்டகங் காரமென்னும்
கல்லைப் பிளந்துநெஞ் சகமான பூமிவெளி
காணத் திருத்தி மேன்மேல்
பாராதி யறியாத மோனமாம் வித்தைப்
பதித்தன்பு நீராகவே
பாய்ச்சியது பயிராகு மட்டுமா மாயைவன்
பறவையணு காதவண்ணம்
நேராக நின்றுவிளை போகம் புசித்துய்ந்த
நின்னன்பர்கூட்டமெய்த
நினைவின் படிக்குநீ முன்னின்று காப்பதே
நின்னருட்பாரமென்றும்
ஆராரு மறியாத சூதான வெளியில்வெளி
யாகின்ற துரியமயமே
அண்டபகி ரண்டமு மடங்கவொருநிறைவாகி
யரனந்தமானபரமே.

ப—ரை. கார் ஆரும் ஆணவக் காட்டைக் களைந்து - இருள் நிறைந்த ஆணவக்காட்டை வேரற வெட்டி. அறக்கண்டு - வெட்டவெளியாக்கி. அகங்காரம் என்னும் கல்லைப்பிளந்து - அகங்காரமென்கிற கல்லைப் பிளந்தெறிந்து. நெஞ்சகமான பூமிவெளிகாண திருத்தி - மனமாகிய நிலமானது வெளியாய்க்காணும்படி திருத்தமிட்டு. மேன்மேல் - மேலு மேலும். பாராதிஅறியாத மோனம் ஆம் வித்தை பதித்து - பூலோகத்தார் முதலானவர்கள் அறியாத மோநநிலை யென்கிற விதயைப்பதித்து. அன்பு நீராக பாய்ச்சி-அன்பாகிய நீரைப் பாயவிட்டு. அது பயிர் ஆகுமட்டும்-அது பயிராகுமளவும். மாமாயை வன் பறவை அணுகாதவண்ணம் - பெரிய மாயையாகிய வலியபறவை சேர்ந்து அழிக்காவிதமாக. நேராக நின்று - (தமது முயற்சியினளவிற் குறையால்) செவ்வேநின்று (அப்பயிரைக்காத்து.) விளைபோகம் புசித்து உய்ந்த-விளைந்த சிவபோகத்தை நுகர்ந்து உஜ்ஜீவித்த. நின் அன்பர் கூட்டம் எய்த-உன்னடியார் கூட்டத்தை நான் சேரும்படி. நினைவின்படிக்கு-என்கருத்தின்படி, நீ முன்னின்று காப்பது - நீ எனக்குப் பிரத்யக்ஷமாகி நின்றுகாப்பாற்றுவது, நின் அருட்பாரம்—உன் திருவருட்குரியகடமையாம், என்றும் - எப்பொழுதும், ஆராரும் அறியாத - எவ்வகைப்பட்ட மேலோரும்உணராத, சூது ஆனவெளியில்

ரஹஸ்யமான சிதாகாயத்தில், வெளிஆகின்ற துரியமயமே - வெளிப்படத்தோற்றுகின்ற துரியவடிவே, அண்டபகி,—எ-று.

துரியம்-ஜீவன் முத்தர்க்குரிய பூமி. உலகவின்பம் புசித்தற்கு நிலந்திருத்தும் பெத்தாத்மாக்கள்போலச் சிவபோகம் புசித்தற்கு முக்தாத்மாக்களும்தம்மனநிலந் திருத்தவேண்டுவோராதலால் இவ்வாறு கூறப்பட்டது.

73. வானாதி பூதமா யகிலாண்டகோடியாம்
மலையாகி வளைகடலுமாய்
மதியாகி யிரவியாய் மற்றுள வெலாமாய
வான்கருணை வெள்ளமாகி
நானாகி நின்றவனு நீயாகி நின்றிடவு
நானென்ப தற்றிடாதே
நானானெனக்குளறி நானாவி காரியாய்
நானறிந் தறியாமையாய்ப்
போனா லதிட்டவலி வெல்லவெளி தோபகற்
பொழுதுபுகு முன்கண்மூடிப்
பொய்த்துயில்கொள் வான்றனை யெழுப்பவச மோவினிப்
போதிப்ப தெந்த நெறியை
ஆனாலு மென்கொடுமை யனியாய மனியாய
மார்பா லெடுத்து மொழிவேன்
அண்டபகி ரண்டமு மடங்கவொரு நிறைவாகி
யானந்த மானபரமே.

ப-ரை. வானாதி பூதமாய் - ஆகாயமுதலிய ஐம்பூதங்களாய், அகிலஅண்டகோடியாய் - சமஸ்தமான அண்டகோடிகளாய், மலை ஆகி - மலைகளாய், வளை கடலுமாய் – (உலகத்தை) வளைந்து கடல்களுமாகி, மதி ஆகி-சந்திரனாய், இரவியாய்-சூரியனாய், மற்று உள்ள எல்லாம் ஆகி-வேறுள்ளபொருள்களெல்லாமாய், வான்கருணை வெள்ளமாகி - மேலான கருணைப்ரவாஹமாய், நான் ஆகி நின்றவனும்-நானாகிநின்றவனும், நீ ஆகி நின்றிடவும்-நீயாகி நிற்கச்செய்தேயும், நான் என்பது அற்றிடாதே - நானென்பதை நீங்காமலே நான் நான் என குளறி-நான் நான் என்று குளறி, நானா விகாரி ஆய்-பலவகைவேறுபாடுள்ளவனாகி, நான் அறிந்து அறியாமை ஆய் - நானறிந்தும்அறியாமையுள்ளவனாகி, போனால்-(மனம்போனபோக்கில்) போனால், (அது) அதிட்டவலி-எனது அத்ருஷ்டபலமேயாகும், வெல்ல எளிதோ-(அதனை) ஜயித்தற்கு எளிதாகுமோ, பகற்பொழுது புகுமுன் - பகற்காலம் அஸ்தமிக்குமுன்னமே, கண் முடிக்கொண்டு, பொய்துயில் கொள்வான்தனை-பொய்த்தூக்கந் தூங்குபவனை, எழுப்பவசமோ - நித்திரைநீக்க (ஒருவர்க்கு)சாத்தியமாகுமோ, இனி எந்த நெறியை போதிப்பது - இனி எந்தமார்க்கத்தை போதிப்பது, ஆனாலும்-ஆயினும், என்

கொடுமை - என் கொடுமையைப்பிறர் கேட்கச் சொல்லின், (அது)அநியாயம் அநியாயம் - அநியாயமே அநியாயமே, (அங்ஙனமாதலால்) ஆர்பால் எடுத்து மொழிவேன் – (அதை) எவர்பக்கலில் எடுத்துச் சொல்லுவேன், அண்டப கி—ஏ-று.

என்கொடுமை என்னை இவ்வாறுக்கினதைக்கண்டு வைத்தும் பிறர்க் கெடுத்துரைத்து அவரையும் இவ்வாறுக்குதல் பாவமென்றஞ்சி ஆர்பாலெ டுத்து மொழிவேன் என்றார் போலும். நானறிந்தறியாமையாய் என்றதைப் பற்ற. பொய்த்துயில் கொள்வான்றனை யெழுப்பவசமோ என்றார். 'வானாதி என்று யுலகனைத்துமானார்தாமே, என்றபடி பூதமாயகிலாண்ட கோடியாய் என்றார்.

74\. பொய்யினேன் புலையினேன் கொலையினே னின்னரு
புலப்பட வறிந்துநிலையாப்
புன்மையேன் கல்லாத தன்மையே னன்மைபோற்
பொருளலாப் பொருளைநாடும்
வெய்யனேன் வெகுளியேன் வெறியனேன் சிறியனேன்
வினையினே னென்றென்னைநீ
விட்டுவிட நினைவையேற் றட்டழிவ தல்லாது
வேறுகதி யேதுபுகலாய்
துய்யனே மெய்யனே யுயிரினுக் குயிரான
துணைவனே யிணையொன்றிலாத்
துரியனே துரியமுங் காணு வதீதனே
சுருதிமுடி மீதிருந்த
ஐயனே யப்பனே யெனுமறிஞ ரறிவைவிட்
டகலாத கருணைவடிவே
அண்டபகி ரண்டமு மடங்கவொரு நிறைவாகி
யானந்த மானபரமே.

ப—ரை. பொய்யினேன்-பொய்யையுடையேன். புலையினேன் - புலால்புசி த்தலையுடையேன், கொலையினேன்-கொலைத் தொழிலையுடையேன், நின் அரு ள்புலப்பட அறிந்தும்-உன் திருவருட்டன்மையைவெளிப்பட அறிந்தும் நிலை யா - நிலைத்திராத, புன்மையேன் - அற்பத்தன்மையை யுடையேன், கல்லாத தன்மையேன்—கல்லாத தன்மையுடையேன், பொருள் அல்லாபொருளை—பொ ருட்டன்மை யுடையதல்லாத (பொய்ப்) பொருளை நன்மைபோல்நாடும் - நன் மையாயெண்ணி இச்சிக்கின்ற, வெய்யனேன் - கொடியகுண முடையேன், வெகுளியேன்-கோபமுடையேன், வெறியனேன் - பித்தகுண முடையேன், சிறியனேன் - சிறுமையையுடையேன், வினையினேன் என்று - தீவினையையு டையேன் என்று, என்னைநீவிட்டுவிட நினைவையேல், என்னை நீ கைவிட்டுவி

டநினைப்பாயானல், தட்டழிவது அல்லாது - தடுமாறுவதேயன்றி, வேறுகதி யேது -வேறுதிக்கு (எனக்கு) யாது. புகலாய்-(நீயே) சொல்வாய், துய்யனே- பரிசுத்தனே, மெய்யனே– உண்மையானவனே, உயிர்க்கு உயிர்ஆன துணைவனே-உயிர்க்குயிராகிய சஹாயபூதனே, இணைஒன்று இல்லாதுரியனே-சமானமொன்றுமில்லாத துரியசொரூபனே, துரியமுங்காணு அதீதனே, சுருதிமுடி மீது இருந்தஐயனே, வேதத்தின் முடிவிலிருந்த இறைவனே, அப்பனே-உபகாரகனே, என்னும் - என்றிப்படி பலவகையாய்த் துதிக்கின்ற அறிஞர்-அறிவுடையோரது, அறிவை–அறிவாகிய இடத்தை, விட்டுஅகலாத–விட்டுநீங்காதகருணைவடிவே - கருணாரூபியே, அண்டபகி—எ-று.

ஐயனே என்பதற்கு அழகனே எனவும் பொருள். (அ)

75. எத்தனை விதங்கடான் கற்கினுங் கேட்கினுமென்
 னிதயமு மொடுங்கவில்லை
யானெனு மகந்தைதா னெள்ளளவு மாறவிலை
 யாதினு மபிமானமென்
சித்தமிசை குடிகொண்டதீகையோ டிரக்கமென்
 சென்மத்து நானறிகிலேன்
சீலமொடு தவவிரத மொருகனவி லாயினுஞ்
 தெரிசனஞ் செய்துமறியேன்
பொய்த்தமொழி யல்லான் மருந்துக்கு மெய்ம்மொழி
 புகன்றிடேன் பிறர்கேட்கவே
போதிப்ப தல்லாது சும்மாவிருந்தருள்
 பொருந்திடாப் பேதைநானே
அத்தனை குணக்கேடர் கண்டதாக் கேட்டதா
 அவனிமிசை யுண்டோசொலாய்
அண்டபகி ரண்டமு மடங்கவொரு நிறைவாகி
 யானந்த மானபரமே.

ப-ரை. எத்தனைவிதங்கள் கற்கினும்கேட்கினும் - எத்தனை வகைகளாகக் கற்றாலும் கேட்டாலும், என் இதயமும் ஒடுங்கவில்லை–என்மனமு மடக்கமுறவில்லை,யான் என்னும் அகந்தைஎள்ளளவும்மாறவில்லை–யானென்கிற இறுமாப்பானது எள்ளளவாயினும் நீங்கவில்லை-யாதினும் அபிமானம் எல்லாப் பொருள்களிடத்தும் அபிமானமானது, என்சித்தமிசை குடிகொண்டது என்மனதில்வாழ்ந்துகொண்டிருக்கின்றது, ஈகையொடு இரக்கம்–கொடையோடு இரக்கமென்பதை, என்சென்மத்தும் நான் அறிகிலேன் - என்பிறவிதொட்டு இம்மட்டும்நானறிந்திலேன், சீலமொடுதவவிரதம்-ஆசாரத்தோடுதவவிரதங்களை,ஒருகனவில்ஆயினும்–ஒரு கனவிலானாலும், தெரிசனம்செய்தும் அறியேன்-தரிசி

த்துமறியேன், பொய்த்தமொழிஅல்லால் பொய்வார்த்தை பேசுவதன்றி, மருந்திக்கும்–மருந்துக்காஞலும், மெய்மொழி புகன்றிடேன்–மெய்யாகிய வார்த்தையை கூறமாட்டேன், பிறர்கேட்க–பிறர்கேட்கும்படி-போதிப்பது அல்லாது–போதிப்பதுஅல்லாது - போதிப்பதன்றி, சும்மாஇருந்து - சும்மாவிருந்து, அருள்பொருந்திடா பேதைநானே–உன் திருவருளைப்பெறுத அறிவிலிநானே, அத்தனைகுணக்கேடர் - (என்னைப்போன்ற) அவ்வளவு குணஈனர்களை, அவனிமிசை கண்டதாகேட்டதா - பூமியில் கண்டதாக வாஞலும் (இருக்கிறார்களென்று) கேள்விப்பட்டதாக வாஞலும், உண்டோ (ஒருபிரஸ்தாபம் முக்காலத்திலும்) உளதோ, சொலாய்-சொல்வாயாக. அண்டபகி—எ-று.

சும்மாவிருத்தல்–த்ரிகரணங்களும் அசைவற நிற்றல். "சும்மாவிருக்கச்சுகமுண்டே" எனவும், "சும்மாவிரு சொல்லறவென்னலும்" எனவும்ஆன்றோர்கூறுதல்காண்க.

76\. எக்கால முந்தனக் கென்னவொரு செயலிலா
வேழைநீ யென்றிருந் திட்
டெனதாவி யுடல்பொருளு மௌனியாய் வந்துகை
யேற்றுநம தென்றவன்றே
பொய்க்கால தேசமும் பொய்ப்பொருளில் வாஞ்சையும்
பொய்யுடலை மெய்யென்றலும்
பொய்யுறவு பற்றலும் பொய்யாகு நானென்னல்
பொய்யினும் பொய்யாகையான்
மைக்கா லிருட்டனைய விருளில்லை யிருவினைகள்
வந்தேற வழியுமில்லை
மனமில்லை யம்மனத் தினமில்லை வேறுமொரு
வரவில்லை போக்குமில்லை
அக்கால மிக்கால மென்பதிலை யெல்லா
மதீதமய மானதன்றோ
அண்டபகி ரண்டமு மடங்கவொரு நிறைவாகி
யானந்த மானபரமே.

ப-ரை. மௌனியாய்வந்து-மௌன குருவாகிவந்து, எக்காலமும் - எச்சமயத்திலும், நீதனக்கென்ன ஒருசெயல்இல்லா ஏழையென்று - நீசுதந்தரமாக ஒருசெயலுமில்லாத பேதையென்று போதித்து, இருந்திட்டு - எழுந்தருளியிருந்து, எனதுஆவி உடல்பொருளும்-என்னுடைய ப்ராணன்தேஹம்பொருள் ஆகிய மூன்றையும், கையேற்று - கையிஞலேற்றுப்பெற்று, நமது என்றஅன்றே-நமதுஎன்று தேவரீர்அருளிச்செய்த அப்பொழுதே பொய்க்கால தேசமும்–பொய்யாகியகாலமும் பொய்யாகிய தேசமும், பொய்ப்பொருளில்வாஞ்சையும்–அசத்தியப்பொருளில் இச்சையும், பொய்உடலைமெய் என்னலும்-பொய்

பாகியதேகத்தை மெய்யென்று கொள்ளுதலும், பொய் உறவுபற்றலும்-பொய் யுறவினரை (மெய்யுறவினராக மதித்து) தொடர்தலும், பொய்ஆகும் - பொய் யாய் முடியும், நான்என்னல் - நான்என்பது, பொய்யினும் பொய் ஆகையால்- பொய்யினுள்ளும் (பெரும்) பொய்யாய் முடியுமாதலால், மைக்கால் இருட்டு அனைய, மழைக்கால விருள்போன்ற, இருள்இல்லை-இருவினைகள் வந்து தொடராவடா வழியுமில்லை, மனம்இல்லை - மனமென்பதில்லை, அம்மனத்து இனம் இல்லை—அந்தமனத்தின் இனமானது மில்லை, வேறும் ஒருவரவுஇல்லை போக் குமில்லை-பிறிதொரு வரவுஇல்லை செலவும் இல்லை, அக்காலம் இக்காலம் என் பதுஇல்லை - அந்தக்காலம் இந்தக்காலம் என்பதுமில்லை, எல்லாம் - சர்வமும், அதீதமயம் ஆனதுஅன்றே-இல்லாமை வடிவாயிற்றல்லவா, அண்டபகி எ-று.

"எனதாவி யுடல்பொருளு மௌநியாய் வந்துகையேற்று" என்றது. உப தேசகாலத்தில் உடல்பொருள் ஆவிகளைச் சீடன்சமர்ப்பித்தலும், அவைகளை யேற்றுக்கொண்டு ஆசிரியன் உபதேசித்தலும் முறைமையாதலால், 'அன்றே யென்ற னுவியுமுடலும் பொருளு மெல்லாமுங் - குன்றெயனையா யென்னை யாட்கோண்டபோதே கொண்டிலையோ, என்ற திருவாதவூரடிகள் திருவாக் கால் உணர்க. இப்பொய்யை நோக்குங்கால் முற்பொய்யானது மெய்யென்று தோன்றுமாதலின் "பொய்யினும்பொய்" என்றார். இறைவன் மௌநியாய்வந் துஎன்உடல் பொருளாவி மூன்றனையும் கைக்கொண்ட அப்பொழுதே அஞ் ஞான விருள்முதலியன அற்றொழிந்தன வென்பதாம்.

சுகவாரி.

77. இன்னமுது கனிபாகு கற்கண்டு சீனிதே
 னெனருசித் திடவலியவந்
தின்பங் கொடுத்தநினை யென்நேர நின்னன்ப
 ரிடையறா துருகிநாடி
உன்னிய கருத்தவிழ வுரைகுழறி யுடலெங்கு
 மோய்ந்தயர்ந் தவசமாகி
உணர்வரிய பேரின்ப வநுபூதி யுணர்விலே
 யுணர்வார்க ளுள்ளபடிகாண்
கன்னிகை யொருத்திசிற் றின்பம்வேம் பென்னினுக்
 கைக்கொள்வள் பக்குவத்தில்
கணவனருள் பெறின்முனே சொன்னவா றென்னெனக்
 கருதிநகை யாவளதுபோல்
சொன்னபடி கேட்குமிப் பேதைக்கு நின்கருணை
 தோற்றிற் சுகாரம்பமாம்
சுத்தநிர்க் குணமான பரதெய்வ மேபரஞ்
 சோதியே சுகவாரியே.

ப—ரை. இன் அமுது—இனிய அமிர்தம், கனி—முப்பழங்கள், பாகு—சர்க்க கரைப்பாகு, கற்கண்டு, சீனி - சீனிச்சர்க்கரை, தேன்என-தேன் ஆகிய இவை போல, ருசித்திட-ருசிக்கும்படி, வலியவந்து இன்பங்கொடுத்த நின்னை--வலிய வந்து சுகங்கொடுத்தவுன்னை, நின் அன்பர்—உன் அன்பர்கள், எந்நேரம் இடையறாது உருகிநாடி-எக்காலமும் இடையறாமல் நாடியுருகி, உன்னியகருத்துஅவிழ-நினைத்த மனமும் நெகிழும்படி, உரைகுளறி—மொழிதடுமாறி, உடல் எங்கும் ஒய்ந்து-உடம்பெல்லாம் இளைத்து, அயர்ந்து, சோர்வையடைந்து, ஆவசம்ஆகி-பரவசமாகி, உணர்வரிய - அறிதற்கரிய-பேரின்ப அநுபூதியுணர்விலே-பேரின்ப அநுபவவுணர்ச்சியால், உணர்வார்கள்- அறிந்தனுபவிப்பார்கள், உள்ளபடி -(இது) யதார்த்தம், கன்னிநீஒருத்தி-ஒருகன்னிகையானவள், சிற்றின்பம் - சிற்றின்பச்செயலானது, வேம்பு என்னினும் - வேப்பம் பழமென்று சொல்வாளாயினும், பக்குவத்தில் கைக்கொள்வாள் - பருவகாலத்தில் (இச்சிற்றின்பத்தையே பேரின்பமாகஎண்ணி) கைக்கொள்வாள், கணவன் அருள்பெறின் - கணவனருளைப்பெற்று வாழ்வாளாயின், முன்னே சொன்னவாறு என் என - முன்னே சொன்னவழி யாதென்றுவினவ, கருதி - (அதை) நினைத்து, நகையாவள்-சிரிப்பாள், அதுபோல்--அதுபோலவே, சொன்னபடிகேட்கின்ற. இப்பேதைக்கு - இவ்வறிவிலிக்கு, நின்கருணை தோற்றின் - உன்கிருபை யுளதாயின், சுகாரம்பம்ஆம்-சுகோதயமாகும், சுத்த நிர்க்குணமான பரதெய்வமே-சுத்த நிர்க்குணமான மேலாகிய தெய்வமே, பரஞ்சோதியே - மேலான தெஜஸே, சுகவாரியே-சுகக்கடலே—எ—று.

கன்னிகை-இளம்பெண். கணவனருள்பெறுதல்-கணவனது விருப்பத்திற்கு இணங்கி அவனோடின்புற்றுவாழ்தல். கன்னிகைக்குச் சிற்றின்பங்கைத்தலும்வயதடைந்த பெண்ணுக்கு இரதித்தலும் இயற்கையாதல்போல, உன்னருள்பெறாத எனக்கு உன்சுகானுபவம் கைப்பாகவும், பெற்றஅறிஞர்க்கு இனிப்பாகவுமிருக்கும் என்பதுகருத்து, நிர்க்குணன் - குணரகிதன். (க)

78. அன்பின்வழி யறியாத வென்னைத் தொடர்ந்தென்னை
யறியாத பக்குவத்தே
ஆசைப்பெருக்கைப் பெருக்கிக் கொடுத்துநா
னற்றேனலந்தேனென
என்புலன் மயக்கமே பித்தேற்றி விட்டா
யிரங்கியொரு வழியாயினும்
இன்பவெள மாகவுந் துள்ளங் களிக்கவே
யெனைநீ கலந்ததுண்டோ
தன்பருவ மலருக்கு மணமுண்டு வண்டுண்டு
தண்முகை தனக்குமுண்டோ
தமியனேற் கிவ்வணந் திருவுள மிரங்காத
தன்மையாற் றனியிருந்து

துன்பமுறி னெங்கனே யழியாத நின்னன்பர்
சுகம்வந்து வாய்க்குமுரையாய்
சுத்தநிர்க் குணமான பரதெய்வ மேபரஞ்
சோதியே சுகவாரியே.

ப—ரை. அன்பின்வழி அறியாத - அன்பின் மார்க்கத்தை யறியாத என்னை-அடியேனை, தொடர்ந்து - பற்றி, என்னையறியாத பக்குவத்தே - என்னை உணராத பருவத்திற்றானே, ஆசைப்பெருக்கைப் பெருக்கிக்கொடுத்து-ஆசை வெள்ளத்தைப் பெருகச்செய்து, நான் அற்றேன் அலந்தேன் என-நான்கெட்டேன் வாடினேன் என்று சொல்லும்படி, என்புலன் மயங்க பித்துஏற்றிவிட்டாய்—என்னறிவு திகைக்கும்படி பித்தேற்றிவிட்டனை, நீ—(இப்படிசெய்த)நீ, ஒருவழியாயினும் இரங்கி—ஒருதரமாயினும் மனமிரங்கி, இன்பவெள்ளமாகவந்து—ஆனந்தப் பெருக்காகவந்து, உள்ளம்களிக்க - மனம்மகிழும்படி, என்னை கலந்தது உண்டோ—என்னைச் சேர்ந்ததுஉளதோ - தன்பருவமலருக்கு—தன்பருவகாலமலருக்கு, மணம்உண்டு—பரிமளமுண்டு, வண்டுஉண்டு—வண்டுமொய்த்தலுண்டு, தண்முகைதனக்கும் உண்டோ- (அவைகள்) குளிர்ச்சியாகிய அரும்புகளுக்கும் உண்டாமோ (உண்டாகா), தமியனேற்கு - தனியேனுக்கு, இவ்வண்ணம்-இந்தப்ரகாரம், திருவுளம்இரங்காத தன்மையால்-தேவரீர் திருவுளங்கனியாத தன்மையால், தனிஇருந்து துன்பம்உறின்-தனியாயிருந்து விசனப்பட்டால், அழியாத நின்அன்பர்சுகம் - (ஒருகாலத்திலும்) நசிக்காத உன்னன்பர்க்குரிய இன்பமானது, எங்ஙன்வந்து வாய்க்கும் - எப்படிவந்து பொருந்தும், உரையாய்-சொல்லாய், சுத்த நிற்குணமான—ஏ—று

அன்பின்வழி—அன்புசெய்ய வேண்டியவழி. தன்பருவமலர் - மலர்தற்குரிய பருவத்துண்டாகிய மலர்.

என்னைப்பார்த்தபிறர், உன்விஷயமாய் நான்வாடினேன் அயர்ந்தேன் என்றுசொல்லும்வகை, என்னறிவுமயங்கப் பித்தேற்றிவிட்ட நீஒருகாலாயினும் சுகத்தைக் கொடுத்தாயில்லையே, அப்படிஎன் கருணைக் குரியனாகாத எனக்கு என்னசுகமுண்டு, என்பதுகருத்து. (௨)

79. கல்லேனு மையவொரு காலத்தி லுருகுமென்
கன்னெஞ்ச முருகவிலையே
கருணைக் கிணங்காத வன்மையையு நான்முகன்
கற்பிக்க வொருகடவுளோ
வல்லான் வகுத்ததே வாய்க்கா லெனும்பெரு
வழக்குக் கிழுக்குமுண்டோ
வானமாய் நின்றின்ப மழையா யிறங்கியெனை
வாழ்விப்ப துன்பாரங்காண்

பொல்லாத சேயெனிற் றாய்தள்ள னீதமோ
புகலிடம் பிறிதுமுண்டோ
பொய்வார்த்தை சொல்லிலோ திருவருட் கயலுமாய்ப்
புன்மையே னுவனந்தோ
சொல்லான் முழக்கிலோ சுகமில்லை மௌனியாய்ச்
சும்மாவிருக்க வருளாய்
சுத்தநிர்க் குணமான பரதெய்வ மேபரஞ்
சோதியே சுகவாரியே.

ப-ரை. ஐய-ஐயனே, கல்லேனும் ஒருகாலத்தில் உருகும்-கல்லாயினும் ஒருகாலவிசேடத்தில் உருகாநிற்கும், என்கல்நெஞ்சம் உருக இல்லையே-என்கல் மன முருகவில்லையே, (ஆ ? இது ஆச்சரியம்) நான்முகன்–நான்முகங்களையுடையபிரமன், கருணைக்கு இணங்காதவன்மையையும் கற்பிக்க–திருவருட் கிணங்கியிராத மனவன்மையையும் உண்டுசெய்ய, ஒருகடவுளோ - ஒப்பற்றதெய்வமோ, வல்லான்வகுத்ததே வாய்க்கால்என்னும்-வல்லான்வகுத்ததே வாய்க்கால் என்கிற, வெருவழக்கு–பெரியஉலக வழக்கத்துக்கு, இழுக்கும் உண்டோ-குற்றமு முண்டாகுமோ, வானமாய்நின்று - பரமாகாயமாய் நின்று, இன்பமழையாய் இறங்கி-ஆனந்த வர்ஷமாயிறங்கி, என்னைவாழ்விப்பது–என்னை (நித்யபதவியில்) வாழவைப்பது, உன்பரம் - உன்பாரமாகும், பொல்லாத சேய்எனில்–பொல்லாதகுழந்தையா யிருந்தால், (அதனை) தாய்தள்ளல்நீதமோ-தாயானவள் தள்ளிவிடுதல் நியாயமாகுமோ, (அவ்வாறு விட்டால்) புகல் இடம்பிறிதும் உண்டோ - அக்குழந்தைக்கு அடைக்கலத்திற்குரிய ஸ்தானம் வேறும் உளதோ, பொய்வார்த்தை சொல்லில்-பொய்மொழி பேசுவேனானல், திருவருட்கு அயலும் ஆம்-திருவருளுக்குப் புறமுமாகி, புன்மையேன் ஆவன் - அற்பனுமாவேன், அந்தோ-ஐயோ, சொல்லாமல் முழக்கில்–(வாய்ச்) சொல்லான் முழக்குதல் செய்தால், சுகம்இல்லை–இன்பமில்லை, மௌனிஆய்- மௌனியாகி, சும்மாஇருக்க அருளாய்-(சிந்தனையறறு) சும்மா யிருக்கும்படி கிருபைபண்ணுவாய், சுத்த நிர்க்குணமான—எ-று.

ஒரு பொருட்டன்மை அதற்கினமான பிறிது பொருளினு மிராவிடின் அஃதொரு வியப்பன்றே. ஆகையால், ‘கல்லேனும் ஒருகாலத்தில் உருகும் என்கல்நெஞ்சம் உருகவில்லையே’ என்றார்.

கிருபைக்கிலக்காகாத வன்மையைச் சிருட்டித்த நான்முகன் ஒருகடவுளல்லனாயினும் வல்லான்ஆதலால் அதனையும் சிருட்டித்தான் என்றற்கு “கருணைக்கிணங்காத வன்மையும் நான்முகன்கற்பிக்க வொருகடவுளோ, வல்லான்வகுத்ததே வாய்க்காலெனும்பெரு வழக்குக் கிழுக்குமுண்டோ” என்றார்.

80. என்பெலா நெக்குடைய ரோமஞ் சிலிர்ப்பவுட
லிளகமன தழலின்மெழுகாய்
இடையறு துருகவரு மழைபோ லிரங்கியே
யிருவிழிக ணீரிறைப்ப
அன்பினான் மூர்ச்சித்த வன்பருக் கங்ஙனே
யமிர்தசஞ் சீவிபோல்வந்
தானந்த மழைபொழிவை யுள்ளன்பி லாதவெனை
யார்க்காக வடிமைகொண்டாய்
புன்புலான் மயிர்தோ னரம்பென்பு மொய்த்திடு
புலைக்குடிலி லருவருப்பும்
பொய்யல்ல வேயிதனை மெய்யென்று நம்பியென்
புந்திசெலு மோபாழிலே
துன்பமா யலையவோ வுலகநடை யையவொரு
சொப்பனத்தினும் வேண்டிலேன்
சுத்தநிர்க் குணமான பரதெய்வ மேபரஞ்
சோதியே சுகவாரியே.

ப-ரை. என்பெலாம் நெக்கு உடைய—எலும்புகளெல்லாம் நெக்கு விட்டு உடையவும், ரோமம் சிலிர்ப்ப - மயிர்க்குச்செறியவும், உடல் இளக - தேகங்குழையவும், மனது - மனமானது, இடையறுது - இடையறுமல், அழலின் மெழுகாய் உருக - தீயிலிட்ட மெழுகுபோலுருகவும், இருவிழிகள் - இரண்டு கண்களும், வரும் மழைபோல் இரங்கிநீர் இறைப்ப - வருகின்ற மழையைப் போல இரங்கி நீரைச்சிந்தவும், அன்பினல் மூர்ச்சித்த அன்பருக்கு - அன்போடு மூர்ச்சையடைந்த அன்பர்களுக்கு, அங்ஙனே - அவ்விடத்தே, அமிர்த சஞ்சீவிபோல் வந்து - அமிர்தசஞ்சீவி மருந்துபோல எழுந்தருளி - ஆநந்த மழைபொழிவை - இன்பமழையைச் சொரிவாய், உள்ளன்பிலாத - உள்ளத்தில் அன்பு இல்லாத, என்னை ஆர்க்காக அடிமைகொண்டாய் - என்னையாவர் நிமித்தம் அடிமைகொண்டனை, புன்புலால் மயிர் தோல் நரம்பு என்புமொய்த்திடு - அற்பமாகிய மாபிசம் ரோமம் தோல் நரம்பு எலும்பு ஆகிய இவைகள் நெருங்கியிருக்கிற, புலைக்குடிலில் - புலால்நாற்றம் பொருந்திய (வீடாகிய) குடிசையில், அருவருப்பு — அருவருப்பேயுள்ளது, பொய்யல்லவே — இதுபொய்யல்ல (உண்மையே), இதனைமெய்யென்று, நம்பி - இதை உண்மையென்று நம்பி, என் புந்தி - என் புத்தியானது, பாழிலே செல்லுமோ - வீண்வழியிற் செல்லுமோ, துன்பமாய் அலையவோ - (அப்படிசென்று) துன்பங்கொண்டு திரியவோ, ஐய - ஐயனே, உலகநடை - உலகநடக்கையை, ஒருசொப்பனத்தினும் வேண்டிலேன்—ஒருகனவினும் விரும்பேன், சுத்தநிர்க்குண. எ-று.

அமிர்த சஞ்சீவி - மரணத்தைப்போக்கிவாழ்விப்பதாகிய சாவாமருந்து என்பு நெக்குடைதல் முதலிய குணங்களுடைய அடியார்கட்கு நீ இரங்குத லியற்கையே, அவை சிறிதுமில்லாத என்னை யார்பொருட்டு அடிமை கொண் டாய் என்பது கருத்து. (ச)

81. வெந்நீர் பொறுதெனுடல் காலின்முட் டைக்கவும்
வெடுக்கென் றசைத்தெடுத்தால்
விழியிமைத் தங்ஙனே தண்ணருளை நாடுவேன்
வேறொன்றை யொருவர்கொல்லின்
அந்நேர மையோவென் முகம்வாடி நிற்பதுவு
மையநின் னருளறியுமே
ஆனாலு மெத்தப் பயந்தவ னியானென்னை
யாண்டநீ கைவிடாதே
இந்நேர மென்றிலை யுடற்சுமைய தாகவு
மெடுத்தா லிறக்கவென்றே
எங்கெங்கு மொருதீர்வை யாயமுண் டாயினு
மிறைஞ்சுசுக ராதியான
தொன்னீர்மை யாளர்க்கு மானிடம் வகுத்தவரு
டுணையென்று நம்புகின்றேன்
சுத்தநிர்க் குணமான பரதெய்வ மேபரஞ்
சோதியே சுகவாரியே.

ப - ரை. என் உடல் - என்தேகமானது, வெந்நீர்பொறுது - வெந்நீரை ச்சகிக்கமாட்டாது, காலில் முள்தைக்கவும் - காலில் முள்ளானது தைத்துக் கொண்டால், வெடுக்கென்றசைத்து எடுத்தால் — வெடுக்கென்றசைத்துப் பி டுங்க (அதற்குச்சகிக்காமல்), அங்ஙனே-அவ்விடத்தே, விழி இமைத்து-கண் ணிமைத்து, தண் அருளை நாடுவேன் - தண்ணிய திருவருளை நினைந்து வரு ந்துவேன், ஒருவர் வேறொன்றைகொல்லின் - ஒருகர் பிறிதொரு ஜீவனைக் கொன்றால், அந்நேரம் - அப்பொழுது, ஐயோ - அந்தோ, என் முகம் வாடி நிற்பதுவும் - என்முகம் வாட்டமுற்று நான் நிற்கு நிலையையும், நின் அருள் அறியுமே—உன் திருவருளறியுமல்லவா, ஐய — ஐயனே, ஆனாலும் - ஆயினும் யான் மெத்தபயந்தவன் - நான் மிக அச்சமுற்றவன், (ஆதலால்) என்னை ஆண்ட நீ கைவிடாதே - என்னை யாட்கொண்ட நீ கைநெகிழவிடாதே. உடல் சுமை - உடற்பாரம், இந்நேரம் என்றில்லை - இன்னகாலத்தில் விழு மென்னும் நியதியில்லை, அது ஆகவும் - அது அப்படியிருக்கவும், எடுத்தால் இறக்க என்றே - உடலெடுத்தால் இறக்க என்றே, எங்கெங்கும் - எல்லாவிட த்தும், ஒருதீர்வை ஆயம் உண்டு - ஒரு தீர்மானம் ஆயமும் உண்டு, ஆயினும்- ஆனாலும், இறைஞ்சு - பணிகின்ற, சுகர் - ஆதி, ஆன - சுகர்முதலான, தொல்

நீர்மை யாளர்க்கு - பழமையாகிய குணவான்களுக்கு, மாநுடம் வகுத்த அருள் - மநுஷ்ய தேகத்தைவகுத்த திருவருளே, துணையென்று நம்புகின்றேன் - சஹாயமென்று நம்புகின்றேன், சுத்த நிற்குணமான. எ - று.

தன்னைத் துன்பப்படுத்தினால் மனங்கசிவது உயிருக்கியற்கையாயிருக்க, இவர், "வேறொன்றை யொருவர் கொல்லின் அந்நேரமையோவென் முகம்வாடி நிற்பதுவும்" என்றது, இவரது பேரருளுடைமையை விளக்காநின்றது. "சுகராதியான தொன்னீர்மையாளர்க்கு மானிடம் வகுத்தவருடுணையென்று நம்புகின்றேன்". என்றது சுகராதி முனிவர்போலத் தாமும் தீர்க்காயுசு பெறக் கருதியகுறிப்பாம்.

நீர்மை - தன்மை. தீர்வை - தீர்மானம். ஆயம் - அத்தீர்மானத்தின்படி உடன்கொடுத்தலாகிய கடன்மை. (ரு)

௮2. பற்றுவன வற்றிடு நிராசையென் றொருபூமி
பற்றிப்பிடிக்கும் யோகப்
பாங்கிற் பிராணலய மென்னுமொரு பூமியிவை
பற்றின்மன மறுமென்னவே
கற்றையஞ் சடைமௌனி தானே கனிந்தகனி
கனிவிக்கவந்த கனிபோல்
கண்டதின் நெறியெனத் திருவுளக் கனிவினொடு
கனிவாய் திறந்துமொன்றைப்
பெற்றவனு மல்லேன் பெறுதவனு மல்லேன்
பெருக்கத் தவித்துளறியேன்
பெண்ணீர்மை யென்னவிரு கண்ணீ ரிறைத்துநான்
பேய்போ லிருக்கவுலகஞ்
சுற்றிநகை செய்யவே யுலையவிட் டாயெனிற்
சொல்லவினி வாயுமுண்டோ
சுத்தநிர்க் குணமான பரதெய்வ மேபரஞ்
சோதியே சுகவாரியே.

ப - ரை. பற்றுவன - (பஞ்சேந்திரியங்களாற்) பற்றப்படுகிற விடயங்கள் (யாவும்), அற்றிடும் - அற்றொழிகைக்குக் காரணமாகிய, நிராசையென்று - அவாவின்மையென்று சொல்லப்பட்டு, ஒரு பூமி - ஒரு பூமியுண்டு, பற்றிப் பிடிக்கும் - (இந்திரியங்களை விடயவாதனையில் செல்லாது தடைப்படுத்த மனம் கைவசப்படுதற்கு அதற்கு நட்பாகிய பிராணவாயுவைத்) தொடர்ந்து பிடித்து நிறுத்துகின்ற, யோகபாங்கின் - யோகசாதனத்தாற் கைவருகின்ற, பிராணலயம் என்னும் - பிராணலயம் என்கிற, ஒருபூமி - ஒருபூமியுண்டு, இவை பற்றின் - இவற்றை ஆதாரமாகப்பிடித்தால், மனம் அறும் என்ன - மன நசிக்குமென்று, கற்றை அம்சடை - கூட்டமாகிய அழகிய சடையையுடைய,

மௌனி - மௌனகுரு, தானே - தானாகவே, கனிந்தகனி - முதிர்ந்தகாயை, கனிவிக்க - பழுப்பிக்க, வந்த கனிபோல் - உண்டாகியபழம்போல, (ஸஜாதியனாகவந்து) கண்டது - கண்ணுக்கு நேராகக்கண்டது. இ நெறி என—இந்த மார்க்கமென்று, திருவுளக் கனிவினொடு - மனவிரக்கத்துடன், கனிவாய் திறந்தும் - கனிவாய் திறந்தாயினும். ஒன்றை - ஒருமொழியை. பெறவனும் அல்லேன் - சொல்ல அடைந்தேனு மல்லேன் - பெறாதவனும் அல்லேன், பெறாதேனுமல்லேன், பெருக்கத்தவித்து உளறி - மிகவும இளைத்தரற்றி, பெண்ணீர்மை என்ன - பெண்மைக் குணம்போல, இருகண்ணீர் இறைத்து—இரண்டு கண்களினின்றும் நீரைச்சிந்தி, நான்பேய்போல் இருக்க - நான் பேய்போல அலங்கோலமாயிருக்க, (அவ்வவத்தையைக்கண்டு) உலகம் — உலகமானது, சுற்றி நகைசெய்ய - (என்னைச்) சூழ்ந்து நகைசெய்யும்படி, உலையவிட்டாய் என்னில் - அலையவிட்டனையாயின், இனிசொல்லவாயும் உண்டோ - இனிச் சொல்லுதற்கு (எனக்கு) வாயுமுளதோ (இல்லை), சுத்த நிர்க்குணமான எ-று.

ஈண்டு கனியென்றது வாழைக்கனியை, அது ஒரு குலையில் தன்னினமாய் முற்றிநின்ற காய்களைக் கனிவித்தற்கு ஒன்று முந்திக்கனிவதுபோல, மௌனகுருவானவர், தம்மினமாய்ப் பக்குவப்பட்டு நின்ற என்னை யளித்தற்கு மானிடச்சட்டை சாத்தி யெழுந்தருளினா ரென்பதாம்.

மனநாசத்துக்குக்காரண நிராசையும் வாயுநிரோதநமும் என்று இதனாற் கூறப்பட்டது.

83. அரும்பொனே மணியே யெனன்பே யெனன்பான
வறிவேயெ னறிவிலூறும்
ஆநந்த வெள்ளமே யென்றென்று பாடினே
னாடினே னாடிநாடி
விரும்பியே கூவினே னுலறினே னலறினேன்
மெய்சிலிர்த் திருகைகூப்பி
விண்மாரி யெனவெனிரு கண்மாரி பெய்யவே
வேசற் றயர்ந்தேனியான்
இரும்புநேர் நெஞ்சகக் கள்வனா னாலுமுனை
யிடைவிட்டு நின்றதுண்டோ
என்றுநீ யன்றுநா னுன்னடிமை யல்லவோ
யாதேனு மறியாவெறுந்
துரும்பனே னென்னினுங் கைவிடுத னீதியோ
தொண்டரொடு கூட்டுகண்டாய்
சுத்தநிர்க்குணமான பரதெய்வமே பரஞ்
சோதியே சுகவாரியே.

ப-ரை. அரும்பொன்னே - அருமையாகிய சுவர்ணமே, மணியே - மாணிக்கமே, என் அன்பே - என் அன்புருவமே, என் அன்பு ஆன அறிவே-என் அன்பின்கண் சனித்த அறிவே, என் அறிவில் ஊறும் ஆனந்த வெள்ளமே - என் அறிவில் ஊற்றெடுக்கின்ற ஆனந்தப்பெருக்கே, என்று என்று பாடினேன்-என்று பலகாற் சொல்லிப்பாடினேன், ஆடினேன் - (ஆனந்தக்) கூடித்தாடினேன், நாடி நாடி-தேடித்தேடி, விம்பி-இச்சித்து. கூவினேன், அழைத்தேன், உலறினேன் (நீவராமையால்) சினந்தேன், அலறினேன் (அக்கோபம்மாறி) வாய்விட்டரற்றினேன். மெய் சிலிர்த்து-உடல் சிலிர்த்து, இரு கைகூப்பி-இருகரங்களேயுங்குவித்து. விண்மாரி யென-மேகத்தில் நின்றும் வீழ்கிற மழை நீரைபோல. என் இருகண்மாரி பொழிய-என் இரண்டுகண்கள் மழைபொழியா நிற்க. யான் வேசற்று அயர்ந்தேன் - நான் மனம்நொந்து வாடினேன். இரும்பு நேர்-இரும்புக்கு ஒப்பான, நெஞ்சகம் - (கடின) மனத்தையுடைய. கள்வன் ஆனாலும்-வஞ்சகனாயினும், உனை இடைவிட்டு நின்றது உண்டோ-உன்னை ஒரு காலத்தில் மறந்திருந்தது உண்டோ நீ என்று - நீ எப்பொழுது (இருந்தாய்.) அன்று நான்-அன்று நானும் இருந்தேன். (ஆதலால் நான்) உன் அடிமை அல்லவோ-நான் உன் தொண்டன் அல்லவோ, யாதேனும் அறியா-நற்காரியத்தை ஒரு சிறிதும் அறியாத, வெறும் துரும்பனேன் என்னினும்-நிஷ்பிரயோசனமான துரும்பை ஒத்தவனாயினும், கைவிடுதல்-என்னைக் கைவிட்டுவிடுதல், நீதியோ - உனக்குத் தருமந்தானோ, தொண்டரொடு கூட்டு - உன்தொண்டர்களுடன் சேர்த்துவிடு. சுத்தநிர்க்—எ-று.

கிடைத்தலருமை நோக்கி, அரும்பொன்னே என்றும். பொன்னுக்கு மணிக்கும் பொருந்த முண்மையின் அதன்பின் மணியே என அடுத்துங்கூறப்பட்டது.

ஈண்டுக் கூறிய பொன் முதலியன ஒன்றினொன்றுயர் பொருள்கள், பொன்முதலிய உயர்பொருளோடு ஒப்பிட்டுக் கூறத்தக்க நீ. இரும்புடன் ஒப்பிடத்தக்க மனமுடைய என்னால் ஒரு காலத்தும் நீக்கப்பட்டா யில்லையாதலாலும். என்றும்யான்உன்னடிமையாதலாலும், துரும்புபோல்வேனைக் கைவிட்டுவிடாது உன்னடியவர் திருக்கூட்டத்தில் ஒருவனாகச் சேர்க்க வேண்டு மென்று பிரார்த்தித்ததாம்.

84. பாராதி யண்டங்க ளத்தனையும் வைக்கின்ற
பரவெளியி னுண்மை காட்டிப்
பற்றுமன வெளிகாட்டி மனவெளியி னிற்றோய்ந்த
பாவியேன் பரிசுகாட்டித்
தாராள மாய்நிற்க நிர்ச்சிந்தை காட்டிச்
சதாகால நிஷ்டையெனவே
சகசநிலை காட்டினை சுகாதீத நிலையந்
தனைக்காட்ட நாள்செல்லுமோ

காரார வெண்ணரு மனந்தகோ டிகணின்று
காலூன்றி மழைபொழிதல்போற்
கால்வீசி மின்னிப்படர்ந்துபரவெளியெலாங்
கம்மியா னந்தவெள்ளஞ்
சோராது பொழியவே கருணையின்முழங்கியே
தொண்டரைக் கூவுமுகிலே
சுத்தநிர்க் குணமான பரதெய்வ மேபரஞ்
சோதியே சுகவாரியே.

ப—ரை. பார் ஆதி அண்டங்கள் அத்தனையும் - பூலோகம் முதலாகியஅண்டங்கள் எல்லாவற்றையும். வைக்கின்ற-எழிதிவைத்தற்குறிய. பரவெளியின் உண்மைகாட்டி - பரமாகாயத்தின் உண்மையைக் காட்டி, பற்றும்—அதைப்பின்|தொடர்கின்ற. மனவெளிகாட்டி - மன ஆகாயத்தைக் காட்டிமனவெளியினில் தோய்ந்த-மன ஆகாயத்தில் பதிந்த. பாவியேன் பரிசுகாட்டி-பாவியேனது தன்மையைக்காட்டி. தாராளமாய் நிற்க - தாராளமாய்நிலைத்திருக்க. நிர்ச்சிந்தைகாட்டி-மன அழிவையும் காட்டி. சதாகால நிஷ்டை யென்ன. எக்காலத்தும் நிஷ்டையென்று. சகசநிலைகாட்டினை—சகசநிலையையும் காட்டியருளினாய், சுகாதீதநிலயம் தன்னைக்காட்டி-ஆனந்தாதீதமாகிய நிலையைக் காண்பிக்க. நாள் செல்லுமோ-இன்னுங்காலங்கழியுமோஎண் அரும்-எண்ணு தற்கரிய, அனந்தகோடிகள்-முடிவற்ற கோடிகளாகிய,கார்-மேகங்கள், ஆரநின்று-நிறைந்து நின்று,கால் ஊன்றி மழைபொழிதல்போல்-காலூன்றி மழையைப்பெய்வதுபோல், கால்வீசி-காற்றுவீசி, மின்னி மின்னுதல்செய்து, படர்ந்துபரவெளி எலாம் கம்மி-பரமாகாசமெங்கும் மறைத்துக் கொண்டு, ஆனந்தவெள்ளம்-இன்பப்பெருக்கை, சோராது பொழியவே-இடையறாது பொழிதற்காக, கருணையின் முழங்கி-கிருபையோடு சத்தித்து, தொண்டரை-அடியார்களை, கூவும்-அழைக்கின்ற முகிலே, மேகமே-சுத்தநிர்க்—எ-று.

தொண்டர்களை நோக்கி இரக்கத்துடன் கிருபையாகிய இடியை முழக்கி ஆனந்தமாகிய நீர்வெள்ளத்தைப் பொழியும்மேகம்போல்பவனே, சுகாதீதநிலையைக்காட்டுவதற்கு இன்னுங்காலங்கழியுமோவென இரங்கியது.

சுகாதீத நிலயம்-மேலானசுக முதிக்குமிடம்.

85. பேதித்த சமயமோ வொன்றுசொன படியொன்று
பேசாது துறவாகியே
பேசாத பெரியோர்க ளிருவிமற் பத்தினுற்
பேசார்கள் பரமகுருவாய்ப்
போதிக்கு முக்கணிறைநேர்மையாய்க் கைக்கொண்டு
போதிப்ப தாச்சறிவிலே

போக்குவர வறவின்ப நீக்கமறவசனமாப்
　　போதிப்ப தெவரையனே
சாதித்த சாதனமும் யோகியர்க ணமதென்று
　　சங்கிப்ப ராதலாலே
தன்னிலே தாஞ யயர்ந்துவிடுவோமெனத்
　　தனியிருந் திடினங்ஙனே
சோதிக்க மனமாயை தனையேவி ஞலடிமை
　　சுகமாவ தெப்படிசொலாய்
சுத்தநிர்க் குணமான பரதெய்வ மேபரஞ்
　　சோதியே சுகவாரியே.

ப-ரை. பேதித்த–சமயமோ–(ஒன்றற்கொன்று) மாறுபட்ட சமயநூல்களோ, ஒன்றுசொன்னபடி ஒன்று பேசாது-ஒன்று சொன்னபடி பிறிது ஒன்று சொல்லாது, (ஆகையால்) துறவாகி-துறவடைந்து, பேசாதபெரியோர்கள்-மௌந நிலையுநுள்ள ஞானிகள், நிருவிகற்பத்திஞல் பேசார்கள் நிருவிகற்ப சமாதியநுபவத்திஞற் பேசாதிருப்பார்கள், போதிக்கும்முக்கண் இறை–போதித்தற்குரிய மூன்றுகண்களையுடைய இறைவன், பரமகுரு ஆய்-பரமாசாரியஞகிவந்து, நேர்மை ஆ கைக்கொண்டு - செவ்வனே யென்னைத் தன் வயப்படுத்தி, அறிவில் போதிப்பது ஆச்சு-சின்முத்திரையாற் போதித்தற் குரியதாயிற்று, போக்கு வரவு அற-போதலும் வருதலு மில்லையாகவும், இன்பம் நீக்கம் அற-ஆனந்தம் இடையறு துளதாகவும், எவர்–யாவர், வசனம் ஆபோதிப்பது-சொல்லாகப் போதித்தற்குரியது,ஐயனே-கடவுளே, சாதித்த சாதனமும்-அப்பியாசித்த அப்பியாசங்களையும், யோகியர்கள்-யோகசாதனமுள்ளோர், நமது என்று சங்கிப்பர் - (இச்சாதனம்) எம்மதென்று ஆக்ஷேபிப்பர்கள், ஆதலாலே ஆன படியால், தன்னிலேதாஞய் அயர்ந்து விடுவோம் என-தன்னிற் ரூன்சோர்ந்து விடுவோமென்று, தனி இருந்திடின்-தனித்திருந்தால், அங்ஙனே-அவ்விடத்திலே, சோதிக்க – (எனது மனநிலையைப்) பரிட்சை செய்யும்பொருட்டு, மன மாயைதனை ஏவிஞல் - மனத்தின் கண் உண்டாவதாகிய மாயையை ஏவிவிட்டால், அடிமை-உன்னடிமையாகிய நான், சுகம் ஆவது-இன்ப வடிவமாவது, எப்படி-எவ்வாறு, சொலாய்-நீயே சொல்வாயாக—எ-று.

எக்காலத்தும் சமய நூல்களெல்லாம் ஒன்றற்கொன்று தவிரா விரோதமுடையன வாதலாலும், அங்ஙனமாக ஒன்றுசொன்னபடி மற்ரென்றுசொல்லா தென்பது திண்ணமாதலாலும், "பேதித்த சமயமோ ஒன்றுசொன்னபடி ஒன்றுபேசாது" எனக்கூறிஞர்.

போக்குவரவு - சாதல் பிறப்புக்கள்.

86. அண்டமுடி தன்னிலோ பகிரண்ட மதனிலோ
 வலரிமண் டலநடுவிலோ
அனனடுவி லோவமிர்த மதிநடுவி லோவன்ப
 ரகமுருகி மலர்கடுவித்
தெண்டமிட வருமூர்த்தி நிலையிலோ திக்குத்
 திகந்தத்தி லோவெளியிலோ
திகழ்விந்து நாதநிலை தன்னிலோ வேதாந்த
 சித்தாந்த நிலைதன்னிலோ
கண்டபல பொருளிலோ காணாத நிலையெனக்
 கண்டசூ னியமதனிலோ
காலமொரு மூன்றிலோ பிறவிநிலை தன்னிலோ
 கருவிகர ணங்களோய்ந்த
தொண்டர்க ளிடத்திலோ நீவீற் றிருப்பது
 தொழும்பனேற் குளவுபுகலாய்
சுத்தநிர்க் குணமான பரதெய்வமேபரஞ்
 சோதியே சுகவாரியே.

ப—ரை. அண்டமுடி தன்னிலோ - அண்டகடாகத்தின் உச்சியிலோ பகிரண்ட மதனிலோ - வெளியண்டத்திலோ, அலரிமண்டல நடுவிலோ - சூரியமண்டலத்தின் மத்தியிலோ, அனல் நடுவிலோ—அக்நிமண்டலத்தின்நடுவிலோ, அமிர்தமதி நடுவிலோ-அமிர்தத்தையுடைய சந்த்ர மண்டலத்தின் இடையிலோ, அன்பர்-அன்பர்கள், அகம் உருகி - மனமுருகி, மலர்கள் தூவி-மலர்களானருச்சித்து, தெண்டமிட வரும்-நமஸ்கரிக்க வெழுந்தருளிய, மூர்த்தி நிலையிலோ - அர்ச்சை நிலையிலோ, திக்குத்திகந்தத்திலோ - திக்கினும் திக்கின் முடிவிலுமோ,வெளியிலோ-(பர) வெளியிலோ,திகழ்-பிரகாசிக்கின்ற, விந்துநாத நிலை தன்னிலோ-விந்து நாதங்களின் நிலையிலோ, வேதாந்த சித்தாந்த நிலைதன்னிலோ - வேதாந்த சித்தாந்த நிலைகளிலோ, கண்ட பலபொருளிலோ - காணப்படாத நிலையென (அறிஞரால்) துணியப்பட்ட, சூனிய மதனிலோ - பாழிலோ, காலம் ஒருமூன்றிலோ, முக்காலத்திலோ பிறவிநிலைதன்னிலோ-ஜன்மநிலையிலோ, கருவிகரணங்கள் ஒய்ந்த - கருவிகரணங்கள் நசிந்தொடுங்கப் பெற்ற, தொண்டர்க ளிடத்திலோ - அடியார்க ளிடத்திலோ, நீ வீற்றிருப்பது - நீ எழுந்தருளி யிருப்பது, தொழும்பனேற்கு - உன் தொண்டனாகிய எனக்கு, உளவுபுகலாய் - யதார்த்தத்தைச் சொல்வாயாக, சுத்த நிர்க். எ—று.

முக்காலம்-இறப்பு-நிகழ்வு-எதிர்வு என்பன.

அர்ச்சை-கல்—மரம் - மண்முதலியவற்றாற் செய்யப்பட்ட விக்ரஹங்கள். அண்டமுடி முதலிய பலவிடங்களில் நீவீற்றிருப்பது எவ்விடம்என்று நீயேயருளிச்செயல்வேண்டும் என்பது. (கo)

87. எந்தநாள் கருணைக் குரித்தாகு நாளெனவு
மென்னிதய மெனைவாட்டுதே
ஏதென்று சொல்லுவேன் முன்னொடுபின் மலைவறவு
மிற்றைவரை யாதுபெற்றேன்
பந்தமா னதிலிட்ட மெழுகாகி யுள்ளம்
பதைத்துப் பதைத்துருகவோ
பரம்சுக மாவது பொறுப்பரிய துயரமாய்ப்
பலகாலு மூர்ச்சிப்பதோ
சிந்தையா னதுமறிவை யென்னறிவி லறிவான
தெய்வநீ யன்றியுளதோ
தேகநிலை யல்லவே யுடைகப்பல் கப்பலாய்த்
திரையாழி யூடுசெலுமோ
சொந்தமா யாண்டநீ யறியார்கள் போலவே
துன்பத்தி லாழ்த்தன்முறையோ
சுத்தநிர்க் குணமான பரதெய்வ மேபரஞ்
சோதியே சுகவாரியே.

ப-ரை. கருணைக் குரித்து ஆகும்நாள் - உன்கிருபைக் கிலக்காதற்குரிய நாள், எந்தநாள் எனவும் - எந்தநாளோ வென்றும், என் இதயம் என்னை வாட்டுதே - என் இருதயமானது என்னை வாட்டாநின்றதே ஏதென்று சொல்லுவேன் - யாதென்று சொல்லமாட்டுவேன், முன்னொடுபின் மலைவு அறவும்—முன்னுக்கும் பின்னுக்கும் விரோதம் நேரிடாதிருக்கவும், இற்றைவரையாது பெற்றேன் - இந்நாளளவும் எந்த நிலையை யடைந்தேன், பந்தமானதில் இட்ட—பாசபந்தத்தில் வைத்த, மெழுகு ஆகி - மெழுகுபோலுருகி, உள்ளம் பதைத்து பதைத்து உருகவோ - மனம் பதைத்துப்பதைத் துருகினலோ, பரமசுகம் ஆவது - பேரானந்தம் தோன்றுவது, (அன்றி) பொறுப்பரியதுயரமாய்—பொறுத்தற்கரிய துன்பமுற்று, பலகாலு மூர்ச்சிப்பதோ - பலதரமும் மூர்ச்சித்துக் கிடப்பதோ (அந்த பரமசுகத்துக்குஹேது,) சிந்தையானதும் அறிவை - என் கருத் திவ்வாறிருப்பதையு மறிவாய், என்அறிவில் அறிவான தெய்வம் - என்னறிவி லறிவாயிருக்கிற தெய்வம், நீ அன்றி உளதோ—நீயல்லது பிறிதொன்றுண்டோ, தேகம் நிலைஅல்லவே - சரீரம் அழிந்துவிடுமே, உடை கப்பல் உடைந்த கப்பலானது, கப்பல்ஆய் - (பழையபடி) நல்ல கப்பலாகி, திரை-அலைகளையுடைய, ஆழி யூடுசெலுமோ — கடலில் (மீண்டும்) நடக்குமோ, சொந்தமாய் ஆண்டநீ - சுதந்தரமாகவந்து என்னையாண்டருளினநீ, அறியார்கள்போலவே - (ஒன்றும்) தெரியாதவர்கள் போலவே, துன்பத்தில் ஆழ்த்தல் முறையோ - (என்னை) துக்கசாகரத்தில் அமிழ்த்துதல் உனக்கு நியாய மாகுமோ, சுத்தநிர்க்குணமான—எ-று.

பந்தத்தை நெருப்பாக வுவமித்து "பந்தமான திலிட்ட மெழுகாகி" என்ருர். எல்லாவற்றையுமறிந்து எல்லாவல்லமையுமுடைய நீயிப்படிசெய்தல் தகுதியன் றென்பர் "அறியார்கள் போலவே துன்பத்தி வாழ்த்தல் முறையோ" என்ருர்.

88. எந்நாளு முடலிலே யுயிரா முனைப்போ
விருக்கவிலையோ மனமெனும்
யானுமென் னட்பாம் பிராணனு மெமைச்சடம
தென்றுனைச் சித்தென்றுமே
அந்நாளி லெவனே பிரித்தா னதைக்கேட்ட
வன்றுமுத லின்றுவரையும்
அநியாய மாயெமை யடக்கிக் குறுக்கே
யடர்ந்தரசு பண்ணியெங்கண்
முன்னுக நீயென்ன சோட்டைகொண் டாயென்று
மூடமான மிகவுமேச.
மூண்டெரியு மனலிட்ட மெழுகா யுளங்கருகன்
முறைமையோ பதினுயிரஞ்
சொன்னுலு நின்னரு ளிரங்கவிலை யேயினிச்
சுகம்வருவ தெப்படிசொலாய்
சுத்தநிர்க் குணமான பரதெய்வ மேபரஞ்
சோதியே சுகவாரியே.

ப - ரை. எந்நாளும் - எக்காலத்திலும், உடலிலே உயிர் ஆம் உனைப்போல் உடம்பினுள் உயிராயிருக்கிற வுன்னைப்போல, மனம் என்னும் யானும்–மனமென்கிற நானும், என் நட்பு ஆம் பிராணனும் - என்நேசனுகிய பிராணனும், இருக்கவிலையோ - சரீரத்தி லிருக்கவில்லையோ, (அப்படியிருக்க எம்மைசடமதென்று - எங்களைச்சடமென்றும், உன்னைச்சித்து என்றும் உன்னைச்சித்தென்றும், அந்நாளில் எவனேபிரித்தான் - அக்காலத்தில் எவனேபிரித்துவைத்தான், அதைக்கேட்ட அன்றுமுதல் இன்றுவரையும் - அதைக்கேட்டநிந்த அன்றுமுதல் இன்றுவரைக்கும், அநியாயமாய் எமை அடக்கி-அநியாயமாயெங்களை யொடுக்கி, குறுக்கே அடர்ந்து அரசுபண்ணி - குறுக்மேவந்து நெருங்கி அரசுரிமை நடத்தி, எம் கண்முன்னுக - எங்கள் கண்ணுக்குநேராக, நீ என்னசோட்டை கொண்டாய் என்று - நீ எந்தசோட்டையைக் கைப்பற்றினுயென்று, மூடமனம் மிகவும் ஏச - மூடமனமானது மிகவும் வைதலால், மூண்டு எரியும் அனல் இட்டமெழுகு ஆய்–மூண்டெரியாநின்றநெருப்பிலிட்டமெழுகுபோலவுருகி, உள்ளம் கருகல் முறைமையோ - நான் உள்ளுக்குள்ளே நைதல் நியாயமாமோ, பதினுயிரம்சொன்னுலும் - பதினுயிரந்தரம்முறையிட்டுக்கொண்டாலும், நின் அருள் இரங்க இலையே - உன் திருவருளிரங்கவி

லையே, இனி சுகம்வருவது எப்படி - இனியெனக்கு இன்பமுண்டாவது எவ்வண்ணம், சொல்லாய் - கூறாய், சுத்தநிர்க்குணமான, எ - று.

சித்து - அறிவு. உயிர் - ஆன்மா. மனமானது—ஆன்மாவே. எக்காலத்தும் உடலிலே உயிராயிருக்கின்ற உன்னைப்போல, நானும் எனக்கு நட்பாகிய பிராணவாயும் இருக்கவில்லையோ, அப்படியிருக்க, எங்களைச் சடப்பொருள்களென்றும், உன்னைச் சித்துப்பொருளென்றும், எவனோ பிரித்துவிட்டான் அதைக்கேட்ட நீ, எங்களையடக்கி யாண்டறனல் எந்தக் கோட்டையைக் கைப்பற்றினையென்று வையக்கேட்டு நான் உள்ளேதானே புழுங்கிக்கொண்டிருத்தல் முறைமையாகுமோ என்று ஆன்மா கடவுளைப் பிரார்த்தித்ததாக இச்செய்யுள் கூறப்பட்டது. (கஉ)

## எங்குநிறைகின்றபொருள்

89. அவனன்றி யோரணுவு மசையா தெனும்பெரிய
வாப்தர்மொழி யொன்றுகண்டால்
அறிவாவ தேதுசில வறியாமை யேதிவை
யறிந்தார்க ளறியார்களார்
மௌனமொ டிருந்ததா ரென்போ லுடம்பெலாம்
வாயாய்ப் பிதற்றுமவரார்
மனதெனவு மொருமாயை யெங்கே யிருந்துவரும்
வன்மையோ டிரக்கமெங்கே
புவனம் படைப்பதென் கர்த்தவிய மெவ்விடம்
பூதபேதக்க ளெவிடம்
பொய்மெயித மகிதமேல் வருநன்மை தீமையொடு
பொறைபொறு மையுமெவ்விடம்
எவர்சிறிய ரெவர்பெரிய ரெவருறவ ரெவர்பகைஞர்
யாதுமுனை யன்றியுண்டோ
இகபர மிரண்டினிலு முயிரினுக் குயிராகி
யெங்குநிறை கின்றபொருளே,

ப - ரை அவன் அன்றி - அந்தக்கடவுளாலன்றி, ஓர் அணுவும் அசையாது என்னும் - ஓர் அணுவேனும் அசையாதென்று சொல்லுகிற, பெரிய ஆப்தர், மொழி ஒன்று கண்டால் - பெரியோர்களாகிய ஆப்தரது வாக்ய மென்றன் சாரத்தை யாராய்ந்து பார்த்தால் அறிவு ஆவது எது - அறிவாவது எது, சில அறியாமை எது - சில அறியாமையாவது யாது, இவை - இவற்றை, அறிந்தார்கள் அறியார்கள் யார் - அறிந்தவரும் அறியாதவரும் யாவர், மௌனமொடு இருந்தது ஆர் - மௌனநிலையோ டிருந்தவர் யாவர், என்போல் - என்னைப்போல, உடம்பெலாம் வாய் ஆய் - தேகமுழுவதும் வாயாகக்கொண்டு பிதற்றுமவர் ஆர் - உளறுவோர் யாவர், மனது எனவும் ஒருமாயை எங்கேயி

ருந்துவரும் - மனமென்னும் ஒரு மாயையானது எவ்விடத்தினின்று உண்டாகும், வன்மையொடு இரக்கம் எங்கே - வன்மைத்தனத்துடன் இரக்கத்தனமெங்கே, புவனம் படைப்பது என் - லோகங்களைச் சிருஷ்டிப்பதாவதுயாது, கர்த்தவியம் எவ்விடம் - கர்த்தவ்யம் எவ்விடத்தினின் றுண்டாவது, பூதபேதங்கள் எவ்விடம் - பூதவிகற்பங்கள் எவ்விடத்தி லுண்டாவது, பொய்மெய் - அசத்யசத்யங்களும், இதம அகிதம்-அநுகூலப்ரதிகூலங்களும், மேல்-மேலும், வரும் - உண்டாகின்ற, நன்மைதீமையொடு - நன்மை தீமைகளுடன், பொறை பொருமையும் எவ்விடம் - பொறுமை பொறுக்காமைகளும் எவ்விடத்தி லுண்டாவன, எவர் சிறியர் - யாவர் சிறியார், எவர்பெரியர்-யாவர் பெரியார், எவர் உறவர் - யாவர் உறவினர், எவர்பகைஞர் - யாவர்ப்பகைவர் யாதும் உன்னையன்றி யுண்டோ - யாதும் உன்னையன்றிப் பிறிதுண்டோ, இகபரம் இரண்டினிலும் - இம்மைமறுமை என்னும் இரண்டிடத்தும், உயிரினுக்கு உயிர் ஆகி - உயிர்க்குயிராகி, எங்கும் நிறைகின்ற பொருளே - எவ்விடத்தும் நிறைந்திருக்கின்ற வஸ்துவே, எ-று.

ஆப்தர் - கடவுளருட் குரியவர். கர்த்தவியம்-செய்கை. "அவனன்றியோரணுவு மசையாது" என்று பெரியோர் வாக்கியம் உண்மையால் யாவும் அவன்செயலே என்பது கருத்து. இச்செய்யுளின் கருத்தை.

"ஆர்பெரிய ரார்சிறிய ராருறவ ரார்பகைஞர்
சீர்பெரிய ரானந்த சிற்சொருபர்—ஏர்பெரியர்
எங்கெங்குந் தாமே யிருந்துசட் சித்தனைத்து
மங்கங் கியற்றுவத ளுல்"—என்னும் மேலோர் வாக்கானறிக. (க)

90. அன்னை யனையெனுஞ் சிலசமய நின்னையே
ஐயா வையாவென்னவே
அலறிடுஞ் சிலசமய மல்லாது பேய்போல
வலறியே யொன்றுமிலவாப்
பின்னேது மறியாம லொன்றைவிட் டொன்றைப்
பிதற்றிடுஞ் சிலசமயமேல்
பேசரிய வொளியென்றும் வெளியென்று நாதாதி
பிறவுமே நிலயமென்றும்
தன்னை ரிலாததோ ரணுவென்று மூவிதத்
தன்மையாங் காலமென்றும்
சாற்றிடுஞ் சிலசமய மிவையாகி வேறதாய்ச்
சதாஞான வானந்தமாய்
என்னையே னைகருணை விளையாட் டிருந்தவா
றெம்மனோர் புகலவெளிதோ
இகபர மிரண்டினிலு முயிரினிக் குயிராகி
யெங்குநிறை கின்றபொருளே.

ப - ரை. சில சமயம் - சிலசமயங்கள், நின்னையே-உன்னையே, அன்னே அன்னே யென்னும் - தாயே தாயே என்றுகூறும், சிலசமயம் - சிலசமயங்கள், ஐயா ஐயா என்ன - தந்தையே தந்தையே என்றுகூறி, அலறிடும் அலறாநிற்கும், அல்லாது, அவ்வாறன்றி, சில சமயம் - (வேறு) சில சமயங்கள், பேய்போல அலறி - பிசாசுபோலக்கதறி, ஒன்றும் இலவாய் — சிறிதும் பயனற்றனவாய், பின் ஏதும் அறியாமல் - பின் விளைவதொன்றையு முணராமல், ஒன்றைவிட்டு ஒன்றை பிதற்றிடும் - ஒன்றைவிட்டுப் பிறிதொன்றை உளறாநிற்கும், சில சமயம் - சில சமயங்கள், மேல்—மேலும், பேசு அரிய ஒளி என்றும் - சொல்லுதற்கரிய, வொளியென்றும் வெளி என்றும் - ஆகாயமென்றும், நாதாதி பிறவுமே நிலயம் என்றும் - நாதம் முதலான பிறவற்றையே நிலைகளென்றும், தன் நேர் இலாதது ஓர் அணு என்றும் - (நுட்பத்தால்) தனக்குச் சமானமில்லாததாகிய ஒரு அணுமாத்திரமென்றும், மூவிதத்தன்மை ஆம் காலம் என்றும் - முக்காலமென்றும், சாற்றிடும் - சொல்லாநிற்கும், இவை ஆகி - இவைகளாகி, வேறது, ஆய் (இவற்றின்) பிறிதாகி, சதாஞான ஆனந்தமாய் - சதாஞான சுகமாகி, கருணைவிளையாட்டு இருந்தவாறு - திருவருள் விளையாடல் இருந்தவகை, என்னே என்னே—என்ன ஆச்சரியம் என்ன ஆச்சரியம், எம்மனோர்புகல எளிதோ - (அதை) எம்மையொத்தவர்சொல்ல எளிதாகுமோ, இகபரமிரண்டினிலும். எ—று.

சமயகோடிகள் பலவாறு புலம்பாநிற்கும். உன்திருவருள் விளையாடல் இவ்வண்ணமென எங்களையொத்தவர் சொல்ல எளிதாமோ. என்பதுகருத்து.

91. வேதமுட னாகம புராணமிதி காசமுதல்
வேறுமுள கலைகளெல்லாம்
மிக்காக வத்துவித துவிதமார்க் கதையே
விரிவா வெடுத்துரைக்கும்
ஓதரிய துவிதமே யத்துவித ஞானத்தை
யுண்டுப ணு ஞானமாகும்
ஊகமனு பவம்வசன மூன்றுக்கு மொவ்வுமீ
துபயவா திகள்சம்மதம்
ஆதலி னெனக்கினிச் சரியையா திகள்போதும்
யாதொன்று பாவிக்கநான்
அதுவாத லாலுன்னை நானென்று பாவிக்கி
னத்துவித மார்க்கமுறலாம்
ஏதுபா விடித்திடினு மதுவாகி வந்தருள்செ
யெந்தைநீ குறையுமுண்டோ
இகபா மிரண்டினிலு முயிரினுக் குயிராகி
யெங்குநிறை கின்றபொருளே.

ப-ரை. வேதமுடன் - வேதங்களுடன், ஆகமபுராணம் இதிகாச முதல்-ஆகமபுராண இதிகாசம் முதலாக, வேறும் உள்ள கலைகள் எல்லாம் - மற்றுமுள்ள நூல்கள்யாவும், மிக்காக—மிகுதியாக, அத்துவித துவிதமார்க்கத்தையே-அத்வைதத்வைத மார்க்கங்களையே, விரிவு ஆ எடுத்து உரைக்கும் - விஸ்தாரமாயெடுத்துக் கூறுநிற்கும், ஓதுஅரிய—சொல்லற்கரிய, துவிதமே—த்வைதஞானமே, அத்துவித ஞானத்தை - அத்வைத ஞானத்தை, உண்டுபண்ணும் ஞானம்ஆகும் - உண்டாக்குகின்ற ஞானமாகும்—ஈது-இவ்வார்த்தை, ஊகம் யுக்தி, அனுபவம்-சுவாநுபவம், வசனம்-சுருதி, மூன்றுக்கும் ஒவ்வும் - (ஆகிய) மூன்றற்கும் - ஒத்திருக்கும், (அன்றியும்) உபயவாதிகள் சம்மதம் ஆதலின் - இருதரத்தார்க்கும் ஒப்புஆகையால், இனிஎனக்கு - இனிமேல் எனக்கு, சரியைஆதிகள்போதும் - சரியா பாத முதலியவைகளே யாமையும், நான் யாதொன்று பாவிக்க - நான் யாதொரு பொருளைப் பாவிக்கவும், அது ஆதலால்—அப்பொருளே யாய்விடுதலால், உன்னை நான் என்று பாவிக்கின்-உன்னை நானென்று பாவனை செய்தால், அத்து விதமார்க்கம் உறலாம் - அத்துவித வழியை யடையலாம் நீ-நீ, எது பாவித்திடினும் - எப்பொருளாகப் பாவித்தாலும், அதுஆகி வந்து - அப்பொருளாகி வந்து, அருள்செய் — கிருபைசெய்கின்ற, எந்தை—எந்தையாதலால், குறையும் உண்டோ - (உன்னையடைந்த எனக்கு) ஓர்குறைபாடுமுளதோ, இகபரமிரண்டினிலு—எ—று.

வேதம் இருக்கு முதலிய நான்கு, ஆகமம் - காமிகம் - முதலிய இருபத்தெட்டு. புராணம் - மச்சியம் முதலியபதினெட்டு. இதிகாசம் பாரதம் இராமாயணம்என்பன. வேறுமுளகலைகள்-ஸ்மிருதி முதலியன, ஊகம் அநுபவம் வசனம் இம்மூன்றும் சுருதி குரு சிவாநுபவம் என்று கூறுவர், உபய வாதிகள்-அத்துவித துவிதமார்க்கத்தார். சரியை, யாதிகள் - சரியைகிரியை, யோகம், ஞானம் என்னும் நான்கு. (௩)

92. சொல்லா னதிற்சற்றும் வாராத பிள்ளையைத்
தொட்டில்வைத் தாட்டியாட்டித்
தொடையினைக் கிள்ளற்போற் சங்கற்ப மொன்றிற்
றொடுக்குந் தொடுத்தழிக்கும்
பொல்லாத வாதனை யெனுஞ்சத்த பூமியிடை
போந்துதலை சுற்றியாடும்
புருஷனி லடங்காத பூவைபோற் றானே
புறம்போந்து சஞ்சரிக்கும்
கல்லோ டிரும்புக்கு மிகவன்மை காட்டிடுங்
காணாது கேட்டவெல்லாம்
கண்டதாக் காட்டியே யணுவாச் சுருக்கிடுங்
கபட நாடக சாலமோ

எல்லாமும் வலதிந்த மனமாயை யேழையா
மென்று லடக்கவசமோ
இகபர மிரண்டினிலு முயிரினுக் குயிர கி
யெங்கு நிறைகின்ற பொருளே.

ப-ரை. சொல்லானதில் - சொல்லினால், சற்றும்வாராத பிள்ளையை-சிறிதும்வழிபட்டு வாராதகுழந்தையை, (தாயானவள்) தொட்டில் வைத்து ஆட்டி ஆட்டி-தொட்டிலில் இட்டு அசைத்தசைத்து, தொடையினைக் கிள்ளல்போல் தொடையைக் கிள்ளுதல்போல, ஒன்றில் சங்கற்பம் தொடுக்கும் - ஒன்றில் நினைப்பை யுண்டாக்கும், தொடுத்து அழிக்கும் - உண்டாக்கி யழிக்கும், பொல்லாத வாதனை என்னும்–பொல்லாத வாதனையென்று சொல்லப்படுகிற, சப்த பூமியிடைபோந்து - அஞ்ஞான பூமிகளேழிணில்வந்து, தலைசுற்றிஆடும்–தலை சுழற்றி யாடாநிற்கும், புருஷனில் அடங்காதபூவைபோல், நாயகனிடத் தடங்கிவாழாத பெண்போல, தானே புறம்போந்து சஞ்சரிக்கும். தானே வெளிவந்து உலவாநிற்கும், கல்லொடு இரும்புக்குமிக வன்மைகாட்டும் - கல்லுக்கும் இரும்புக்கும் மிக்கவன்மையைக் கற்பிக்கும், காணுதுகேட்ட எல்லாம்-காணுமல் கேட்டவற்றை எல்லாம், கண்டதாக்காட்டி - தான் பார்த்ததாகக் காட்டி, அணுவாச் சுருக்கிடும் - அணுவாகச் சுருக்கிவிடும். கபட நாடக சாலம் எல்லாமும் வல்லது, கபடநாடக ஜாலங்க ளெல்லா வற்றையும் நடத்திக் காட்ட வல்லது, இந்த மனமாயை - (ஆதலால்) இந்த மனமாயை யானது. ஏழை ஆம்என்னல் - எளியனுகிய என்னல், அடக்க-வென்றடக்க, வசமோ–வசமாகுமோ, இகபரமிரண்டினிலு—எ-று.

விந்துசாக்கிரம், பேற்சாக்கிரம், மகாசாக்கிரம், சாக்கிரசொப்பநம், சொப்பநம், சொப்பனசாக்கிரம், சுழுத்தி, என்பவை அஞ்ஞான பூமிகள் ஏழு, பூவை உவமை யாகுபெயர். இதுமொழியார் பூவைபோல் வாளொன்னும் பொருடறுவது, பூவை-நாகணவாய்ப்புள். மனமாயையயானது ஒன்றைப் பற்றுதல் விடுதல்முதலிய எல்லா வற்றையுஞ்செய்ய வல்லதாதலின் அதனையடக்க என்னுலாகுமோ திருவருட்சகாயம் வேண்டுமென்பது கருத்து. (ச)

93. கண்ணூர நீர்மல்கி யுள்ளநெக் குருகாத
கள்ளனே னுனுமோ
கைகுவித் தாடியும் பாடியும் விடாமலே
கண்பனித் தாரைகாட்டி
அண்ணு பரஞ்சோதி யப்பா வுனக்கடிமை
யானெனவு மேலெழுந்த
அன்பாகி நாடக நடித்ததோ குறைவில்லை
யகிலமுஞ் சிறிதறியுமேல்

தண்ணாரு நின்னதரு ளறியாத தல்லவே
சற்றேனு மினிதிரங்கிச்
சாசுவத முத்திநிலை யீதென் றுணர்த்தியே
சகசநிலை தந்துவேறொன்
றெண்ணாம லுள்ளபடி சுகமா யிருக்கவே
யேழையேற் கருள்செய்கண்டாய்
இகபர மிரண்டினிலு முயிரினுக் குயிராகி
யெங்குநிறை கின்றபொருளே.

ப-ரை. கண் ஆர நீர் மல்கி - கண்கள் நிறைய நீர் ததும்பி, உள்ளம் நெக்கு உருகாத - மனங்கரைந் துருகாத, கள்ளனேன் ஆனாலும்-திருடனே யானாலும், கைகுவித்து-கைகூப்பி, ஆடியும் பாடியும்-ஆடல் பாடல்களைச் செய்தும் விடாமல், நீங்காமல், கண் பனித்தாரை காட்டி-கண்களில் குளிர்ச்சியாகிய நீரொழுக்கையுண்டாகி, அண்ணா-அண்ணா, பரஞ்சோதி - பரஞ்சோதியே, அப்பா - அப்பனே, யான் உனக்கு அடிமை யெனவும்-நான் உனக்கு அடிமை யென்றும், மேல் எழுந்த அன்பாக—அதிகப்பட்ட அன்பையுடையவனாகி, நாடகம் நடித்ததோ குறைவு இல்லை — கூத்தாடினதோ குறைவில்லை, (அதனை) அகிலமும் சிறிது அறியும் எல் — உலகமுஞ் சற்று அறியும் ஆமின், தண் ஆரும் நின்னது அருள் அறியாதது அல்லவே - குளிர்ச்சி பொருந்திய உன்திருவருள் தெரியாததல்லவே, சற்றேனும் — சிறிதாயினும், இனிது இரங்கி - இனிதாயிரங்கி, சாசுவதமுத்தி நிலை ஈது என்று உணர்த்தி-அழியாத முத்திநிலையிதுவென்று தெரிவித்து, சகசநிலை தந்து-சகச நிலையைக்கொடுத்து, வேறு ஒன்று எண்ணாமல்-பிறிதொன்றை நினையாமல், உள்ளபடி—யதார்த்தமாய், சுகமாய் இருக்க - இன்பமாயிருக்கும் வகை, ஏழையேற்கு அருள்செய்-ஏழையாகிய அடியேனுக் கருள்புரிவாய், இகபர மிரண்டினிலு, எ-று.

கண்ணார நீர்மல்கி உள்ளம் நெக்கு யதார்த்தமாக உருகாவிடினும் புறத்துக்காயினும் கைகுவித்தாடல் பாடல் முதலியவை செய்தேனல்லவா, அதற்காகவாயினும் சுகமாயிருக்க அருள் செய்யவேண்டு மென்றாராயிற்று. ஏழை-அறிவிலி, ஈண்டு ஏழையாதலால் யதார்த்தமாக அன்பு செய்திலனெனப் பொருள்படக் கூறினர். (ரு)

94. காகமா னதுகோடி கூடிநின்றாலுமொரு
கல்லின்முன் னெதிர்நிற்குமோ
கர்மமா னதுகோடி முன்னேசெய்தாலுநின்
கருணைப்ர வாகவருளைத்
தாகமாய் நாடினரை வாதிக்க வல்லவோ
தமியனேற் கருட்டாகமோ

சற்றுமிலை யென்பதுவும் வெளியாச்சு வினையெலாஞ்
சங்கேத மாய்க்கூடியே
தேகமா னதைமிகவும் வாட்டுதே துன்பங்கள்
சேராமல் யோகமார்க்க
சித்தியோ வரவில்லை சகசநிஷ் டைக்குமென்
சிந்தைக்கும் வெகுதூரநான்
ஏகமாய் நின்னோ டிருக்குநா ளெந்தநா
ளிந்நாளின் முற்றுறுதோ
இகபர மிரண்டினிலு முயிரினுக் குயிராகி
யெங்குநிறை கின்றபொருளே.

ப-ரை. காகமானது கோடி கூடி நின்றாலும் - எண்ணிறந்த காகங்கள் சேர்ந்து திரண்டாலும், ஒரு கல்லின்முன் எதிர் நிற்குமோ - ஒருகல்லுக்குமுன்னே எதிர்த்து நிற்க வல்லவையாமோ, (ஆக, அதுபோல) முன்னே கோடி கர்மம் ஆனது செய்தாலும் - பூர்வத்தில் எண்ணிறந்த தீவினைகளைச் செய்திருந்தாலும், (அவை நின் கருணைப்ரவாக அருளை-உன் கிருபாவெள்ள ரூமான திருவருளை, தாகமாய் நாடினரை-(மோக்ஷ) தாகத்தோடு விரும் பினவர்களை, வாதிக்கவல்லவோ-வருத்த வல்லனவோ, தமியனேற்கு-தனி யேனுக்கு, அருள்தாகம்-திருவருள்மேல் விருப்பம், சற்றும் இல்லை என்பதுவும் – சிறிதுமில்லை யென்னுஞ் செய்தியும், வெளி ஆச்சு – விளம்பரமாய் விட்டது, வினை எல்லாம் சங்கேதமாய்க் கூடி - வினைக ளெல்லாம் கட்டுப் பாடாகச்சேர்ந்துவந்து, தேகமானதை மிகவும்வாட்டுதே - சரீரத்தைமிகவும் வருத்து கின்றதே, துன்பங்கள் சேராமல் – துக்கங்கள் வந்து சம்பவிக்காமல், யோகமார்க்க சித்தியோவர வில்லை - யோக நெறிச்சித்தியோ கைகூடவில்லை, சகச நிஷ்டைக்கும் என்சிந்தைக்கும் வெகுதூரம் - சகசநிஷ்டைக்கும் என்மனத்துக்கும் நெடுந்தூரம், நான்-அடியேன், நின்னோடு ஏகமாய் இருக்கும் நாள் - எந்தக்காலமோ, (அது) இந்நாளில் முற்றுறுதோ-இந்தக் காலத்தில் முடிவெய்தாதோ-இகபரமிரண்டிலும், எ-று.

தாகம்-மிகுவிருப்பம். சங்கேதம்-குழூக்குறி அதாவது ஒரு கூட்டத்தார் யாதானுமொரு காரணத்தால் ஒன்றற்குரிய இயற்பெயரை யொழித்துத் தமது கூட்டத்தாருக்கு மட்டும் மறைபொருளாக விளங்கும்படி ஏற்படுத்திய பிறிதொரு சொல்லால் அப்பொருளைக் கூறுவது. துன்பங்கள் சேராமல் யோகமார்க்க சித்தியோவர வில்லை யென்ற தனால், துன்பங்க ளணுகாமைக்குக்காரணம் யோகமார்க்க சித்தி யென்ற தாயிற்று. சகசநிஷ்டை - சதாநிஷ்டை.

95. ஒருமைமன தாகியே யல்லலற நின்னருளி
லொருவனுன் வந்திருக்கின்
உலகம்பொறுததோ மாயாவிசித்ரமென
வோயுமோ விடமில்லையோ

அருளுடைய நின்னன்பர் சங்கைசெய் திடுவரோ
வலதுகிர்த் தியகர்த்தராய்
அகிலம் படைத்தெம்மை யாள்கின்ற பேர்சில
ரடாதென்ப ரோவகன்ற
பெருமைபெறு பூரணங் குறையுமோ பூதங்கள்
பேய்க்கோல மாய்விதண்டை
பேசுமோ வலதுதான் பரிபாக காலம்
பிறக்கவிலை யோதொல்லையாம்
இருமைசெறி சடவினை யெதிர்த்துவாய் பேசுமோ
வேதுளவு சிறிதுபுகலாய்
இகபர மிரண்டினு முயிரினிக் குயிராகி
யெங்குநிறை கின்றபொருளே.

ப-ரை. நான் ஒருவன் - நானொருவனும், அல்லல் அற – துன்ப மொழியும்படி, ஒருமை மனது ஆகி-ஒருவழிப்பட்ட மனமுடையவனாய், நின் அருளில் வந்திருக்கின் – உன்திருவருள் வழியில் வந்திருந்தால், (அவ்விருத்தல்) உலகம்பொறுதோ - உயர்ந்தோரால் மனம்பொறுக்கப் படாததோ, மாயாவிசித்ரம் - மாயாவிசித்ரமானது, என்ன ஓயுமோ-என்ன ஓய்ந்து போமோ இடம் இல்லையோ – (அதற்கு என்னையன்றி) பிறிது இடமில்லையோ, அருள் உடைய நின் அன்பர் – உன்திருவருள்பெற்ற அன்பர்கள், சங்கைசெய்திடுவரோ-(அதை) தடைசெய்வரோ, அலது–அன்று கிர்த்தியகர்த்தராய் - (சிருட்டி திதி சங்காரமாகிய) முத்தொழிற் கிறைவராகி, அகிலம் படைத்து - உலகத்தைப் படைத்து, எம்மை ஆள்கின்றபேர்சிலர்-எம்மைக் காப்பவரா கியசில பேர், அடாது என்பரோ - இது தகாதென்பார்களோ, அகன்ற பெருமைபெறுபூரணம் குறையுமோ–விசாலித்த பெருமையைக் கொண்ட உன்பரி பூரண நிலையானது (அதனால்) குறைந்துபோமோ, பூதங்கள் பேய்கோலம் ஆய்-பூதங்கள் பேய்வடிவுகொண்டு, விதண்டை பேசுமோ-விதண்டாவாதம் பேசுமோ அலதுதான் பரிபாககாலம் பிறக்க இல்லையோ–அன்றிப் பரிபக்குவகாலமானது (எனக்கு) உண்டாகவில்லையோ, தொல்லை ஆம்-பழமையாகிய, இருமைசெறி-இரண்டென்னு மிலக்கத்தைப் பொருந்திய, சடவினை-அறிவில்லாத இருவினைகள், எதிர்த்து வாய்பேசுமோ-எதிரிட்டு வாய்பேசா நிற்குமோ, உளவு எது - யதார்த்தமேது, சிறிதுபுகலாய் - சற்றுக் கூறுவாய், இகபர மிரண்டிலும், எ-று.

உலகம் என்பது உயர்ந்தோர்களை யுணர்த்தி நின்றது.

கிர்த்திய கர்த்தர் - பிரமாதிகள். விதண்டை-தர்க்க பேதத்துள் ஒன்று, என்னை உன் திருவருளுக் கிலக்காக்கினால், அபக்குவியாகிய என்னிலையைநோக்கி உன்னன்பர் முதலாயினோர் ஆக்ஷேபிப்பார்களோ, யாதுக்கு நீ யென்னை யாண்டருளா திருக்கின்றனை யென்பது கருத்து.

96. நில்லாது தேகமெனு நினைவுண்டு தேகநிலை
நின்றிடவு மௌனியாகி
நேரே யுபாயமொன் றருளினையை யோ விதனை
நின்றனுட் டிக்கவென்றால்
கல்லாத மனமோ வொடுங்கியுப ரதிபெறக்
காணவிலை யாகையாலே
கையேற்று ணும்புசிப் பொவ்வாதே நாளுமுன்
காட்சியி லிருந்துகொண்டு
வல்லாள ராயியம நியமாதி மேற்கொண்ட
மாதவற் கேவல்செய்து
மனதின் படிக்கெலாஞ் சித்திபெறலாஞானம்
வாய்க்குமொரு மனுவெனக்கிங்
கில்லாமை யொன்றினையு மில்லாமை யாக்கவே
யிப்போ திரங்குகண்டாய்
இகபர மிரண்டினிலு முயிரினுக் குயிராகி
யெங்குநிறை கின்றபொருளே.

ப-ரை. தேகம் நில்லாது என்னும் நினைவு உண்டு - இந்தவுடல் நிலைத்திராது என்கிற எண்ணமுண்டு, தேகம் நிலைநின்றிடவும் - (அப்படி நிலையில்லாத) உடலானது நிலைத்திருக்கும்படியாகவும், மௌனி ஆகி-மௌன குருவாகிவந்து, நேர் உபாயம் ஒன்று அருளினை-நேரான தந்திரமொன்றையருள்செய்தாய், ஐயோ-அந்தோ, இதனை - இவ்வுபாயத்தை, நின்று அநுட்டிக்க என்றால்-நிலைநின்று ஆச்சிரயிக்கலாமென்றால், கல்லாத மனமோ ஒடுங்கி உபரதி பெறக்காணவில்லை கல்வியறிவில்லாதமனமோ ஒடுங்கி உபரதி யடையப்பார்க்கவில்லை, ஆகையாலே-ஆனதாலே, கையேற்று உண்ணும் புசிப்பு ஒவ்வாது-கையால் யாசித்துண்ணு முணவு ஒத்திராது, எந்நாளும் எக்காலத்திலும், உன்காட்சியில் இருந்துகொண்டு-உன் சந்நிதியி லிருந்துகொண்டு, வல்லாளராய்-மனோதைரிய முடையவர்களாய், இயமநியமாதி மேற்கொண்ட - இயமநியமாதி (யோகங்) களைச்செய்யத் தொடங்கின, மாதவர்க்கு-பெருந்தவத்தினருக்கு, ஏவல்செய்து - பணிவிடைபுரிந்து, மனதின்படிக்கு எல்லாம்-எண்ணத்தின்படிக் கெல்லாம், சித்திபெறலாம் - சித்தியையடையலாம், ஞானம்வாய்க்கும்-ஞானமும் உண்டாகும், (ஆனால்) ஒருமனு - ஒருவிண்ணப்பமுண்டு, (கேட்டருளவேண்டும். அஃது என்னெனின்) எனக்கு—அடியேனுக்கு, இங்கு-இப்பொழுது, இல்லாமை ஒன்றினையும் - (உன் திருவருள் பெருமையாகிய) வறுமை யொன்றைமட்டிலும், இல்லாமை ஆக்க-வறுமையாக்குதற்காக, இப்போது இரங்கு-இப்பொழுது இரங்கி யருளவேண்டும். இகபரமிரண்டினிலு, எ-று.

இயமநியமாதிகள்-இயமம், நியமம், ஆதனம், பிராணாயாமம், பிரத்தியாகாரம், தாரணை, தியானம், சமாதி என்னும் எண்வகையன. இவற்றின் விரிவெல்லாம் யோகநூல்களிற்காண்க, உபாதி-பிரபஞ்சத்தில் வெறுப்பு. (அ)

97. மாவுரி யுடுத்துமலை வனநெற் கொறித்துமுதிர்
வனசருகு வாயில்வந்தால்
வன்பசி தவிர்த்துமனல் வெயிலாதி மழையால்
வருந்தியும் மூலவனலைச்
சிரமள வெழுப்பியு நீரினிடை மூழ்கியுந்
தேகநம தல்லவென்று
சிற்சுக வபேக்ஷையாய் நின்னன்பர் யோகஞ்
செலுத்தினர் யாம்பாவியேம்
விரவுமறு சுவையினொடு வேண்டுவ புசித்தரையில்
வேண்டுவ வெலாமுடுத்து
மேடைமா ளிகையாதி வீட்டினிடை வைகியே
வேறொரு வருத்தமின்றி
இரவுபக லேழையர்கள் சையோக மாயினோ
மெப்படி பிழைப்பதுரையாய்
இகபர மிரண்டினினு முயிரினுக் குயிராகி
யெங்குநிறை கின்றபொருளே..

ப—ரை. மாவுரி உடுத்தும் - மரநார்ச் சீரையைத் தரித்தும், மலைவன நெல் கொறித்தும் - மலை நெல்லையும் வன நெல்லையுங் கொறித்தும், உதிர் வனசருகுவாயில் வந்தால் - உதிர்வனவாகிய சருகுகள் (தாமிருக்கும் இடத்தின் முற்றத்தில்) வந்து விழுந்தால் (அவற்றையுண்டு, வன் பசி தவிர்த்தும்-மிக்கபசியைநீக்கியும், அனல் வெயிலாதியால் - அக்கினி வெயில் முதலானவைகளாலும் மழையால்-மழையாலும், வருந்தியும் - வருத்தப்பட்டும், மூல அனலை — (மூலாதாரத்திலுள்ள) மூலாக்நியை, சிரமளவு எழுப்பியும்-சிரத்தளவாக எழுப்பியும், நீரினிடை மூழ்கியும் — புண்ய தீர்த்தங்களில் ஸ்நாநம் பண்ணியும், தேகம் நமது அல்ல என்று-உடல் நமதன்றென்று நிச்சயித்து, சிற்சுக அபேக்ஷையாய்-ஞானசுகத்தை யடைய இச்சை யுடையவராய், நின் அன்பர்-உனது அடியவர், யோகம் செலுத்தினர் - யோகத்தை நடத்திவந்தார்கள், யாம் பாவியேம்-பாவிகளாகியநாங்கள், அறுசுவையினோடு விரவும்-ஆறு சுவைகளுடன் கலந்த, வேண்டுவ புசித்து - வேண்டு முணவுகளை யுண்டு, அரையில் - இடையில், வேண்டுவ எல்லாம் உடுத்து — வேண்டும் ஆடைகளெல்லாவற்றையும் தரித்து, மேடைமாளிகை ஆதி-மேடைமாளிகை முதலிய, வீட்டினிடைவைகி — வீடுகளில்தங்கி, வேறு ஒருவருத்தம் இன்றி — பிறிதொரு துன்பமுமில்லாமல், இரவுபகல்-இராப்பகலாக, ஏழையர்கள் மாதர்

களுடைய - சையோகம் ஆயினும்-புணர்ச்சி செய்யா நின்றோம், எப்படி பிழைப்பது-எப்படி உய்வது, உரையாய் - சொல்லாய், இகபர மிரண்டினிலு, எ-று.

உதிர்வன சருகுவாயில் வந்தால் என்பதற்கு வனத்திலுள்ள உதிர்ந்த சருகுகள் தமது வாயில்வந்து (சுயேச்சையாய்) விழுந்தால் எனப்பொருள் கூறினும் பொருந்தும். மரவுரி – நாரினுற் செய்த சீரை, கொறித்தல்—நெல் முதலியவற்றை ஒவ்வொன்றாகப் பல்லினுற் கறித்தல்-கைப்பு, இனிப்பு, புளிப்பு, உவர்ப்பு, துவர்ப்பு, கார்ப்பு என்பன அறுசுவை. உன்னடியார்கள் ஞானனந்தமாகிய பேரின்பத்தையடைய விரும்பி மரவுரியுடுத்துப் பலதுன்பச் செய்கைகளைச் செய்து உய்ந்தார்கள், மாதாது சிற்றின்பமுதலியவற்றைவிரும்பும் நாங்கள் எப்படி உய்வோமென்றார்.

98. முத்தனைய மூரலும் பவளவா யின்சொலு
முகத்திலகு பசுமஞ்சளும்
மூர்ச்சிக்க விரகசன் னதமேற்ற விருகும்ப
முலையின்மணி மாலைநால
வைத்தெமை மயக்கிரு கண்வலையை வீசியே
மாயா விலாசமோக
வாரிதியி லாழ்த்திடும் பாழான சிற்றிடை
மடைந்தையர்கள் சிற்றின்பமோ
புத்தமிர்த போகம் புசித்துவிழி யிமையாத
பொன்னுட்டும் வந்ததென்றால்
போராட்ட மல்லவோ பேரின்ப முத்தியிப்
பூமியி லிருந்துகாண
எத்தனை விகாதம்வரு மென்றுசுகர் சென்றநெறி
யிவ்வுலக மறியாததோ
இகபர மிரண்டினிலு முயிரினுக் குயிராகி
யெங்குநிறை கின்றபொருளே.

ப-ரை. முத்து அனைய முரலும் - முத்துவரிசை போன்ற தந்தபந்தியும், பவளவாய் இன் சொலும் - பவளத்தை யொத்த வாயில்வரும் இனிய சொற்களும், முகத்து இலகு பசுமஞ்சளும் - முகத்தில் விளங்குகின்ற பசிய மஞ்சட்கறையும், மூர்ச்சிக்க-மூர்ச்சிக்கும்படி, விரகசந்நதம் ஏற்ற—விரஹசந்நதத்தை யெழுப்ப, இருகும்ப முலையில்-இரண்டு குடங்கள்போன்ற ஸ்தனங்களின்மேல், மணிமாலை நால-ரத்ந ஆரங்கள் தொங்க, வைத்து - அமைத்து, எம்மை மயக்கி - எங்களை மயங்கப்பண்ணி, இருகண் வலையைவீசி - இரண்டு கண்களாகிய வலையையெறிந்து, மாயாவிலாச மோகவாரிதியில் ஆழ்த்திடும்—மாயையின் விளையாட்டாகிய மோகக்கடலில் அமிழச்செய்கிற பாழ்ஆ

ன—பாழாகிய, சிறு இடை மடந்தையர்கள்-சிற்றிடையையுடைய மங்கையார்களது, சிற்றின்பமோ-சிற்றின்பமென்றலோ, புத்தமிர்தபோகம் புசித்து-புதிய அமிர்தத்தை உண்ணுதலாகிய அநுபவத்தை யநுபவித்து, விழிஇறையாத-கண்ணிமைக்காத, பொன்னாட்டும்வந்தது என்றால் - பொன்னுலகத்தினும் வந்ததானால், போராட்ட மல்லவோ-போராட்டமாய் முடியுமல்லவா, பேரின்பமுத்தி--பேரானந்தத்தை விளைவிக்கும் மோக்ஷத்தை, இப்பூமியில் இருந்துகாண-இவ்வுலகிலிருந்துகொண்டே காண்பதற்கு, எத்தனைவிகாதம் வரும் என்று-எத்தனை அசந்தர்ப்பங்க ளுண்டாகுமென்று, சுகர்சென்ற நெறி - சுகமுனிவர் போனமார்க்கம், இவ்வுலகம் அறியாததோ-இவ்வுலகத்தார் அறியாததோ, இகபரயிரண்டினிலு, எ—று.

சந்நதம்-ஆவேசம். கண்களை வலையாகக்கூறுதல் ஆடவரை யகப்படுத்துந் திறத்தில் வலைபோன் றிருத்தலின், அதனை, "காய்சினவேலன்ன மின்னியல் கண்ணின் வலைகலந்து வீசினபோது" என்னுந் திருக்கோவையாரானறிக.

மாதர்சிற்றின்பம் முத்திக்குத் தடையாகப் பொன்னாட்டினும் வந்துவருத்துவதா யிருத்தலால், இவ்வுலகத்தி லிருந்துகொண்டு அதனை வென்றுமுத்தியடைத லருமையாகுமென்று நிச்சயித்து, பிறந்தவுடனே துறந்துசென்று நிட்டமலைமே லேறின சுகமுனிவரது செய்தியை இவ்வுலகத்தார் அறியார்களோ' ஆதலால் நாமும் அவ்வாறுதுறந்து சென்றலொழிய முத்தியையடைய மாட்டோமென்பது கருத்து.

99. உன்னிலையு மென்னிலையு மொருநிலை யெனக்கிடந்
துளறிடு மவத்தையாகி
உருவுதான் காட்டாத வாணவமு மொளிகண்
டொளிக்கின்ற விருளென்னவே
தன்னிலைமை காட்டா தொருங்கவிரு வினையினாற்
றுவுசுக துக்கவேலை
தட்டழிய முற்றுமில் லாமாயை யதனாற்
றடிந்தகிலி பேதமான
முன்னிலை யொழிந்திட வகண்டிதா காரமாய்
மூதறிவு மேலுதிப்ப
முன்பினொடு கீழ்மே னடுப்பக்க மென்னுமன்
முற்றுமா னந்தநிறைவே
என்னிலைமை யாய்நிற்க வியல்புகூ றருள்வடிவ
மெந்நாளும் வாழிவாழி
இகபர மிரண்டினிலு முயிரினுக் குயிராகி
யெங்குநிறை கின்றபொருளே.

ரை. உன் நிலையும் என் நிலையும்—உனது நிலைமையும் எனது நிலைமையும், ஒரு. நிலையெனக்கிடந்து உளறிடும் அவத்தையாகி—ஒரேநிலைமை யென்று கொண்டு உளறிடும்படியான அவஸ்தைதையை யடைந்து, உருவுதான் காட்டாத ஆணவமும்-தன் வடிவை வெளிப்படுத்தாத அகங்காரமும், ஒளிகண்டு ஒளிக்கின்ற இருள் என்ன — ஒளியைப்பார்த்துமறைகின்ற இருளைப் போல தன்னிலைமைகாட்டாது ஒருங்க-தனது நிலைமையைக் காட்டாமல் அடங்க இருவினையினுல் - இருவினைகளாகிய (அலைகளோடு) தாவு-தாவுகின்ற, சுகதுக்கவேலை—சுக துக்கங்களாகிய சமுத்திரங்கள், தட்டு அழிய - தடுமாற, முற்றும் இல்லா மாயை அதனுல் - முழுதுமில்லாமையாகிய மாயா விகாரத்தினுல், தடித்து-உருவேற்று, அகிலபேதமான - அனேக வேறுபாடாகிய, முன்னிலை ஒழிந்திட-முன்னிலைச் சுட்டு அகல, அகண்டிதாகாரமாய் - பிரிக்கப்படாத வடிவையுடையதாய், மூதறிவு-பேரறிவானது, மேல் உதிப்ப - மேன்மேலுமுண்டாக, முன்பின்னேடு - முன்பின்னுடன், கீழ்மேல் நடுப்பக்கம் என்னுமல் - கீழ்மேல் நடுப்பக்கம் என்று சொல்லாதவிதம், முற்றும் - முடிவுபெறுகின்ற, ஆநந்த நிறைவே-இன்பபூரணமே, என் நிலைமையாம் நிற்க-எனது நிலைமையாகக்கொண்டு அதில் நிலைத்துநிற்கும்படி, இயல்பு கூர்—எனக்கு நல்லியல்பருளிய, அருள் வடிவம் - அருளுருவமானது, எந்நாளும் வாழி வாழி-எக்காலத்தும் மிகுதியும் வாழக்கடவது, இகபர மிரண்டினிலு—எ—று.

விசாரிக்குமிடத்தில் மாயை முற்றும் பொய்யாய்ப் போதலால், முற்றுமில்லா மாயையென்ருர். அருள்வடிவம் என்றது குருமூர்த்தத்தை, இறைவனுகிய உனது நிலையையும் அடிமையாகிய எனது நிலையையும் உணராது ஒருநிலையென்று உளறச்செய்கின்ற ஆணவம் ஒடுங்கவும், முற்றும் பொய்யாகியமாயாவிகாரமொழியவும், பேரானந்தமே எனது நிலைமையாகக் கொண்டு அதில் நிலைத்து நிற்கும்படி எனக்கு நல்லியற்கை யருளிய குருமூர்த்தமானது எக்காலத்தும் வாழக்கடவது என்பதாம். (கக)

## சச்சிதாநந்தசிவம்.

100. பாராதி ககனப் பரம்புமுண்டோவென்று
படாவெளிய தாகியெழுநாப்
பரிதிமதி காணுச் சுயஞ்சோதியாய்ண்ட
பகிரண்ட வுயிரெவைக்கும்
நேராக வறிவா யகண்டமா யேகமாய்
நித்தமாய் நிர்த்தொந்தமாய்
நிர்க்குண விலாசமாய் வாக்குமன மணுகாத
நிர்மலா னந்தமயமாய்ப்
போராது நிற்றிநீ சும்மா விருந்துதான்
பேரின்ப மெய்திடாமல்

பேய்மனதை யண்டியே தாயிலாப் பிள்ளைபோற்
பித்தாக வோமனதைநான்
சாராத படியறிவி னிருவிகற் பாங்கமாஞ்
சாசுவத னிஷ்டையருளாய்
சர்வபரி பூரண வகண்டதத் துவமான
சச்சிதா னந்தசிவமே.

ப-ரை. பார் ஆதி-பிருதிவி முதலான, ககனப்பரப்பும் - ஆகாயப்பரப்பும் உண்டோவென்று , உளதோவென்று (ஐயுறும்படி), படர்வெளியதாகி-வியாபிக்கின்ற பரமாகாசமாகி, எழுநா—அக்கினியும், பரிதி-சூரியனும், மதி—சந்திரனும், காணு-காணப்படாத, சுயஞ்சோதியாம் — சுயம்பிரகாசமாகி, அண்ட பகிரண்ட உயிர் வகைக்கும் - அண்ட பகிரண்டங் களிலுள்ள எல்லாவுயிர் களுக்கும், நேராக அறிவாய் — செவ்வையாக அறிவுருவாய், அகண்டமாய்- (கண்டிக்கப்படாத) பூரணமாய், ஏகமாம் - தனியாகி, நித்தமாய் — என்றுமுள்ளதாய், நிர்த்தொந்தமாய் தொடர்பற்றதாய், நிர்க்குண விலாசமாய்-குணங்கடந்தலீலையாகி, வாக்குமனம் அணுகாத - வாக்குமனங்கள் பொருந்தாத, நிர்மலாநந்தமயமாய் - நிர்மல சுகரூபமாகி, நீ போராது நிற்றி - நீ அசையாது நிற்கிருய், சும்மா இருந்து பேரின்பம் எய்திடாமல்—சும்மா இருந்து பரமா நந்தத்தைப் பெருமல், பேய்மனதை அண்டி-பேய்மனத்தைச் சார்ந்து, தாய் இல்லா பிள்ளைபோல் - தாயற்ற குழந்தைபோல், பித்தாகவோ-பித்தேறவோ, மனதை நான்சாராதபடி - மனத்தை நான் அடையாதபடி, அறிவின் அறிவோடு கூடிய, நிருவிகற்ப அங்கம் ஆம்-நிர்விகற்பமென்னும் உறுப்பையுடைய, சாசுவத நிஷ்டை அருளாய் — அழியாத சகலநிஷ்டையை உதவியருள வேண்டும், சர்வ பரிபூரண-சகல பொருள்களிலும் பரிபூரணமான, அகண்டதத்துவம் ஆன- அகண்டதத்துவப் பொருளாகிய, சச்சிதா நந்த சிவமே-தத்துவத்திரய ரூபமாகிய மங்களவஸ்துவே. எ-று.

அக்கினிக்கு ஏழுநாக்கள் உண்டாகலின் 'எழுநா' என்ருர். சத்து - சித்து ஆனந்தமென்னுந் திரிபதார்த்தங்களும் ஒன்றுசேர்ந்தது சச்சிதானந்தம். சிவம்-மங்களம், சச்சிதானந்த இலக்கண முடைய சிவத்தை வணங்குதலாகக் கூறினர். (க)

101. குடக்கொடு குணக்காதி திக்கினை யுழக்கூடு
கொள்ளல்போ லந்துபூதம்
கூடுஞ் சுருங்கிலைச் சாலேகமொன்பது
குலாவுநடை மனையைநாறும்
வடக்கயிறு வெண்ணாரம் பாவென்பு தசையினுன்
மதவேள் விழாநடத்தி

வைக்கின்ற கைத்தேரை வெண்ணீர்செநீர் கணீர்
மலநீர்பு ணீரிறைக்கும்
விடக்குத் துருத்தியைக் கருமருந் துக்கூட்டை
வெட்டவெட் டத்தளிர்க்கும்
வேட்கைமர முறுகின்ற சுடுகாட்டைமுடியிலே
மெய்போ லிருந்துபொய்யாம்
சடக்கைச் சடக்கெனச் சதமென்று சின்மயந்
தானுகி நிற்பதென்றே
சர்வபரி பூரண வகண்டதத்துவமான
சச்சிதா னந்தசிவமே.

ப-ரை. குடக்கொடு குணக்காதி திக்கினை – மேற்குடன் கிழக்கு முதலிய திசைகளை, உழக்கூடு கொள்ளல்போல் - உழக்கினிடத்திற்கொள்வதுபோல, ஐந்து பூதம் கூடும் சுருங்கு இல்லை-பஞ்சபூதங்கள் சேர்கின்ற சிறுவீட்டை சாலேகம் ஒன்பது குலாவும் - ஒன்பது பலகணிகள் விளங்குகின்ற, நடைமனையை நடை வீட்டை, நாறும்-நாற்றமுறுகின்ற, வடக்கயிறு – வடக்கயிறு, வெள் நரம்பு ஆ - வெண்ணரம்பாக, என்பு தசையினுல் - எலும்பு மாமிசங்களால், மதவேள் - மன்மதனுனவன் விழாநடத்தி வைக்கின்ற-திருவிழா நடத்திவைக்கின்ற, கைத்தேரை - சிறுதேரை, வெள்நீர் – வெண்ணீரும், செந்நீர் செந்நீரும், கண்ணீர்-கண்ணீரும், மலநீர்·மலநீரும், புண்ணீர்-புண்ணீரும் (ஆகிய இவற்றை) இறைக்கும்–சிந்துகின்ற, விடக்குதுருத்தியை-மாமிசத்துருத்தியை, கருமருந்து கூட்டை—ஜன்மமாகிய மருந்து விளைகின்ற கூட்டினை, வெட்ட வெட்ட தளிர்க்கும் - வெட்டவெட்டத்தளிர்க்கின்ற, வேட்கைமரம் உறுகின்ற-ஆசையாகிய மரங்கள் பொருந்திய, சுடுகாட்டை-மயானத்தை, முடிவிலே-முடிவில், மெய்போலிருந்து-உண்மைபோலத் தோன்றி, பொய் ஆம் பொய்யாய் முடிகின்ற, சடக்கை—சரீரத்தை, சடக்கு என-பொய்யென்று, சின்மயம் சதமென்று-ஞானமயமே யுண்மையென்று, தானுகி நிற்பது என்றே தானுகி நிற்பது எந்தக்காலமோ, சர்வபரிபூரண-எ-று.

வெண்ணீர் செந்நீர் மலநீர் புண்ணீர் என்பன முறையே கோழை இரத்தம் மூத்திரம் மாமிசநீர் எனப்படும், ஐம்பூதம் கூடுஞ்சிறிவீடு, நவத் துவாரங்களை யுடைய நடைவீடு முதலிய வாகச் சொல்லப்பட்ட பொய்யுடலைப் பொய்யென்றறிந்து, சின்மயமே மெய்யென்று துணிந்து அதின்மயமாய் நிற்பது எக்காலமோ எனவருந்திக் கூறியதாம்.

துருத்தி-தோற்பை, மதவேள் என்றது மதனுகிய வேள் என இருபெயரொட்டுப் பண்புத்தொகை. வேல் என்பது முருகனுக்கும் மதனுக்கும் பொதுப்பெயராகலின் ஐயமறுத்து மதவேளென்ருர். (உ)

102. பாகத்தி னுற்கவிதை பாடிப்படிக்கவோ
பத்திநெறி யில்லைவேத
பாராய ணப்பனுவன் மூவர்செய் பனுவலது
பகரவோ விசையுமில்லை
யோகத்தி லேசிறுது முயலவென் ருற்றேக
யொவ்வாதி வூண்வெறுத்தால்
உயிர்வெறுத் திடலொக்கு மல்லாது கிரியைக
ளுபாயத்தி னுற்செய்யவோ
மோகத்தி லேசிறிது மொழியவிலை மெய்ஞ்ஞான
மோனத்தி னிற்கவென்ருல்
முற்ருது பரிபாக சத்திக ளனேகநின்
மூதறிவி லேயெழுந்த
தாகத்தி லேவாய்க்கு மமிர்தப்ர வாகமே
தன்னந் தனிப்பெருமையே
சர்வபரி பூரண வகண்டதத் துவமான
சச்சிதா னந்தசிவமே.

ப—ரை. பாகத்தினுல்-பாகமாக, கவிதை பாடி படிக்கவோ - கவிகளைப் பாடிப்படிக்க வென்ருலோ, பத்திநெறி இல்லை-(எனக்கு) பத்திமார்க்கமில்லை வேதபாராயணப் பனுவல்-(தமிழ்) வேதமாகிய பாராயணத்துக் குரிய (திருவாசக மென்னும்) நூலையும், மூவர்செய் பனுவல்-மூவருளிச்செய்த அடங்கன் முறையாகிய நூலையும், பகரவோ – பாடுவோ மென்ருலோ, இசையும் இல்லை - இசைத்தெளிவுமில்லை, யோகத்திலேசிறிதுமுயலஎன்ருல்-யோகமார்க்கத்தில் கொஞ்சம் யத்தனிப்போ மென்ருல், தேகம் ஒவ்வாது, உடல் சரிப்படாது, இவ்வூண் வெறுத்தால் - இந்த வுணவை வெறுத்தால், உயிர் வெறுத்தில் ஒக்கும்—உயிரை வெறுத்தாற் போன்றிருக்கும், அல்லாது - அல்லாமல், கிரியைகள் - கிரியைகளை, உபாயத்தினுல் செய்யவோ - தந்திரமாகச் செய்ய வென்ருலோ, மோகத்திலே சிறிதும்ஒழிய இல்லை - மோகத்தில் கொஞ்சமாயினும் நீங்கவில்லை, மெய்ஞ்ஞான மோனத்தில் நிற்கஎன்ருல் - மெய்ஞ்ஞான எல்லையாகிய மோனநிலையில் நிற்கவென்ருல், முற்ருது - முடிவுபெருது, (அதற்குக் காரணம்) பரிபாக சத்திகள் அநேகம்-(என்னைத் தடைசெய்யப் பக்குவப்பட்டுள்ள) பரிபக்குவசத்திகள் எண்ணிறந்துள்ளன, நின்மூதறிவிலே எழுந்த-உன்விஷயமான பேரறிவினிடந்தோன்றிய, தாகத்திலே வாய்க்கும்—மோக்ஷதாகத்தில் கிடைக்கப் பெறுகின்ற, அமிர்தப்ரவாகமே - அமுதப் பெருக்கே, தன்னந்தனிப் பெருமையே - ஏகாந்த மாகிய பெருமையே, சர்வ பரிபூரண .—எ-று.

மூவர்செய்பனுவல் என்றது திருஞான சம்மந்தமூர்த்தி நாயனுர், திருநாவுக்கரசு நாயனுர், சுந்தரமூர்த்தி நாயனுர் என்னும் இம்மூவரால் அருளிச் செய்யப்பட்டது. இசை - இராகம். சத்திகள் தடைசெய்யும் என்பதை.

திருவாசகம்.

"தெய்வ மென்பதோர் சித்த முண்டாகி
முனிவி லாததோர் பொருள்து கருதலும்
ஆறு கோடி மாயா சத்திகள்
வேறு வேறுதம் மாயைக டொடங்கின.—என்னுந் திருவா
க்கா னுணர்க. (௩)

103. இமையளவு போதையொரு கற்பகா லம்பண்ணு
மிவ்வுலக மெவ்வுலகமோ
என்றெண்ணம் வருவிக்கு மாதர்சிற் றின்பமோ
வென்னின்மக மேருவாக்கிச்
சுமையெடுமி னென்றுதான் சும்மாடு மாயெமைச்
சுமையாளு மாக்கிநாளும்
துர்ப்புத்தி பண்ணியுள நற்புத்தி யாவையுஞ்
சூறையிட் டிந்திரஜாலம்
அமையவொரு கூத்துஞ் சமைந்தாடு மனமாயை
யம்மம்ம வெல்லவெளிதோ
அருள்பெற்ற பேர்க்கெலா மொளிபெற்று நிற்குமீ
தருளோவ லாதுமருளோ
சமயநெறி|காணுத சாக்ஷிநீ சூக்ஷமமாத்
தமியனேற் குளவுபுகலாய்
சர்வபரி பூரண வகண்டதத் துவமான
சச்சிதா னந்தசிவமே.

ப-ரை. மனமாயை - மன மாயையானது, இமையளவு போதை—இமைகொட்டு மளவினதாகிய விநாடிகாலத்தை, ஒரு கற்பகாலம் பண்ணும் - ஒருகற்பகாலமாக்கும், இவ்வுலகம் எவ்வுலகமோ என்ற எண்ணம்வருவிக்கும் - (நாமிருக்கும்) இவ்வுலக மானது எவ்வுலகமோ வென்கிற எண்ணத்தை யுண்டாக்கும், மாதர் சிற்றின்பமோ என்னின் - மகளிர் சிற்றின்பமோ வென்ருல், மகமேருஆக்கி — மகமேரு வளவினதாகச் செய்து, சுமை எடுமின் என்று—சுமை எடுங்க ளென்று, எமை - எங்களை — சும்மாடும் ஆய் — சும்மாடாகவு மிருந்து, சுமை ஆளும்ஆக்கி - சுமையாளகவும் ஆக்கி, நாளும் - தினந்தோறும், துர்ப்புத்திபண்ணி - துர்ப்புத்தியை யுண்டாக்கி, உள்ள - உளவாயிருக்கிற, நற்புத்தி யாவையும் — நல்லபுத்திக ளெல்லாவற்றையும், சூறையிட்டு — கொள்ளை கொ

ண்டு, இந்திரசாலம் அமைய — இந்திரசாலம் பொருந்த, ஒரு கூத்தும் சமைந்து ஆடும் — ஒருநாடகமும் அமைந்து நடிக்கும், அம்மம்ம—ஆச்சரியமாச்சரியம், வெல்ல எளிதோ — (இதனை) செயித்தற்கு எளிதாகுமோ, அருள் பெற்றபேர்க்கு எல்லாம் — உன்கருணையைப் பெற்ற பேர்கட் கெல்லாம், ஒளிபெற்று நிற்கும் ஈது - ஒளிவிளங்க நிற்கின்ற இது அருளோ - அருட் டன்மையோ, அல்லாது மருளோ (அல்லது மதிமயக்கமோ), சமயநெறி காணாத—சமயமார்க்கங்களால் அறியப் படாத, சாக்ஷிநீ சாட்சிபூதனாகிய நீ, சூக்ஷ்மம் ஆ - நுட்பமாக தமியனேற்கு - தனியேனாகிய எனக்கு, உளவு புகலாய் - தந்திரம்சொல்லாய், சர்வபரிபூரண,—எ-று.

மன மாயையானது இமைப்பொழுதைக் கற்பகாலமாகச் செய்தலும்இவ்வுலகம் எவ்வுலகமோ என்னும் எண்ணத்தை யுண்டாக்கலும் முதலிய செய்ய வல்லதாகலின், என்னால் வெல்ல வொண்ணுமோ, உன் திருவருள் பெற்றோர்க்கெல்லாம் ஒளியுருவாய் நிற்கின்ற இது அருளோஅல்லது மருளோ எனக்கு உளவுசொல்வாய் என்பதாம். (ச)

104. இனியே தெமக்குனருள் வருமோ வெனக்கருதி
யேங்குதே நெஞ்சமையோ.
இன்றைக் கிருந்தாரை நாளைக் கிருப்பரென்
லெண்ணவோ திடமில்லையே
அனியாய மாயிந்த வுடலைநா னென்றுவரு
மந்தகற் காளாகவோ
ஆடித் திரிந்துநான் கற்றதுங் கேட்டது
மவலமாய்ப் போனதன்றோ
கனியேனும் வறியசெங் காயேனு முதிர்சருகு
கந்தமூ லங்களேனும்
கனல்வாதை வந்தெய்தி னள்ளிப் புசித்துநான்
கண்மூடி மௌனியாகித்
தனியே யிருப்பதற் கெண்ணினே னெண்ணமிது
சாமிநீ யறியாததோ
சர்வபரி பூரண வகண்டதத் துவமான
சச்சிதா னந்தசிவமே.

ப-ரை. இனி உன் அருள் ஏது-இனி உன் கிருபை கிடைப்பதேது, எமக்கு - எங்களுக்கு, வருமோ — ஒருக்கால் உண்டாகுமோ, எனக்கருதி—என்று எண்ணி, நெஞ்சம் ஏங்குதே—மனமானது ஏக்கங் கொள்ளாநின்றதே, ஐயோ, அந்தோ, இன்றைக்கு இருந்தாரை — இன்று உயிர் வாழ்ந்திருந்தவரை, நாளைக்கு இருப்பர் என்று எண்ணவோ — நாளைக்கு இருப்பார்களென்று எண்ணவோ, திடம் இல்லையே - திடசித்தமில்லையே, அநியாயமாய் - அநியாயமாய்

இந்தவுடலை - இந்ததேகத்தைக் குறித்து, நான் என்றுவரும் — நானென்று அகங்கரித்துக் கொண்டு வருகின்ற, அந்தகற்கு ஆளாகவோ - காலனுக்கு அடிமையாகவோ, நான் ஆடித்திரிந்து - நான் ஆடிஉழன்று, கற்றதும் கேட்டதும் - கற்றகல்வியும் கேட்ட கேள்வியும், அவலமாய்போதல் நன்றோ — நிஷ்பலமாய்ப்போவது நலமோ, கனி எனும் - பழத்தையாயினும், வறியசெங்காய் எனும் வெறுமையான செங்காய்களை யாயினும், உதிர்சருகு கந்த மூலங்க ளேனும் - உதிர்ந்தசருகு (முதலிய) கந்தமூலங்களை யாயினும், கனல்வாதை வந்து எய்தின் - உதராக்நியின் உபத்ரவம்வந்து பொருந்தினுல், அள்ளிப்புசித்து - வாரியுண்டு, நான் அடியேன், கண்மூடி - கண்களை மூடிக் கொண்டு, மௌநியாகி - மௌநநிலையை யுடையேனுகி, தனியே யிருப்பதற்கு எண்ணினேன் - ஒன்றியாயிருக்க நினைத்தேன், இது எண்ணம் - இந்த எனது எண்ணத்தை, சாமிநீ யறியாததோ - எல்லாமுணர்ந்த நீ யறியாததோ, சர்வபரிபூரண,—எ-று.

கந்த மூலங்கள் வேர்கிழங்குகள். இனி உன்திருவருள் எனக்கு வாய்க்குமோ வென்று நினைத்து என்மனம் வருந்து கின்றதே, இன்றிருந்தவர் நாளைக்கு இருப்பர் என்று எண்ணவோ திடமில்லையே, அநியாயமாய் அகங்கரித்து வரும் யமனுக்கு ஆளாகவோ, நான் அலைந்து வருந்திக் கற்றகல்வியும் கேட்ட கேள்வியும் வாளாப் போதல் நன்மையோ, பசிக்குக் காய் கனி கிழங்குகளை யுண்டு மௌநியாகித் தனியே வசித்தற்கு எண்ணி யிருக்கிறேன், இவ்வெண்ணம் நீ யறியாததல்லவே என்பது கருத்து. (ரு)

105. மத்தமத கரிமுகிற் குலமென்ன நின்றிலகு
வாயிலுடன் மதியகடுதோய்
மாடகூ டச்சிகர மொய்த்தசந் திரகாந்த
மணிமேடை யுச்சிமீது
முத்தமிழ் முழக்கமுடன் முத்தநகை யார்களொடு
முத்துமுத் தாய்க்குலாவி
மோகத் திருந்துமென் யோகத்தி னிலைநின்று
மூர்ச்சைப் பிடித்தடைத்துக்
கைத்தல நகப்படை விரித்தபுலி சிங்கமொடு
கரடிநுழை நூழைகொண்ட
கானமலை யுச்சியிற் குகையூ டிருந்துமென்
காதலா மலகமென்னச்
சத்தமற மோனநிலை பெற்றவர்க ளுய்வர்காண்
சனகாதி துணிவிதன்றோ
சர்வபரி பூரண வகண்டதத் துவமான
சச்சிதா னந்தசிவமே.

ப-ரை. மத்தம் — பித்தங்கொண்ட, மதகரி - மதயானைகள், முகில் குலம் என்ன மேகசாலம்போல, நின்று இலகு - நின்று விளங்குகின்ற, வாயிலுடன்- முற்றத்தோடுகூடிய, மதி அகடுதோய் - சந்திரனது நடுப்பக்கத்தை யளாவுகின்ற, மாடகூடச் சிகரம்மொய்த்த - மாளிகைகள் வீடுகளின் சிகரங்கள் இவைகள் நெருங்கிய, சந்திரகாந்த மணிமேடை உச்சிமீது - சந்திரகாந்தக் கல்லினாற் சமைத்த ரத்நகசிதமான மேடையின் சிகரத்தில், முத்தமிழ் முழக்கமுடன் — முத்தமிழ் முழக்கத்துடன், முத்தநகையார்களொடு - முத்தையொத்த தந்த பந்தியையுடைய மாதர்களோடு, முத்து முத்தாய் குலாவி - பிரியமாய் விளையாடி, மோகத்து இருந்தும் என் - மோக இன்பத்தில் முழுகிக் கிடந்தாலென்னநஷ்டம், யோகத்தின் நிலைநின்று - யோகநிலையி னின்று, மூச்சைபிடித்து அடைத்து - வாயுவைத்தடுத்து, கைத்தலம் — கைகளில், நகப்படைவிரித்த - நகமாகிய ஆயுதங்களைவிரித்த, புலிசிங்கமொடு கரடிநுழை-புலிகள் சிங்கங்கள் கரடிகள் நுழையப்பெற்ற, நுழைசொண்ட - அடர்ச்சியைப் பொருந்திய, கானகம் — கானகத்திலும், மலைஉச்சியில் - மலையுச்சியிலும், குகையூடு குகைகளிலும், இருந்தும் என் - வசித்தாலும் என்னலாபம், காதலம் - கையினுள்ள, ஆமலகம் என்ன - நெல்லிக்கனிபோல, (விசிதமாய்) சத்தம் அற - ஆரவாரங்களடங்க, மோநநிலை பெற்றவர்கள் - மௌன நிலையை யடைந்தவர்கள், உய்வர் - உஜ்ஜீவிப்பார்கள், சநகாதி துணிவு இதுஅன்றோ-சநகாதிகளுடைய நிச்சயம் இதுவல்லவா, சர்வபரிபூரண,—எ—று.

இல்லறம் துறவறமென்னு மிரண்டனுள் எதிலிருப்பினும் நஷ்டலாபங்கனில்லை, மௌநநிலையைப் பெற்றவர்கள் உய்வார்கள் என்பதாயிற்று. நெல்லிக்கனியை உள்ளங்கையில் வைத்து உற்றுநோக்கினல் உள்ளேயிருக்கிற வரைகளெல்லாம் எண்ணலாம்படி விளங்கித்தோன்றி உள்ளும் புறப்பும் ஒத்திருத்தலால் கரதலாமலகம் என்ன என்றுவமித்துக் கூறினர்.

இச்செய்யுளின் கருத்தை.

“ காடே திரிந்தென்ன காற்றே புசித்தென்ன கந்தைசுற்றி
யோடே யெடுத்தென்ன வுள்ளன்பிலாதவ ரோங்கும்வைய
நாடே யிடைமருதீசர்க்கு மெய்யன்பர் நாரியர்பால்
வீடே யிருப்பினு மெய்ஞ்ஞான வீட்டின்ப மேவுவரே என்னுந் திருவாக்கா னறிக. (கூ)

106. கைத்தலம் விளங்குமொரு நெல்லியங் கனியெனக்
கண்டவே தாகமத்தின்
காட்சிபுரு ஷார்த்தமதின் மாட்சிபெறு முத்தியது
கருதினனு மானமாதி
உத்திபல வாநிரு விகற்பமே யில்லையா
லொன்றோ டிரண்டென்னவோ

உரையுமிலே நீயுமிலே நானுமிலே யென்பது
    முபாயநீ யுண்டுநானும்
சித்தமுள னில்லே யெனும்வசன நீயறிவை
    தெரியார்க டெரியவசமோ
செப்புகே வலநீதி யொப்புவமை யல்லவே
    சின்முத்தி ராங்கமரபில்
சத்தமற வென்னையாண்ட குருமௌனி கையினற்
    றமியனேற் குதவுபொருளே
சர்வபரி பூரண வகண்டதத் துவமான
    சச்சிதா னந்தசிவமே.

ப—ரை. கைத்தலம் விளங்கும் - (உள்ளங்) கையினிடத்தில் விளங்கா நின்ற, ஒரு நெல்லிக் கனியென - ஒரு நெல்லிப் பழத்தைபோல, கண்ட - காணப்பட்ட, வேதாகமத்தின்காட்சி - வேதாகமத்திற் கூறிய விஷயம், புருஷார்த்தம் - (சதுர்வித) புருஷார்த்தமாம், அதில் - அந்தப் புருஷார்த்த சதுஷ்டயத்துள், முத்தி-வீடு எனப்படுவது, மாட்சிபெறும் - மேன்மையை யடையும், அது - அந்த முத்தியை, கருதின் - நினைத்தால், அனுமானம் ஆதி யுத்தி பல ஆறும் - அநுமானம் முதலிய (ப்ரமாணங்களால் உளவாகின்ற) யுக்திகள் பண்ணிறந்தனவாகும், நிருவிகற்பமேல் இல்லே ஆல்-நிருவிகற்ப சமாதியநுபவத்தின்கண் (இந்தயுக்திகள்) பயன்படாதொழியு மாதலால், ஒன்றோடு இரண்டு என்னவோ - ஒன்றுடன் இரண்டு என்றுகூறுவோ மென்றாலோ, உரையும் இல்லே - சொல்லுமில்லே, நீயும்இல்லே - நீயென்பது ஒன்றும்இல்லே, நானும் இல்லே - நான்என்பது ஒன்றுமில்லே என்பதும் - என்றுசொல்லுவதும், அடியேனும், சித்தம்உளன் - சித்தமாயிருக்கிறேன், (அப்படியிருக்க) நான்இல்லேஎன்னும்வசனம் - நானென்ப தொருபொருள் இல்லேஎன்னுஞ் சொற்பொருளே, நீ அறிவை - நீயுணர்வாய், தெரியார்கள் - அதனை யுணராதவர்கள், தெரியவசமோ - அரியக்கூடுமோ, செப்பு - (வேதாகமங்களாற்) சொல்லப்பட்ட, கேவலம்நீதி - முத்திநெறியின் ஒழுங்குக்கு, ஒப்பு உவமையல்லவே - (வேறுபொருள்) ஒத்துக் கொள்ளத்தக்க உவமைப் பொருளாகாதே, சின்முத்திராங்க மரபின் - முத்திரையை யங்கமாகவுடைய மவுனமரபினல், சத்தம் அற - சொல்லடங்க என்னே ஆண்ட-என்னே அடிமையாகக் கொண்டருளின, குருமௌனி கையினல் - மௌனகுருவின் திருக்கரங் கொண்டு, தமியனேற்கு உதவு பொருளே - தனியேனன எனக்குக் கொடுக்கப்பட்ட வஸ்துவே சர்வபரி பூரண.

உள்ளங்கை நெல்லிப்பழம்போல விளங்கும் வேதாகமங்களின் அர்த்தசாரமெல்லாம் அறம்பொருள் இன்பம் வீடுஎன்னும் நால்வகையான புருஷார்த்தங்களே. வேதம் அறியப்படுவது என்னும்பொருளது. ஆகமம்பதி பசு பாசம் என்னும் முப்பொருளேயும் விளக்கிக் காட்டுவது என்னும்பொருளது. ஆ-பசு. கம்-பதி. மம்-பாசம்.

சின்முத்திராங்க மரபு என்றது மௌனதேசிகர் பரம்பரை.

உள்ளங்கை நெல்லிக்கனியைக் கரதலாமலக மென்பர் வடநூலார். (எ)

107. காயாத மரமீது கல்லேறு செல்லுமோ
கடவுணீ யாங்களடியேம்
கர்மபந் தத்தினாற் சன்மபந் தம்பெறக்
கற்பித்த துன்னதருளே
வாயார வுண்டபேர் வாழ்த்துவது நொந்தபேர்
வைவதுவு மெங்களுலக
வாய்பாடு நிற்கநின் வைதிக வொழுங்குநினை
வாழ்த்தினாற் பெறுபேறுதான்
ஓயாது பெறுவரென முறையிட்ட தாற்பின்ன
ருளறுவது கருமமன்றாம்
உபயநெறி யீதென்னி னுசிதநெறி யெந்நெறி
யுலகிலே பிழைபொறுக்கும்
தாயான கருணையு முனக்குண் டெனக்கினிச்
சஞ்சலங் கெடவருள்செய்வாய்
சர்வபரி பூரண வகண்டதத் துவமான
சச்சிதா னந்தசிவமே.

ப-ரை. காயாத மரமீது - காயாத மரத்தின்மேல், கல் ஏறு செல்லுமோ-கல்லெறிதல் செல்லுமோ, நீ கடவுள் - யாங்கள் அடியேம் - நாங்கள் அடிமைகள், கர்ம பந்தத்தினால் - (எங்கட்குள்ள) கர்மப் பிணிப்பினால், சன்ம பந்தம் பெற — பிறவித்தொடக்கை யடையும்படி, கற்பித்தது — கற்பித்து வைத்தது, உன்னது அருளே — உன்கிருபையே, வாயார வுண்டபேர் வாழ்த்துவதும்-வாயாரப் புசித்தவர்கள் மங்களாசாசநஞ் செய்வதும், நொந்த பேர் வைவதும்-வருந்தினவர்கள் நிந்திப்பதும், எங்கள் - எங்களுடைய உலகவாய்ப்பாடு-உலக வழக்கம், நிற்க — இதுநிற்க, நின்வைதிக ஒழுங்கு - உனது வைதிகவொழுக்க நூல்கள், நின்னை வாழ்த்தினால் — உன்னை மங்களாசாசநம் பண்ணினால், பெறுபேறு - பெறுதற்குரிய (மோக்ஷ) லாபத்தை, ஓயாதுபெறுவர் என - தவறாமலடைவரென்று, முறையிட்டதால் — முழங்குவதனால், பின்னர்—அதற்குமேல், உளறுவதுகருமம் அன்று ஆம் - உளறுதல் நற்கருமம் அன்றாகும், உபயநெறி ஈதுஎன்னின் - இரண்டு மார்க்கங்கள் (வைவதும் வாழ்த்துவது மாகிய) இவ்வாறாயின், உசிதநெறி எந்தநெறி - (இவற்றுள்) அநுகூலமார்க்கம் எந்தமார்க்கம், உலகிலே பிழைபொறுக்கும் - உலகத்தில் குற்றத்தைப் பொறுத்தருள்கின்ற, தாயான கருணையும் - தாயின் கருணைபோன்ற கருணையும், உனக்கு உண்டு - உனக்குள்ளது, இனி - இனி, எனக்கு -அடியேனுக்கு, சஞ்சலங்

கெட - மனோதுக்க மொழியும்படி, அருள்செய்வாய் - தயவுசெய்வாய், சர்வ பரிபூரண. எ-று.

வேதசம்பந்தம் வைதிகம் பேறு எனப் பொதுப்படக் கூறினும் நின்னை வாழ்த்தினுற் பெறு பேறு யென்றமையால் மோக்ஷலாபம் யென்றுணைக்கப் பட்டது.

எல்லாம் வல்ல இறைவனையாய் வாழ்த்துவது பொருந்துமோ வெனிற் பொருந்தும் அது அவனை வாழ்த்துவ தாலேயே நாம் வாழ்வோ மாகலின் இதனை.

திருவாசகம்.

"வாழ்த்துவதும் வானவர்கடாம்வாழ்வான் மனநின்பால்

தாழ்த்துவதுந், தாமுயர்ந்து தம்மையெல்லாந் தொழவேண்டி" என்ப தனுனறிக.

108. இன்னம் பிறப்பதற் கிடமென்னி னிவ்வுடல
மிறவா திருப்பமூலத்
தெழுமங்கி யமிர்தொழுகு மதிமண்டலத்திலுற
வென்னம்மை குண்டலினிபால்
பின்னம் பிறக்காது சேயெனவளர்த்திடப்
பேயேனை நல்கவேண்டும்
பிறவாதநெறியெனக் குண்டென்னி னிம்மைபே
பேசுகர்ப் பூரதீபம்
மின்னும் படிக்கண் டாகார வன்னைபால்
வினையேனை யொப்புவித்து
வீட்டுநெறி கூட்டிடுதென் மிகவுநன் றிவையன்றி
விவகார முண்டென்னிலோ
தன்னந் தனிச்சிறிய னுற்றிலேன் போற்றிவளர்
சன்மார்க்க முத்திமுதலே
சர்வபரி பூரண வகண்டதத் துவமான
சச்சிதா னந்தசிவமே.

ப - ரை. இன்னம் பிறப்பதற்கு இடம் என்னின் - இன்னமும் ஜன்மத் துக்கிட முண்டென்றால், இவ்வுடலம் இறவாதிருப்ப - இந்தச்சரீரம் இறவா திருக்கும்படி, மூலத்து எழும் அங்கி-மூலாதாரத்திற்றோன்றும் அக்நியானது அமிர்து ஒழுகும் - அமிர்தஞ்சொரியாநின்ற, மதிமண்டலத்தில் உற - சந்திரம, ண்டலத்தில் அடையும்படி, என் அம்மை - என்தாயாகிய, குண்டலினிபால் - குண்டலி சத்தியினிடத்தே, பின்னம் பிறக்காது-பழுதுண்டாகாதவண்ணம், சேய் என வளர்த்திட - குழந்தைபோல வளர்த்தற்பொருட்டு, பேயேனைநல்க

வேண்டும் - பேயையொத்த அடியேனைக் கொடுத்தல் வேண்டும், பிறவாதநெறி எனக்கு உண்டு என்னின் - பிறவாவழி யெனக்கிருக்குமாயின், இம்மையே- இப்பிறவியிற்றானே, பேசு - சொல்லப்பட்ட, கர்ப்பூரதீபம் - கர்ப்பூர விளக்கு போல, மின்னும்படிக்கு - ஒளிவிடும்படிக்கு, அகண்டாகார அன்னைபால்-அகண்டரூபமென்கிற தாயினிடத்தே, வினையேனை ஒப்பிவித்து – தீவினையேனாகிய என்னை யொம்புசொடுத்து, வீட்டுநெறி கூட்டிடுதல் – மோக்ஷ மார்க்கத்திற்|சேர்த்திடுதல், மிகவும்நன்று – மிகுதியும்நலம், இவையன்றி – இவற்றையன்றி, விவகாரம் உண்டு என்னிலோ-வழக்கு இருக்கிறதென்றாலோ தன்னந்தனிசிறியன் - தனியேனாகிய சிறியேன், ஆற்றிலேன் - பொறுத்து முடியேன், போற்றி - நமஸ்காரம், வளர் - விருத்தி யடையாநிற்கிற, சன்மார்க்கம்- நன்னெறியையுடைய, முத்திமுதலே - மோக்ஷத்திற்கு முதல்வனே. சர்வபரிபூரண. எ-று.

முத்தி முதல்-ஒருசொல். அகண்டம் – கண்டிக்கப் படாதது. அகண்டாகாரம்-அண்ட ரூபம்.

இனிமேலும் எனக்குப் பிறவியிருக்குமாயின், எடுத்த இத்தேகமே நிலைத்திருக்கும்படி வளர்க்கவும், பிறவி யில்லையாயின், இம்மையிற்றானே கர்ப்பூரதீபம்போல விளங்கும்படிக்கு மோக்ஷநெறியில் சேர்க்கவும், முறையே குண்டலி சத்தியினிடத்தும், அகண்டரூபமென்கிற தாயினிடத்துங் கொடுக்கவேண்டும். இவ்விரண்டு வழியுமின்றி வேறு வழக்குண்டென்றால் சிறியேன் பொறுத்திலேன் என்பது கருத்து. (க)

109. வேதாவை யில்வண்ணம் விதித்ததே தென்னிலுன்
வினைப்பகுதி யென்பனந்த
வினைபேச வறியாது நிற்கவியை மனதால்
விளைந்ததான் மனதைநாடில்
போதமே நிற்குமப் போதத்தை நாடிலோ
போதமுநி னுல்விளக்கம்
பொய்யன்று தெய்வமறை யர்வுமே நீயென்று
போக்குவர வறநிகழ்த்தும்
ஆதார வாதேய முழுதுநீயாதலா
லகிலமீ தென்னையாட்டி
ஆடல்கண்டவனுநீ யாடுகின்றவனுநீ
யருளுநீ மௌனஞான
தாதாவு நீபெற்ற தாய்தந்தை தாமுநீ
தமருநீ யாவுநீகாண்
சர்வபரி பூரண வகண்டதத் துவமான
சச்சிதா னந்தசிவமே.

ப-ரை. வேதாவை - பிரமனைநோக்கி, இவ்வண்ணம் விதித்தது எதுஎன்னின் - இந்தமாதிரி விதித்தது என்னகாரணம் என்று வினவினால், உன்வினைப்பகுதி என்பன் . உன்வினையின் பாகுபாடு என்றுசொல்லுவான், அந்தவினை பேச அறியாது — அந்தவினையானதுபேச அறியமாட்டாது, நிற்க—அதுநிற்க இவைமனதால் விளைந்ததால் - இவைகள் மனத்தினால் உண்டான படியால், மனதைநாடில் - மனத்தை நாடுமிடத்தில், போதமே நிற்கும் - அறிவே யிருக்கின்றது அப்போதத்தை நாடிலோ - அவ்வறிவை நாடினாலோ, போதமும்-அவ்வறிவும், நின்னால்விளக்கம் - உன்னால் விளக்கப்படுவது, !பொய் அன்று—இதுபொய்யல்ல (நிச்சயம்.) தெய்வமறை-தெய்வீகம் பொருந்திய வேதங்கள் யாவுமேநீயென்று — எல்லாம் நீயேயென்று, போக்குவரவு அறநிகழ்த்தும்—போக்குவரவொழியச் சொல்லாநிற்கும், ஆதார ஆதேயம் முழுதும்நீ ஆதலால் - ஆதார ஆதேயங்களாகிய முழுமையும் நீயாகையால், அகிலமீது — பூமியின்பேரில், என்னை ஆட்டி - என்னை யாடும்படிசெய்து, ஆடல்கண்டவனும் நீ - அவ்வாடலைக்கண்டவனும் நீ, ஆடுகின்றவனும் நீ - ஆடுவோனும் நீ அருளும் நீ - திருவருளும் நீ, மௌனஞான தாதாவும் நீ - மௌனஞானக் கொடையாளனும் நீ, பெற்ற தாய்தந்தை தாமும்நீ - பெற்ற தாய்தந்தையரும்நீ, தமரும்நீ - சுற்றத்தாரும்நீ, யாவும்நீ - மற்றும் எனக்கிதமான பொருள்களெல்லாம்நீயே, சர்வபரிபூரண, எ—று.

வினைசடமாதலால் பேசவறியாது என்றார். ஆதாரம் - இடம், ஆதேயம் இடத்து நிகழ்பொருள்.

வேதாவை நோக்கி, இவ்வாறு விதித்தது யாதுக்கென்று வினவினால், உன் கர்மக்கூறுபாடு என்பன். இந்தக் கர்மப்பாகுபாடுகள் மனத்தினால் உண்டானவையாதலால் மனத்தை நோக்குமிடத்து அதுவும் அறிவுருவாய் நிற்கும் அவ்வறிவும் உன்னால் விளக்கப்படுவது, இதுபொய்யல்ல, தெய்விகமானவேதங்கள் எல்லாம், எல்லாப்பொருள்களும் நீயென்று சொல்லும். உலகமும், உலகப் பொருள்களும்நீ யாகையால், உலகத்தில் என்னை நடிப்பிப்பவன்முதல் எல்லாம் நீயேயென்பது கருத்து. (கo)

110. கொந்தவிழ் மலர்ச்சோலை நன்னிழல் வைகினுங்
குளிர்தீம் புனற்கையள்ளிக்
கொள்ளுகினு மந்நீரிடைத்திளைத் தாடினுங்
குளிர்சந்த வாடைமடவார்
வந்துலவு கின்றதென முன்றிலிடை யுலவவே
வ்சதிபெறு போதும் வெள்ளை
வட்டமதி பட்டப் பகற்போல நிலவுதர
மகிழ்போதும்வேலையமுதம்
விந்தைபெற வறுசுவையில் வந்ததென வமுதுண்ணும்
வேளையிலு மாலைகந்தம்

வெள்ளிலை யடைக்காய் விரும்பிவேண்டியவண்ணம்
விளையாடி விழிதுயிலினும்
சந்ததமு நின்னருளை மறவா வரந்தந்து
தமியேனை ரக்ஷபுரிவாய்
சர்வபரி பூரண வகண்டதத் துவமான
சச்சிதா னந்தசிவமே.

ப—ரை. கொந்து அவிழ் மலர்சோலை - பூங்கொத்துகள் விகசிக்கின்ற பூஞ்சோலைகளின், நல்நீழல் வைகினும் - நல்ல நிழலிற்றங்கி யிருந்தாலும், குளிர்-தண்ணிய, தீ புனல் கை அள்ளி கொள்ளுகினும்-மதுரமாகிய நீரைக்கையினு லள்ளிக் குடித்தாலும், அந்நீரிடை-அந்நீரினிடத்தில், திளைத்து ஆடினும் - ஸ்நானஞ்செய்து விளையாடினாலும், குளிர் சந்தவாடை - குளிர்ந்தசந்தனமணமுள்ளகாற்று, மடவார்-மாதர்கள் வந்துலவுகின்றது என-வந்துலாவுகிறதுபோல, முன்றிலிடை உலவ - முற்றத்தின்கண் உலாவும்படி, வசதிபெறுபோதும்—(விசாலமான) வீடுகளையுடையனுகும் காலத்திலும், வெள்ளை வெண்மையாகிய, வட்டம் - வட்டரூபமான, மதி - சந்திரன், பட்டப்பகல்போல - நடுப்பகலைப்போல, நிலவுதர - சந்திரிகையைவீசலால், மகிழ்போதும் - களிக்குங்காலத்தும், வேலை அமுதம் - கடலமுதமானது, விந்தைபெற - ஆச்சரியமடைய, அறுசுவையில் - அறுசுவைப் பதார்த்தங்களில், வந்தது என - வந்ததென்னும்படி, அமுது உண்ணும் வேளையிலும் - நல்ல உணவைப்புசிக்கிற காலத்திலும், மாலைகந்தம் - பூமாலை சந்தநம், வெள்ளிலை அடைக்காய் - வெற்றிலைப்பாக்கு, (இவற்றை) விரும்பி - அபேக்ஷித்து உண்டு, வேண்டியவண்ணம் விளையாடி—இச்சித்தபடி விளையாடி, விழிதுயிலினும் - தூங்கினாலும், சந்ததமும் - எக்காலமும், நின் அருளை மறவா வரம்தந்து - உன்னருளை மறவாத வரத்தைக்கொடுத்து, தமியேனை ரக்ஷபுரிவாய் - தனியேனைக் காத்தருள்வாய், சர்வபரி பூரண, எ—று.

சந்தனவாடை - தென்றல். எத்தகையினவாகிய போக போக்கியங்களையநுபவிக்குங் காலத்திலும் உன் திருவருளை யான் மறவாதிருக்கக்கிருபைசெய்யவேண்டும் என்பது கருத்து, "* * * பிறவிவரினு மறவிவாராமே - வரந்தரல்வேண்டும் வானவர்கோனே" எனவும், "என்பொழியாக்கையுட்சேர்ப்பினுமவர்பால் - அன்பொழியாமை யருண்மதி யெனக்கே" எனவுங்கூறிய ஆன்றோர் சொற்படி. கொத்து - கொந்து என நின்றது மெலித்தல் விகாரம்.

## தேசோமயானந்தம்.

11. மருமலர்ச் சோலைசெறி நன்னீழன் மலையாதி
மன்னுமுனி வர்க்கேவலாய்
மந்திரமா லிகைசொல்லு மியமநிய மாதியா
மார்க்கத்தி னின்றுகொண்டு

கருமருவு காயத்தை நிர்மலம தாகவே
கமலாச னாதிசேர்த்துக்
காலைப்பிடித்தனலை யம்மைகுண்டலியடிக்
கலைமதியி னூடுதாக்கி
உருகிவரு மமிர்தத்தை யுண்டுண்டுறங்காம
லுணர்வான விழியைநாடி
ஒன்றோ டிரண்டெனாச் சமரச சொரூபசுக
முற்றிடவென் மனதின் வண்ணம்
திருவருண் முடிக்கவித் தேகமொடு காண்பனோ
தேடரிய சத்தாகியென்
சித்தமிசை குடிகொண்ட வறிவான தெய்வமே
தேசோ மயானந்தமே.

ப - ரை. மருமலர்சோலை செறிநல்நீழல் - மணந்தங்கிய பூஞ்சோலைகள் நெருங்கி நல்ல நிழலையுடைய, மலையாதி மன்னும் - மலைமுதலான இடங்களில் நிலைத்திருக்கிற, முனிவர்க்கு - முனிவர்க்கு, ஏவலாய் - அடிமையாய், மந்திரமாலிகைசொல்லும் - மந்திர மாலிகையிற் சொல்லப்படுகிற, இமயநியமாதியாம் - இமய நியமாதிகளாகிற, மார்க்கத்தில் நின்றுகொண்டு - வழியிலிருந்துகொண்டு, கருமருவுகாயத்தை - கர்ப்பவாதனையை யடைந்ததேகத்தை, நிர்மலம் ஆக - பரிசுத்தமாம்படி, கமலாசனாதி சேர்த்து - பத்மாசநமுதலான ஆசந (பேதங்களில்) அமைத்து, காலைப்பிடித்து - (ப்ராண) வாயுவைத் தடுத்து, அனலை-மூலாக்கினியை, அம்மைகுண்டலி அடி-தாயாகிய குண்டலி சத்தியின் திருவடியாகிய, கலைமதியினூடுதாக்கி—கலைகள் நிறைந்த சந்திரனிடத்தில் தாக்கவிட்டு, உருகிவரும் - (அதினின்றும்) உருகிச்சிந்தாநின்ற, அமிர்தத்தை உண்டு உண்டு-அமுதத்தையிடையறாதுட்கொண்டு, உறங்காமல்-கேவலநித்திரைசெய்யாமல், உணர்வானவிழியினாடி - ஞாநநோக்கினாற்பார்த்து, ஒன்றோடு இரண்டு என்னா - ஒன்றிரண்டென்று சொல்லப்படாத, சமரசசொரூபசுகம்—சமரசஸ்வரூப இன்பத்தை, உற்றிட-அடையும்படி,என்மனதின்வண்ணம்-என் எண்ணப்படி, திருவருள் முடிக்க-திருவருளானது முடித்துக் கொடுக்க, இத்தேகமொடு காண்பனோ-இந்தச் சரீரத்துடனிருக்கும் போதே யடையப் பெருவேனோ, தேட அரிய-தேடுதலரிதான, சத்து ஆகி—உண்மையாகி, என் சித்தமிசை குடிகொண்ட என்மனத்திற் குடிகொண்டிருக்கிற, அறிவு ஆனதெய்வமே - ஞானமயமாகிய கடவுளே, தேஜோமய ஆநந்தமே — ஒளிமயமாகிய இன்பமே—எ—று.

மந்த்ரமாலிசை-யோக நூல்களி லொன்று. கர்ப்பவேதனை ஐந்து வகைப்படும், அவை, கருப்பாசயத்திற் கட்டுப்பட்டிருத்தல். அதில் சலம் பூரித்திருத்தல், உதராக்நியாற் சுடப்படுதல், பிரசூதவாயுவினால் முறித்துத் தள்ளல், யோனித்வாரத்தால் நெருக்குண்டல் என்பன; இதனை சூதசங்கிதையிற் பரக்கக் காண்க. (௧)

112. இப்பிறவி யென்னுமோ ரிருட்கடலின்மூழ்கிநா
னென்னுமொரு மகரவாய்ப்பட்
டிருவினை யெனுந்திரையி னெற்றுண்டு புற்புத
மெனக்கொங்கை வரிசைகாட்டுந்
துப்பிதழ் மடந்தையர் மயற்சண்ட மாருதச்
சுழல்வந்து வந்தடிப்பச்
சோராத வாசையாங் கானாறு வானதி
சுரந்ததென மேலுமார்ப்பக்
கைப்பரிசு காரர்போ லறிவான வங்கமுங்
கைவிட்டு மதிமயங்கிக்
கள்ளவங் கக்காலர் வருவரென் றஞ்சியே
கண்ணருவி காட்டுமெளியேன்
செப்பரிய முத்தியாங் கரைசேர வுங்கருணை
செய்வையோ சத்தாகியென்
சித்தமிசை குடிகொண்ட வறிவான தெய்வமே
தேசோ மயானந்தமே.

ப-ரை. இப்பிறவியென்னும் ஒரு இருள் கடலில் மூழ்கி - இந்தச் சனன மென்னும் ஒரு கருங்கடலில் முழுகி, நான் என்னும் - நானென்கிற, ஒருமகர வாய்பட்டு-ஒரு முதலைவாயி லகப்பட்டு, இருவினை யென்னும் - இருவினைக ளென்கிற திறையின்-அலைகளால், எற்றுண்டு-அடிக்கப்பட்டு, புற்புதம் என-நீர்க்குமிழிபோல, கொங்கை வரிசைகாட்டும்-கொங்கைகளின் ஒழுங்கைக் காட்டுகின்ற, துப்பு இதழ்-பவளத்துண்டுபோன்ற உதட்டினையுடைய, மடந்தையர்-மாதர்களது, மயல்-காமமயக்கமாகிய, சண்டமாருதச்சுழல்-ஊழிக்காலப் பெருஞ்சுழல்காற்று, வந்து வந்து அடிப்ப-பலகாலும் வந்து தாக்க, சோராத ஆசை ஆம் கான் ஆறு-குறையாத ஆசையாகிய காட்டாறு, வான் நதிசுரந்தது என-ஆகாயகங்கை பெருக்கெடுத்தாற்போல, மேலும் ஆர்ப்ப-மென்மேலும் வந்துமோத, கைப்பரிசுகாரர்போல் - கைப்புணைக்காரர் போல், அறிவானவங்கமும் கைவிட்டு-ஞானமாகிற மரக்கலத்தையுங் கைவிட்டு, மதிமயங்கி-அறிவழிந்து, கள்ள வங்கம்காலர் - திருட்டுக் கப்பலை யொத்தயமபடர், வருவர் என்று அஞ்சி-வருவார்களென்று நடுங்கி, கண் அருவிகாட்டும் எளியேன்-கண்ணீரருவியைக் காட்டுகின்ற அடியேன், செப்பு அரிய-சொல்லுதற்கரிய, முத்தி ஆம் கரைசேரவும்-மோக்ஷம் என்கிற கரையை யடையவும் கருணை செய்வையோ - கிருபை செய்வையோ, சத்தாகி என் சித்தமிசைகுடி கொண்ட.

கள்ள அங்கம் காலர் எனப்பிரித்து கரிய சரீரத்தை யுடைய யமபடர் எனினுமாம். பரிசு-மூங்கிலினல் கூடைபோல பின்னி மேலே தோலால் மூடப்பட் டிருப்பதாகிய ஒருவகைத் தெப்பம். இது இக்காலத்துந் தென்னாட்டு நதிகளிற் காணப்படும்.

இந்தப் பிறவியாகிய கடலில் முழுகி அகங்காரமாகிய முதலைவாயிற் சிக்கி, இருவினைகளாகிய அலைகளால் எறியப்பட்டு, மாதர்களுடைய காமமயக்கமாகிய சுழற்காற்றடிக்க, அசையாகிய காட்டாறு மேன்மேலும் வந்துமோத. சிறுதோணிக்காரர்போல, ஞானமாகிய மரக்கலத்தையும் கைசோரவிட்டு, மதிமயங்கி திருட்டுக் கப்பல்போன்ற யமதூதர் வருவரேயென்று அஞ்சி, அருவியாறுபோலக் கண்ணீரைப்பெருக்கி, நிற்கும் எளியேன் மோக்ஷமாகிய கரையைச் சேரும்படிக்குக் கருணைசெய்வாயோ என்பதாம்.

113. தந்தைதாய் தமர்தார மகவென்னு மிவையெலாஞ்
சந்தையிற் கூட்டமிதிலோ
சந்தேக மில்லைமணி மாடமா ளிகைமேடை
சதுரங்க சேனையுடனே
வந்ததோர் வாழ்வுமோ ரிந்திரசா லக்கோலம்
வஞ்சனைபொறுமைலோபம்
வைத்தமன மாங்கிருமி சேர்ந்தமல பாண்டமோ
வஞ்சனை யிலாதகனவே
எந்தநா ளிஞ்சரி யெனத்தேர்ந்து தேர்ந்துமே
பிரவுபக லில்லாவிடத்
தேகமாய் நின்றநின் னருள்வெள்ள மீதிலே
யானென்ப தறவுமூழ்கிச்
சிந்தைநான் றெளியாது சுழலும்வகை யென்கொலோ
தேடரிய சத்தாகியென்
சித்தமிசை குடிகொண்ட வறிவான தெய்வமே
தேசோ மயானந்தமே.

ப—ரை. தந்தை-பிதா, தாய்-மாதா, தமர்-சுற்றத்தார், தாரம்-மனைவி, மகவு குழந்தை, என்னும் - என்று சொல்லப்படுகிற, இவை யெல்லாம் - இப்பொருள்களெல்லாம், சந்தையில் கூட்டம்-சந்தையில் கூடுஞ்சனக் கூட்டத்தை நிகர்க்கும், இதிலோ சந்தேகம் இல்லை—இதனிடத்திலோ ஐயஞ்சிறிது மில்லை மணிமாடம்-அழகியவீடுகள், மாளிகை மாளிகைகள், மேடை—மேடைகள் சதுரங்க சேனையுடனே — நால்வ கைச் சேனைகள்ஆகிய இவற்றுடன், வந்தது-உண்டானதாகிய, ஓர்வாழ்வும் - ஒப்பற்றவாழ்க்கையும், ஓர் இந்திரசாலக்கோலம்-ஓர் இந்திரசாலத்தினழகை நிகர்க்கும்வஞ்சனை-வஞ்சகம், பொறுமை-பொறுமைக்குணம் லோபம்-அழுக்காறு, (ஆகிய இவைகள்) வைத்த-தன்னிடத்து வைக்கப்பட்ட, மனம் ஆம் கிருமி சேர்ந்த-மனமாகிய புழுச்சேர்ந்த, மலபாண்டமோ — மலபாண்டமாகிய உடலோ! வாஞ்சனையிலாதகனவே-விருப்பஞ் செய்யப்படாத சொப்பனமே, (இவ்விஷயங்களை) எந்தநாளும்—(பெருக்கம்சுருக்கம் என்கிற) எக்காலமும், சரியெனத்தேர்ந்து தேர்ந்து-சரியென்றாராய்ந்து

தெளிந்து, இரவுபகல் இல்லாவிடத்து ஏகமாய்நின்ற-இரவும்பகலுமில்லாத தனியிடத்தில் ஒன்றுகிநின்ற, நின் அருள் வெள்ளமீதில்—உன் திருவருட்பிரவாகத்தில், யான் என்பது அறவும் மூழ்கி-யானென்னுந் தற்போதமகலமுழுகி சிந்தை - மனமானது, தெளியாது - தெளியாமல், சுழலும்வகை என்சொல்-சுழலுங்காரணம்யாது, தேடரியசத்தாகி.

"தந்தைதாய் தமர்தாரமக வென்னு மிவையெலாஞ் சந்தையிற் கூட்டம்" என்றது ஒருகாலத்தில் பலபொருள்களும் ஓரிடத்தில்வந்து சேர்தற்குரிய சந்தையில் கொல்வோர் பலர்வந்து நெருங்குதல்போல, வினைவயத்தால்வந்து ஒரு குடும்பத்திற் கூடுவோராதலின். சதுரங்கம்-அரசர்க்குரிய நால்வகைப்படை, அவை, தேர், யானை, குதிரை, காலாள் என்பன.

மலபாண்டம் - மலம் பொதிந்த பாத்திரம்.

தந்தைதாய் முதலாமுறவினர் சந்தையிற் கூடிய கூட்டம்போல்வார், மாடமாளிகை சதுரங்கசேனை யாதியவாழ்வு இந்திரஜாலம் போல்வது வஞ்சனை முதலானவைகளுக் கிடமாகிய சரீரமோ சொப்பனம் போல்வது என்று உவமித்தார். (ரு)

114. ஆடாம லோய்ந்திட்ட பம்பரம் போல்விசை
யடங்கிமனம் வீழநேரே
யறியாமை யாகின்ற விருளகல விருளொளியு
மல்லா திருந்த வெளிபோற்
கோடா தெனைக்கண் டெனக்குணிறை சாந்தவெளி
கூடியின் பாதீதமுங்
கூடினே ஞெசரியை கிரியைபின் முயன்றுநெறி
கூடினே னுவல்லன்யான்
ஈடாக வேயாறு வீட்டினி னிரம்பியே
யிலகிவளர் பிராணனென்னு
மிருநிதி யினைக்கட்டி யோகபர னுகாம
லேழைக் குடும்பனுகித்
தேடா தழிக்கவொரு மதிவந்த தென்கொலோ
தேடரிய சத்தாகியென்
சித்தமிசை குடிகொண்ட வறிவான தெய்வமே
தேசோ மயானந்தமே.

ப-ரை. ஆடாமல் ஓய்ந்திட்ட பம்பரம்போல் - ஆடாமல் நின்றுவிட்டபம்பரம்போல, மனம்விசை அடங்கிவீழ — மனமானது வேகமற்று விழவும்,நேரே—நேராக, அறியாமையாகின்ற - அஞ்ஞானமாகிய, இருள் அகல - இருள்

ஒழியவும், இருள் ஒளியும் - இருள் ஒளிகளிரண்டும் அல்லாதிருந்த - அல்லாம லிருந்த, வெளிபோல் - பரமாகாயம்போல, கோடாதுஎன்னைக்கண்டு—கோணு தலின்றி என்னைப் பார்த்து, எனக்குள் நிறை - என்னுள்ளே நிறைந்த, சாந்த வெளிகூடி - உபசாந்தமென்னும் ஆகாயத்திற்சேர்ந்து, இன்ப அதீதமும் கூடி னேனே - சுகாதீத நிலயத்தையும் பெற்றேனே, சரியை கிரியையில் முயன்று-சரியை கிரியையில்பயின்று, நெறி - சன்மார்க்கத்தை, கூடினேனே-அடைந்தேனே, அல்லன்யான் - அப்படிக் கல்லாதவனாகிய நான், ஈடாக-பெருமை யாக, ஆறுவீட்டினில் நிரம்பி - (சடாதாரங்களாகிய) ஆறுவீடுகளில் நிறைந்து, இலகிவளர் - பிரகாசித்துவளர்கின்ற, பிராணன் என்னும் - பிராணவாயு வென்கிற, இருநிதியினைக் கட்டி-பெரிய செல்வத்தைக்கட்டி, யோகபரன் ஆகாமல் யோகசிரேஷ்டனாகாமல், ஏழை குடும்பன்ஆகி ஏழைக்குடியாகி, தேடாது அழிக்க - தேடாமல் செலவுசெய்ய, ஒருமதிவந்தது - ஒருபத்தி யுண்டாயிற்று, என் — (இதற்குக்காரணம்) என்ன, தேடரிய சத்தாகியென், எ—று.

இருளொளியு மல்லா திருந்தவெளி — சகோதயமாய் விளங்கும் பரமாகாசம் யோகம்பரன் - யோகநிலை கைவந்தவனும் அதிருஷ்டவானும்.

ஆதாரம் ஆறு. அவையாவன;—மூலாதாரம் - சுவாதிட்டானம் - மணிபூரகம் - அநாகதம் - விசுத்தி-ஆக்கினை யெனப்படும். இவற்றின் ஸ்தானங்களும் இவற்றிற்குரிய அதிதேவதைகளும் அவர்களைத் தரிசிக்குமுறை முதலியனவும்நூல்களிற் பரக்கக்காண்க. (ச)

115. பாடாது பாடிப் படித்தளவில் சமயமும்
பஞ்சுபடு சொல்லனிவனைப்
பார்மினோ பார்மினோ வென்றுசபை கூடவும்
பரமார்த்த மிதுவென்னவே
ஆடாது மாடிநெஞ் சுருகிநெக் காடவே
யமலமே யேகமேயெம்
ஆதியே சோதியே யெங்குநிறை கடவுளே
யரசே யெனக்கூவிநான்
வாடாது வாடுமென் முகவாட்ட முங்கண்டு
வாடா வெனக்கருணைநீ
வைத்திடா வண்ணமே சங்கேத மாவிந்த
வன்மையை வளர்ப்பித்ததார்
தேடாது தேடுவோர் தேட்டற்ற தேட்டமே
தேடரிய சத்தாகியென்
சித்தமிசை குடிகொண்ட வறிவானதெய்வமே
தேசோ மயானந்தமே.

ப-ரை. பாடாது பாடிபடித்து - பாடாததெல்லாம் பாடிப் படித்து. அளவுஇல்—எண்ணிறந்த, சமயம் - சமயங்களும், பஞ்சுபடு சொல்லன் இவனை-பஞ்சுபோலப் பறக்கும் நொய்மையான சொற்களையுடையஇவனை, பார்மின்பார்மின் என்று - பாருங்கள் பாருங்கள் என்று சொல்லிக் கொண்டு, சபை கூடவும், கூட்டஞ் சேர்க்கவும், இதுபரமார்த்தம் என்ன - இது மேன்மை யான பொருளென்று, ஆடாதும்ஆடி - ஆடாதவகையாய்க் கூத்தாடி, நெஞ்சு உருகி நெக்குஆட - மனமுருகி நெகிழ்ந்தாட, அமலமே - பரிசுத்த வஸ்துவே, ஏகமே - ஒன்றே, எம் ஆதியே - எமக்கு முதன்மை யானவனே, சோதியே - ஒளியே, எங்கும் நிறைகடவுளே-எவ்விடத்தும் பூரணமாக விளங்குங் கடவுளே அரசே — மன்னனே, எனக்கூவி — என்று (பலவகையாக) அழைத்து, நான் வாடாதுபாடும் - நான் (ஒருவரும்) வாடாதவகையாய் வாடுகின்ற, என்முகவாட்டமும்கண்டு - என் முகவாட்டத்தையும் நோக்கி, வாடாஎன - வாடாவென்று, நீ கருணைவைத்திடா வண்ணம் - நீ கிருபைசெய்யாத காரணம், சங்கேதமா—நியமமாக, இந்தவன்மையை வளர்ப்பித்தது ஆர் - இந்தக் கடினத்தன்மையை விருத்தி செய்வித்ததுயார், தேடாது தேடுவார் — தேடாது தேடுவோராகிய அறிஞர்க்கும், தேட்டு அற்ற தேட்டமே - தேடுதலில்லாத திரவியமேதேடரிய சத்தாகியென், எ-று.

தற்போதத்தை முன்னிடாது திருவருளை முன்னிட்டுத் தேடுவோரைத் தேடாது தேடுவோர் என்றார். நான்வாடும் வாட்டத்தைக்கண்டும் இரங்காதமனவன்மையை உனக்குக் கற்பித்ததுயார் என்றார். (ரு)

116. பிறியாத தண்ணருட் சிவஞானி யாய்வந்து
பேசரிய வாசியாலே
பேரின்ப வுண்மையை யளித்தனையென் மனதறப்
பேரம் பலக்கடவுளாய்
அறிவா யிருந்திடும் நாதவொலி காட்டியே
யமிர்தப்ர வாகசித்தி
அருளினை யலாது திரு வம்பலமு மாகியெனை
யாண்டனைபி னெய்திநெறியாய்க்
குறிதா னளித்தனைநன் மரவுரிகொ ளந்தணக்
கோலமா யசபாநலம்
கூறினபின் மௌனியாய்ச் சும்மாவிருக்கநெறி
கூட்டினை யெலாமிருக்கச்
சிறியேன் மயங்கிமிக வறிவின்மை யாவனோ
தேடரிய சத்தாகியென்
சித்தமிசை குடிகொண்ட வறிவான தெய்வமே
தேசோ மயானந்தமே

ப-ரை. பிறியாத தண்அருள் - ஒழியாத பேரருளையுடைய, சிவஞானியா ய்வந்து - சிவஞானியாகி எழுந்தருளி, பேசு அரிய வாசியால் - சொல்லுதற்க ரிய வாயுதாரணையினால், பேரின்ப வுண்மையை - பேரானந்த உண்மையை அ ளித்தனை - கொடுத்தருளினை, என்மனது அற - என்மனமிறக்க, பேரம்பலக் கடவுளாய் - சிற்சபையிலுற்ற கடவுளாகி, அறிவா யிருந்திடும் — அறிவுருவாயி ருக்கின்ற, நாதவொலி காட்டி - நாதவோசையைக் காண்பித்து, அமிர்தப்ரவா கசித்தி - அமிர்தப் பெருக்கின் பேற்றை, அருளினை - கொடுத்தருளினை, அ லாது - அன்றியும், திருவம்பலமும் ஆகி - திருவம்பல ரூபமுமாகி, என்னையா ண்டனை - என்னை யடிமைகொண்டாய், பின்எய்தி - பிறகுவந்து, நெறி ஆய்- முறைமையாய், குறிதான் அளித்தனை - இலக்கையு மருள்செய்தாய், நல்மரவு ரிகொள்-சிறந்த மரவுரியைத்தரித்த, அந்தணக் கோலமாய் - வேதியரூபமாகி, அசபாநலம் கூறினபின் - அஜபாமந்த்ரம் எனக் குபதேசித்த பிறகு, மௌனி ஆய் சும்மாஇருக்க - மௌனியாகிச் சும்மா விருக்கும்படி, நெறி கூட்டினை-என் னெறிக்கட் சேர்த்தாய், எல்லாம் இருக்க - இவைகளெல்லா மிருக்க, சிறியே ன்-அறிவிற் சிறியேனாகிய நான் - மயங்கி - மயக்கங்கொண்டு. மிக அறிவின் மை யாவனோ — மிகுதியும் அஞ்ஞானியாய் விடுவேனோ, தேடரிய சத்தாகி யென், எ-று.

வாசி இவ்விடத்துக் காற்றைவுணர்த்தி நின்றது. அஜபம் செபியாதுசெ பித்தல். வினைகளை நீறுபடுத்தலால் அஜபத்தை அக்கினியென்பர். சிவஞானி முதலாகிய பலவுருவங்களாய் வந்து நீ உபகரித்திருந்தும், சிறியேன் மயங்கி அஞ்ஞானியாய் விடுவதுதகவோ என்பது. (கூ)

117. ஆராரெனக்கென்ன போதித்து மென்னவென்
னறிவினை மயக்கவசமோ
அண்டகோ டிகளெல்லாங் கருப்பவறை போலவு
மடுக்கடுக் காவமைத்துப்
போரம னின்றபர வெளியிலே மனவெளி
பிறங்குவத லாதொன் றினும்
பின்னமுத மருவாது நன்னயத் தாலினிப்
பேரின்ப முத்திநிலையும்
தாராது தள்ளவும் போகாது னலது
தள்ளினும் போகேனியான்
தடையேதுமில்லைபாண் டவனடிமை யென்னுமிரு
தன்மையினு மென்வழக்குத்
தீராது விடுவதில்லை நடுவான கடவுளே
தேடரிய சத்தாகியென்
சித்தமிசை குடிகொண்ட வறிவான தெய்வமே
தேசோ மயானந்தமே.

ப-ரை. ஆர் ஆர் - எவ்வெவரும், எனக்கு - அடியேனுக்கு, என்னபோதித்தும் - ஏதைப் போதிப்பினும், என்ன (அதனால்) - என்னலாபம், என் அறிவினை மயக்கவசமோ - என் புத்தியைமயக்க முடியுமோ, அண்டகோடிகள் எல்லாங் — அண்டகோடிகளை யெல்லாம், கருப்ப அறைபோலவும் — கர்ப்ப வீடுபோலவும், அடுக்கு அடுக்கா அமைத்து - வரிசை வரிசையாயமைத்து, பேராமல்நின்ற - நிலைபெறுது நின்ற, பரவெளியிலே - பரமாகாயத்தில், மனவெளி பிறங்குவது அல்லாது - மனுகாயம் விளங்குவதன்றி, ஒன்றினும் - பிறிதொன்றிலும், பின்னம் உறமருவாது - அழியும்படி பொருந்தாது நல்நயத்தால் நல்ல இச்சையால், இனி - இனி, பேரின்ப முத்திநிலையும்-பேரானந்த ஹேதுவான மோக்ஷநிலையையும், தாராது - கொடாமல், தள்ளவும் போகாது - தள்ளவும்படாது, உன்னால் அதுதள்ளினும் - உன் நியமனத்தால் அதை நீக்கினாலும்,யான்போகேன் — நான் செல்லமாட்டேன், தடையேதும் இல்லை - அட்டி சிறிதுமில்லை, ஆண்டவன் அடிமையென்னும் —ஆண்டவன் அடிமையென்கிற, இருதன்மையிலும் - இருதன்மையினாலும், என் வழக்குதீராது - என் விவகாரம் தீர்ந்தொழியாது, (ஒழியாவிடினும்) விடுவது இல்லை - நானேவிடுதல் இல்லை நடுவான கடவுளே - நடுவு நிலைமையாய் விளங்கும் கடவுளே, தேடரிய சத்தாகியென், எ-று.

பஞ்ச கிருத்தியங்களாவன சிருட்டி, திதி, சங்காரம், திரோபவம், அநுக்கிரகம் என்பன. நடுவாதல் - அப்பஞ்ச கிருத்தியங் களுக்கும் பொதுவாதல். யாரென்ன சொன்னாலும் என்புத்தியை மயக்கமுடியாது, பரவெளியில் என் மனம் பொருந்துமன்றி வேறொன்றிற் பொருந்தாது, இனி தள்ளினாலும் நான்போகமாட்டேன், நீயும்நானும் ஆண்டான் அடிமையென்கிறவழக்கும் ஒழியாது, உன்னைவிடமாட்டேன் என்பதுகருத்து. (எ)

118. கந்துக மதக்கரியை வசமா நடத்தலாங்
கரடிவெம் புலிவாயையும்
கட்டலா மொருசிங்க முதுகின்மேற் கொள்ளலாங்
கட்செவி யெடுத்தாட்டலாம்
வெந்தழலி னிரதம்வைத் தைந்துலோ கத்தையும்
வேதித்து விற்றுண்ணலாம்
வேறொருவர் காணம லுலகத் துலாவலாம்
விண்ணவரை யேவல்கொளலாம்
சந்ததமு மிளமையோ டிருக்கலா மற்றொரு
சரீரத்தி னும்புகுதலாம்
சலமே னடக்கலாங் கனன்மே லிருக்கலாந்
தன்னிகரில் சித்திபெறலாம்
சிந்தையை யடக்கியே சும்மா விருக்கின்ற
திறமரிது சத்தாகியென்
சித்தமிசை குடிகொண்ட வறிவான தெய்வமே
தேசோ மயானந்தமே.

ப—ரை. கந்துக மதக்கரியை வசமா நடத்தல் ஆம் — (இவ்வுலகத்தில்) குதிரைகளையும் மதயானைகளையும் கைவசமாக்கி நடத்தல் கூடும், கரடிவெம் புலி வாயையும் கட்டலாம் - கரடி வாயையும் வெவ்விய புலிவாயையும் கட்டு தல் கூடும், ஒரு சிங்க முதுகின்மேற் கொள்ளலாம் - ஒப்பற்ற சிங்கத்தின் முதுகின்மேலேறி உட்கார்ந்திருத்தல் கூடும், கட்செவி எடுத்து ஆட்டலாம்— பாம்புகளைப் புற்றினின்றும் வெளிப்படுத்தி யாட்டுவித்தல் கூடும், வெம் தழ லின் - வெவ்விய நெருப்பில், இரதம் வைத்து—பாதரசத்தையிட்டு, ஐந்துலோ கத்தையும் - பஞ்சலோஹங் களையும், வேதித்து — ஸ்பரிச வேதிசெய்து, விற்று - விலைப்படுத்தி, உண்ணலாம் - (அப்பொருளைக்கொண்டு) உண்டுபி ழைக்சலாம், வேறொருவர் காணாமல் - மற்றொருவர் பாராதிருக்க, உலகத்து உலாவலாம் — உலகின்கண் சஞ்சரிக்கலாம், விண்ணவரை ஏவல்கொளலாம்— தேவர்களை ஏவல்கேட்கச் செய்யலாம், சந்ததமும் - எக்காலமும், இளமை யொடு இருக்கலாம் - இளமைப் பருவத்துடனிருக்கலாம், மற்றொரு சரீரத்தி னும் புகுதலாம் - வேறொரு தேகத்தினும் பிரவேசிக்கலாம், சலமேல் நடக்க லாம் - நீரின்மேல் நடக்கலாம், கனல்மேல் இருக்கலாம் - நெருப்பின்மேல்தங்கி யிருக்கலாம், தன் நிகர் இல் சித்தி பெறலாம்—தனக்குச் சமானமில்லாத (பிற) சித்திகளையும் பெறலாம், சிந்தையை அடக்கி—மனத்தை (புறஞ்செல்லாது) அடக்கி, சும்மா இருக்கின்ற திறம் அரிது - சும்மா விருக்கும் வகை யருமை யாகும், சித்தமிசை. எ—று.

பொன், வெள்ளி, செம்பு, இரும்பு, ஈயம் என்பன, பஞ்சலோஹங்கள். ஸ்பரிசவேதி செய்தல் - பொன்னாக்குதல், மற்றொரு சரீரத்திற் புகுதலைப்பர காயப்ரவேசமென்பர். சலமேல் நடத்தலையும் கனன்மே லிருத்தலையும் முறை யே, ஜலஸ்தம்பநமெனவும் அக்நிஸ்தம்பநமெனவுங் கூறுவர். மிருகங்களுள் தனக்குச் சமானமற்றதாதலால், சிங்கத்தை ஒரு சிங்கமென்றார். கந்துகம்—குறு நிலமன்னர் குதிரை. கட்செவி - கண்ணையே செவியாகவுடையது. அது சத் தத்தை யுணருகையில் ரூபத்தை யுணராதென்றும், ரூபத்தையுணருகையில் சத்தத்தை யுணராதென்றும் வாகடநூலார் கூறுவர் வேறொருவர் காணாமலு லாவுவதைத் திரோபவசக்தி யென்பர். (அ)

119. எல்லா மறிந்தவரு மேதுமறி யாதவரு
மில்லையெனு மிவ்வுலகமீ
தேதுமறி யாதவ னெனப்பெயர் தரித்துமிக
வேழைக்கு ளேழையாகிக்
கல்லாத வறிவிற் கடைப்பட்ட நானன்று
கையினு லுண்மைஞானம்
கற்பித்த நின்னருளி னுக்கென்ன கைம்மாறு
காட்டுவேன் குற்றேவலுன்
அல்லார்ந்த மேனியொடு குண்டுகட் பிறையெயிற்
றுபாச வடிவமான

அந்தகா நீயொரு பகட்டாற் பகட்டுவ
தடாதடா காசுநம்பாற்
செல்லாத டாவென்று பேசவா யதுதந்த
செல்வமே சத்தாகியென்
சித்தமிசை குடிகொண்ட வறிவான தெய்வமே
தேசோ மயானந்தமே.

ப-ரை. எல்லாம் அறிந்தவரும் — எல்லா முணர்ந்தவர்களும், ஏதும் அறியாதவரும்—ஒன்று முணராதவர்களும், இல்லை என்னும் - இல்லையென்றுசொல்லுதற்குரிய, இவ்வுலகமீது -- இந்தப் பூலோகத்திலே, ஏதும் அறியாதவன் என - ஒன்று மறியாதவனென்று, பெயர்தரித்து—பெயர்படைத்து, மிகஏழைக்குள் ஏழையாகி - மிகவும், அறிவீனர்களுக்குள் அறிவீனனாய் கல்லாத அறிவின் - (கற்கவேண்டுமெவற்றைக்) கல்லாத புல்லறிவினால், கடைப்பட்ட நான்-கீழ்மையாகிய நான், அன்று — அக்காலத்தில், கையினால் - கையமைப்பால்,உண்மை ஞானம்கற்பித்த - மெய்ஞ்ஞானத்தைப் போதித்த, நின்-உனது, அருளினுக்கு — திருவருளுக்கு, குற்றேவல் நான் - குற்றேவற்குரி அடியனேன், கைம்மாறு என்னகாட்டுவேன் — பிரதியுபகாரம் என்ன செய்யவல்லேன், அல் ஆர்ந்த மேனியொடு - இருள்நிறைந்த தேகத்துடன், குண்டுகண்—ஆழ்ந்தகண்களையும், பிறை எயிறு - பிறைபோன்ற வக்கிரதந்தங்களையுமுடைய, ஆபாசவடிவான - பார்த்தோர் பழிக்கத்தக்க (பயங்கரமான) ரூபத்தோடு கூடிய, அந்தகா - யமனே, நீஒருபகட்டால் பகட்டுவது - நீயொரு கடாவைக்கொண்டு மயக்குதல், அடா தடா — தகாதடா, காசுநம்பால் செல்லாதடா - உன்காசு நம்மிடத்தில் செல்லமாட்டாதடா, என்றபேச — என்று (உரத்து) பேசுதற்கு, வாய்தந்த - வாக்கு வன்மைகொடுத்த, செல்வமே - எனது பாக்கியமே, சத்தாகியென் சித்தமிசை, எ-று.

கடவுளருள் பெற்றோர் இவ்வாறு இயமனை மதியாது கூறுவதை.

"பட்டிக்கடாவில் வருமந்தகா வுனைப்பாரறிய
வெட்டிப் புறங்கண்டலாது விடேன்வெய்ய சூரனைப்போய்
முட்டிப்பொருத செவ்வேற் பெருமாடிரு முன்புநின்றேன்
கட்டிப்புறப்படடா சத்திவாளென்றன்கையதுவே" என்பதனுனறிக.

120. மின்போலு மிடையொடியு மொடியுமென மொழிதல்போல்
மென்சிலம் பொலிகளார்ப்ப
வீங்கிப் புடைத்துவிழு சுமையன்ன கொங்கைமட
மின்னார்கள் பின்னுவலாய்
என்போ லலைந்தவர்கள் கற்றார்கள் கல்லார்க
ளிருவர்களி லொருவருண்டோ

என்செய்கே னம்மம்ம வென்பாவ மென்கொடுமை
யேதென் றெடுத்துமொழிவேன்
அன்பால் வியந்துருகி யடியற்ற மரமென்ன
வடியிலே வீழ்ந்துவீழ்ந்தெம்
அடிகளே யுமதடிமை யாங்களென நால்வருக்
கறமாதி பொருளுரைப்பத்
தென்பாலின் முகமாகிவடவா லிருக்கின்ற
செல்வமே சத்தாகியென்
சித்தமிசை குடிகொண்ட வறிவான தெய்வமே
தேசோ மயானந்தமே.

ப—ரை. மின்போலும் இடை – மின்னற் கொடியை யொத்த இடையானது, ஒடியும் ஒடியும்என மொழிதல்போல் - ஒடியு ஒடியுமென்று சொல்வதுபோல, மென்சிலம்பு ஒலிகள் ஆர்ப்ப – மெல்லிய காற்சிலம் போசைகள் ஆர்ப்பரிக்க, வீங்கி—பூரித்து, புடைத்து - புடைகொண்டு, விழு - (சிலநாளில்) தளர்ந்தொழியாநின்ற, சுமை அன்ன – பெரும்பாரத்தையொத்த, கொங்கை - முலைகளையுடைய மடமின்னார்கள் பின்-இளமைபொருந்திய மாதர்கள் பின்னே ஆவலால் - (அவர்கள் மேல்வைத்த) விருப்பத்தால், என்போல் அலைந்தவர்கள் என்னைப்போலத் திரிந்தவர்கள், கற்றூர்கள் கல்லார்கள் - கற்றவர்கள் கல்லாதவர்கள் என்கிற, இருவர்களில் - இருவகையினருள், ஒருவர் உண்டோ – ஒருவராயினுமுளரோ என்செய்கேன் - என்னசெய்வேன், என்பாவம் - என்பாவத்தையும், என்கொடுமை – என்கொடுமைகளையும், ஏதென்று எடுத்து மொழிவேன் – (யான்) என்னென் றெடுத்துச் சொல்லுவேன், அன்பால், வியந்து உருகி - அன்பினால் துதித்து (மனங்) கரைந்து, அடிஅற்றமரம் என்ன – வேரற்றமரம்போல, அடியிலேவீழ்ந்து வீழ்ந்து - உனதுதிருவடியில் பன்முறை விழுந்து, எம் அடிகளே - எமதுகடவுளே, யாங்கள் உமதுஅடிமை என்னும்—நாங்கள் உமதுஅடிமைகள் என்றுபிரார்த்தித்த, நால்வருக்கு - (சநகாதிகளாகிய) நால்வருக்கும், அறமாதி பொருள்உரைப்ப - தர்மாதிகளாகிய பொருள்களை உபதேசித்தற்காக, தென்பாலின் முகமாகி - தெற்குத்திசையின் முகமாகி, வடவால் இருக்கின்ற - கல்லாவின் நிழலில் எழுந்தருளி யிருக்கின்ற, செல்வமே- (எமது) செல்வமே, சத்தாகியென் சித்தமிசை, எ-று.

அம்மம்ம என்பது உரையசையடுக்கு. அறமாதிபொருள் – தர்மார்த்தகாமிய மோக்ஷங்கள். (கO)

121. புத்தமிர்த போகமும் கற்பகந னீழலிற்
பொலிவுற விருக்குமியல்பும்
பொன்னுலகி லயிரா வதத்தேறு வரிசையும்
பூமண்ட லாதிக்கமும்

மத்தவெறி யினர்வேண்டு மாலென்று தள்ளவுமெ
மாலுமொரு சுட்டுமறவே
வைக்கின்ற வைப்பாளன் மௌனதே சிகனென்ன
வந்தநின் னருள்வாழிகாண்
சுத்தபரி பூரண வகண்டமே யேகமே
சுருதிமுடி வானபொருளே
சொல்லரிய வுயிரினிடை யங்கங்கு நின்றருள்
சுரந்துபொழி கருணைமுகிலே
சித்திநிலை முத்திநிலை விளைகின்ற பூமியே
தேடரிய சத்தாகியென்
சித்தமிசை குடிகொண்ட வறிவான தெய்வமே
தேசோ மயானந்தமே.

ப-ரை. புது அமிர்த போகமும் — நூதனமாகிய அமிர்தாநுபவமும், கற்பகநல்நீழலில் - கற்பகவிருக்ஷத்தின் நல்ல நிழலில், பொலிவுற இருக்கும் இயல்பும் - விளக்கமாக வீற்றிருக்குந் தன்மையும், பொன்னுலகில் - சுவர்க்கலோகத்திலுள்ள, அயிராவதத்து ஏறு - ஐராவதமென்னும் யானையின் மேலேறுகின்ற, வரிசையும்—புகழும், பூமண்டல ஆதிக்கமும் - பூமண்டலத்தில் ஏற்றமும் மத்த வெறினர்வேண்டும் - பிரபஞ்ச மாயையாகிய பித்தங்கொண்ட வெறியாளரால் விரும்பப்படுகின்ற, மால் - ஆசையின் விவகாரம் என்று - துணிந்து தள்ளவும் - ஒழிக்கவும், எம்மாலும் - எங்களாலும், ஒருசுட்டுஅறவும் - ஒருசுட்டுதல் அற்றொழியவும், வைக்கின்ற வைப்பாளன் — எம்மை (மௌன நிலையில்) வைக்கின்ற பெருமையாளன், மௌனதேசிகன் என்ன—மௌனகுரு வென்று சொல்லும்படி, வந்த — எனக்குமெழுந்தருளிய, நின்அருள்வாழி - உன் திருவருள்வாழ்க, சுத்தபரிபூரண அகண்டமே - சுத்தமும் மிகுபூர்த்தியுள்ள அகண்ட ரூபமே, ஏகமே - தனியானபொருளே, சுருதிமுடிவு ஆனபொருளே — வேதமுடிவாகிய வஸ்துவே, சொல்அரிய - அளவிட்டு உரைத்தற்கரிய, உயிரினிடை-சீவர்களிடத்து, அங்குஅங்குநின்று - அவ்வவ்விடங்களில் (வியாபித்து) நின்று அருள் சுரந்துபொழி - அருள் மழையைச் சுரந்து சொரியாநின்ற கருணைமுகிலே - கிருபாமேகமே, சித்திநிலை - சித்திநிலை, முத்திநிலை - முத்திநிலையாகியபயிர்கள், விளைகின்ற பூமியே - விளைகின்ற நன்னிலமே, தேடரிய சத்தாகியென் சித்தமிசை, எ-று.

ஐராவதம் — நாலுகொம்புகளுடைய வெள்ளையானை. (கக)

சிற்சுகோதயவிலாசம்.

122. காக மோடுகழு கலகை நாய்நரிகள்
சுற்று சோறிடு துருத்தியைக்
காலி நண்டுநவ வாசல் பெற்றுவளர்
காம வேண்டன சாலையை

மோக வாசைமுறி யிட்ட பெட்டியைமு
மலமி குந்தொழுகு கேணியை
மொய்த்து வெங்கிருமி தத்து கும்பியை
முடங்க லார்கிடை சரக்கினை
மாக விந்திரதனு மின்னை யொத்திலக
வேத மோதிய குலாலனூர்
வனைய வெய்யதடி கார னையமன்
வந்த டிக்குமொரு மட்கலத்
தேக மானபொயை மெய்யெ னக்கருதி
யைய வையமிசை வாடவோ
தெரிவ தற்கரிய பிரம மேயமல
சிற்சு கோதய விலாசமே.

ப-ரை. காகமோடு — காகங்களோடு, கழுகு - கழுகுகளும், அலகை-பேய்களும், நாய்-நாய்களும், நரிகள்-நரிகளும், சுற்று - சுற்றுதற் கிடமாகிய சோறு இடு துருத்தியை - சோற்றைஇடுகின்ற தோற்பையை, இரண்டுகால் - இரண்டுகால்களையும், நவவாசல் - ஒன்பதுவாயில்களையும், பெற்றுவளர் - பெற்றுவளராநிற்கிற, காமவேள் நடன சாலையை - மன்மதனது நிருத்த சாலையை, மோகம் ஆசைமுறியிட்ட பெட்டியை - மோகம் ஆசைஎன்னுமிவற்றை யெழுதிய முறிசீட்டைச் சேமித்து வைத்திருக்கிற பெட்டியை, மும்மலம் மிகுந்துஒழுகுகேணியை - மும்மலங்கள் அதிகரித்துச் சொரியுங் கிணற்றை, வெம்கிருமி-வெவ்வியபுழுக்கள், மொய்த்து - நெருங்கி, தத்து-நெளியாநின்ற, கும்பியை நரகத்தை, முடங்கள்ஆர்-குற்றம் நிறைந்த, கிடைசரக்கினை - கிடைச்சரக்கை மாகம் — ஆகாயத்தில் காணப்படுகிற, இந்திர தநு-இந்திரவில்லையும், மின்னை-மின்னலையும், ஒத்து - ஒப்பாகி, இலக-விளங்கும்படி, வேதம்ஓதிய குலாலனூர்-வேதங்களைப்படித்த குயவர், வனைய - உண்டாக்க, யமன்ஆன-யமனாகிய, வெய்யதடிகாரன் — கொடியதடிகாரன், வந்துஅடிக்கும் — வந்துஅடித்து உடைக்கின்ற, ஒருமட்கலம் - ஒருமட்கலம் போன்ற, தேகமான - உடலாகிய, பொய்யை - பொய்ப்பொருளை, மெய்எனக்கருதி - மெய்ப்பொருளென்று எண்ணி, ஐய-ஐயனே, வைய மிசைவாடவோ - உலகின்மேல் வாடிநிற்கவோ, தெரிவதற்குஅரிய - அரிதற்கரிதாகிய, பிரமமே - பிரமப்பொருளே, அமலம் பரிசுத்தமாகிய, சிற்சுகோதயவிலாசமே — ஞானசுகோதய லீலையே, எ-று.

ஆணவம், மாயை, காமியம்என்பன மும்மலங்கள், வேதமோதிய குலாலனூர்—பிரமன். கிடைச்சரக்கு - விலைப்படாதசரக்கு.

ஐயனே, காகம் முதலியவைகளுக்கு விருந்தாயும், பிறவாயுமுள்ள தேகமாகிய மெய்ப்பொருளை மெய்ப்பொருளாயெண்ணி இவ்வுலகத்தில், வாட்டமடைந்து திரியமாட்டேனென வருந்தியதாம். (க)

123. குறிகளோடுகுண மேது மின்றியன
லொழுக நின்றிடு மிரும்பனல்
கூட லின்றியது வாயி ருந்தபடி
கொடிய வாணவ வறைக்குளே
அறிவ தேதுமற வறிவி லாமைமய
மாயி ருக்குமெனை யருளினல்
அளவி லாததநு கரண மாதியை
யளித்த போதுனை யறிந்துநா
பிறிவி லாதவண நின்றி டாதபடி
பல நிறங்கவரு முபலமாய்ப்
பெறிய மாயையி லழுந்தி நின்னது
பிரசாத நல்லருண் மறந்திடும்
சிறிய னேனுமுனை வந்த ணைந்துசுக
மாயி ருப்பதினி யென்றுகாண்
தெரிவ தற்கரிய பிரம மேயமல
சிற்சு கோதய விலாசமே.

ப - ரை. குறிகளோடு குணம் ஏதும் இன்றி - அடையாளங்க ளுடன் குணம் சிறிதுமில்லாமல், அனல் ஒழுக நின்றிடும் இரும்பு - நெருப்புதிர நின்ற இரும்பானது. அனல்கூடலின்றி - நெருப்போடு சேராமல், அதுவாயிருந்தபடி அவ்விரும்பாகவே இருந்தவண்ணம், கொடிய ஆணவஅறைக்குள்ளே - கொடிதாகிய ஆணவமாகிய வீட்டுக்குள்ளே, அறிவது ஏதும் அற - அறிதற்றன்மை சிறிதுமற்று, அறிவில்லாமை மயமாய் இருக்கும் - அறிவின்மையே உருவாயிருக்கிற, என்னை - அடியேனை, அருளினல் - கிருபையினல், அளவு இல்லாத தநுகரணமாதியை அளித்தபோது-எண்ணிறந்ததநுகரணங்களைப் பிரசாதித்த போது, உன்னை அறிந்து - உன்னைத்தெரிந்துகொண்டு, நான்-அடியேன், பிறிவு இல்லாதவண்ணம் நின்றிடாதபடி - பிரியாதவகைநிலைத்திராமல், பலநிறம் கவரும் உபலமாய் - பலநிறங்களைக் கவருமியற்கையதாகிய பளிங்குக்கல்லைப்போன்று, பெரியமாயையில் அழுந்தி – பெரிய மாயா சமுக்திரத்தி லாழ்ந்து, நின்னதுபிரசாதம்-உனது அநுக்கிரகமாகிய, நல்லருள்மறந்திடும் - சிறந்த கிருபையை மறந்துவிடுகின்ற, சிறியனேனும் - அற்பனுகிய நானும், உன்னைவந்து அணைந்து – உன்னைவந்து கலந்து, சுகமாயிருப்பது – இன்பமயமாயிருக்க வாய்ப்பது, இனி என்று - இனி எக்காலம், தெரிவதற்கரிய. ஒ—று.

தநுகரணமாதி - தநு, கரணம், புவனம், போகம் என்பன உபலம்—பளிங்குக்கல். அது பலநிறம் கவரும் இயற்கையுடையது.

மாயைக் கடலிலழுந்து, உனது பேரருளாகிய பிரசாதத்தை மறந்தசிறியேனும், உன்னை வந்து பொருந்திச் சுகமாயிருக்கும் நாள் இனி யெந்நாள் என்பது கருத்து. (உ)

124. ஐந்து பூதமொரு கான னீரென
வடங்க வந்தபெரு வானமே
ஆள யந்தநடு வேது மின்றியரு
ளாய்நி றைந்திலகு சோதியே
தொந்த ரூபமுட னருப மாதிகுறி
குணமி றந்துவளர் வஸ்துவே
துரிய மேதுரிய வுயிரி னுக்குணர்வு
தோன்ற நின்றருள் சுபாவமே
எந்த நாளுநடு வாகி நின்றொளிரு
மாதியே கருணைநீதியே
எந்தை யேயென விடைந்தி டைந்துருகு
மெளிய னேன்கவலை தீரவும்
சிந்தை யானதை யறிந்து நீயுனருள்
செய்ய நானுமினி யுய்வனோ
தெரிவ தற்கரிய பிரம மேயமல
சிற்சு கோதய விலாசமே.

ப—ரை. ஐந்துபூதம் - பஞ்சபூதங்களும், ஒரு கானல் நீர் என அடங்க—ஒருகானல் நீர்போல அடங்கும்படி, வந்த - உண்டாகிய, பெருவானமே - பெரிய ஆகாயமே, ஆதி அந்தம் நடு ஏதும் இன்றி - முதலிடை கடைகள் சிறிதுமில்லாமல், அருளாய்நிறைந்து இலகுசோதியே - அருளாய்நிறைந்து விளங்காநின்ற ஒளியே, தொந்தரூபமுடன் - தொந்தரூபத்துடன், அருபமாதி - அருவம் முதலாகிய, குறிகுணம் இறந்து - அடையாளம்குணம் இவற்றைக்கடந்து வளர் - வளர்கின்ற, வஸ்துவே - பொருளே, துரியமே - துரிபதமே, துரியம்-துரியமாகிய, உயிரினுக்கு - உயிருக்கு, உணர்வுதோன்ற - அறிவுசனிக்கும்படி நின்று அருள் - நின்றருள்கின்ற, சுவாபமே - ஸ்வாபாவிகமே, எந்தநாளும்-எக்காலமும், நடுவாகி நின்று - நடுவுநிலைமையாய்நின்று, ஒளிரும்-பிரகாசிக்கின்ற, ஆதியே - முதலே, கருணை - கிருபையோடுகூடிய, நீதியே நியாயசாத்திரமே, எந்தையே - எமது தந்தையே, என - என்று, இடைந்து இடைந்து உருகும்-நெகிழ்ந்து நெகிழ்ந்துருகாநின்ற, எளியனேன் கவலைதீரவும் - எளியேனது கிலேச மொழியவும், சிந்தையானதை அறிந்து - என்மனக் கருத்தை யுணர்ந்து, நீ உன் அருள்செய்ய — நீ உன் கிருபைபுரிய, (அசைப்பெற்று) நானும் இனி உய்வனோ - நானும் இனி உச்சீவிப்பேனோ, தெரிவதற்கரிய—எ-று.

ஒறுக்குங் காலத்து மிரக்கமுண் டென்பார் கருணை நீதியென்றார், வானமே சோதியே, தொந்தரூபமுதலிய கடந்து வளர்கின்ற வஸ்துவே, சுபாவமே-நீதியே, என்று பலவிதமாய்ப்புகழ்ந்து மனம்நைந்து வருந்துகின்ற எளியேனது கவலைநீங்க, என்கருத்தறிந்து நீயருள்செய்ய நானும்உய்வேனோ என்று பிரார்த்தித்தோம். (ரு)

125. ஐவ ரென்றபுல வேடர் கொட்டம
 டடங்க மர்க்கடவன் முட்டியாய்
அடவி நின்றுமலை யருகி னின்றுசரு
 காதி தின்றுபனி வெயிலினால்
மெய்வ ருந்துதவ மில்லை நற்சரியை
 கிரியை யோகமெனு மூன்றதாய்
மேவு கின்றசவு பான நன்னெறி
 விரும்ப வில்லையுல கத்திலே
பொய்மு டங்குதொழில் யாத தற்குநல
 சார தித்தொழி னடத்திடும்
புத்தி யூகமறி வற்ற மூகமிவை
 பொருளெ னக்கருது மருளன்யான்
தெய்வ நல்லருள் படைத்தவன்பரொடு
 சேர வுங்கருணை கூர்வையோ
தெரிவ தற்கரிய பிரம மேயமல
 சிற்சு கோதய விலாசமே.

ப-ரை, ஐவர் என்ற ஐவரென்று சொல்லப்படுகிற, புலம் - புலன்களாகிய, வேடர் - வேடர்களது, கொட்டம் அடங்க - ஒழுங்கற்ற நடை யடங்க, மார்க்கடவன்முட்டியாய் குரங்கினதுவலியபிடியைப்போன்ற பிடிப்பையுடையேனாய், அடவிநின்று - காட்டில்தங்கியும், மலை அருகில்நின்று - மலையருகில் வசித்தும். சருகு ஆதி தின்று - சருகு முதலியவற்றைப் புசித்தும், பனிவெயிலினால் - பனிவெயில்களால், மெய்வருந்து - உடல் வருந்துதற்குரிய, தவம் இல்லை - தவஞ்செய்தல் இல்லை, நல் - சிறந்த, சரியை கிரியை யோகம் என்னும் சரியை கிரியை யோகமென்கிற, மூன்றதாய்மேவுகின்ற - மூன்றாகப்பொருந்திய, சவுபானம் - படிகளாகிய, நல்நெறி - நல்வழியை, விரும்பவில்லை - இச்சிக்கவில்லை, உலகத்திலே - உலகின்கண், பொய்முடங்கு தொழில்யாது - பொய்யாகிய தொழில்யாதோ, அதற்கு - அத்தொழிலுக்கு, நல்லசாரதித் தொழில் நடத்திடும்புத்தி - நல்லசாரதித் தொழிலை நடத்துகின்ற, புத்தியும் யூகம்-யுக்தியும், அறிவு அற்றமூகம் - அறிவில்லாத மூகத்தன்மையுமாகிய இவைகளையே, பொருள் எனக் கருதும் (மெய்ப்) பொருள்களென்று நினைக்கின்ற, மருளன் யான் - மயக்கத்தையுடையோனாகிய நான், தெய்வம்-தைவிகமான, நல் அருள் படைத்த - நல்லகிருபையைப்பெற்ற, அன்பரோடுசேரவும் - உன் அன்பருடன் சேர்ந்து வாழவும், கருணை கூர்வையோ - கருணை புரிவையோ, தெரிவதற்கரிய,—எ-று.

மர்க்கடம் - குரங்கு கொட்டம் - கொடுமை மருளன் - பிறழ வுணர்ந்தோன். சவுபானம் - படி. இதுசோபானமெனவும் வழங்கும். (௪)

126. ஏக மானவுரு வான நீயருளி
னாலு னேகவுரு வாகியே
எந்த நாளகில கோடி சிர்ஷ்டிசெய
விசையு நாள்வரைய நாண்முத
லாக நாளது வரைக்கு முன்னடிமை
கூட வேசனன மானதோ
அநந்த முண்டுநல சனன மீதிதனு
ளறிய வெண்டுவன வறியலாம்
மோக மாதிதரு பாச மானதை
யறிந்து விட்டுனையு மெனையுமே
முழுது ணர்ந்துபர மான வின்பவெள
மூழ்க வேண்டுமிது வின்றியே
தேக மேநழுவி நானு மோநழுவின்
பின்னை யுய்யும்வகை யுள்ளதோ
தெரிவ தற்கரிய பிரம மேயமல
சிற்சு கோதய விலாசமே.

ப-ரை. ஏகமான உருவான நீ - ஏகரூபியாயிருந்த நீ அருளினால் கருணையோடு, அனேகவுருவாகி - அநேகவடிவங்களாகி, அகிலகோடி — அண்டகோடிகளை சிர்ஷ்டிசெய்ய - படைக்க, இசையும் நாள்வரை - இசைந்த நாளெல்லை, எந்தநாள் - எந்தக்காலமோ, அந்தநாள்முதலாக — அந்தக்காலமுதலாக, நாளது வரைக்கும் - நாளதுவரையிலும், உன் அடிமை - உன்தொண்டனாகிய நான், கூடவே சனனமானதோ கூடவே பிறந்தபிறவியோ, அநந்தம்உண்டு - எண்ணிறந்தனவாக வுள்ளது, (ஆயினும்) நல்லசனனம் ஈது - நல்லபிறவியிது, இதனுள் அறியவேண்டுவன அறியலாம் - இதில்தெரியவேண்டும் புருஷார்த்தங்களைத் தெரியலாம், மோகமாதிதரு - மோகாதிகளை யுதவுகிற, பாசமானதை-பாசத்தை, அறிந்து - உள்ளவாறு) உணர்ந்துவிட்டு - கைவிட்டு, உன்னையும்என்னையும் - (ஆண்டானாகிய) உன்னையும் (அடிமையாகிய என்னையும், முழுது உணர்ந்து - முற்றுமுணர்ந்து, பரம் ஆன-மேலான, இன்பவெள்ளம் ஆனந்தப்பெருக்கில், மூழ்கவேண்டும் - அமிழவேண்டும், இது இன்றியே - இதுசெய்தவில்லாமலே, தேகம்நழுவி - தேகம் (என்னைவிட்டு) நீங்கி, நானும் நழுவின்-நானும் (அதனைவிட்டு) நழுவுவேனாயின், பின்னை - பிறகுஉய்யும்வகையுள்ளதோ - உச்சீவிக்கும் வகையும் எனக்குண்டோ, தெரிவதற்கரிய,—எ—று,

அறியவேண்டுவன என்றதற்கு தர்மார்த்தகாமமோக்ஷங்களையன்றி புருஷனுக்கு வேறுபரமலாபமாம் விரும்பப்படுவ தொன்றின்மையால், அவைபொருளாக வுரைக்கப்பட்டன. (ரு

127. நியம லக்ஷண மியம லக்ஷணமு
மாச ஞதிவித பேதமும்
நெடிது ணர்த்திதய பதும பீடமிசை
நின்றி லங்குச பாநலத்
தியல றிந்துவளர் மூல குண்டலியை
யினிதி றைஞ்சியவ ளருளினல்
எல்லை யுற்றுவளர் ஜோதி மூலவன
லெங்கண் மோனமநு முறையிலே
வயமி குந்துவரு மமிர்த மண்டல
மதிக்கு ளேமதியை வைத்துநான்
வாய்ம டுத்தமிர்த வாரி யைப்பருகி
மன்னு மாரமிர்த வடிவமாய்ச்
செயமி குந்துவரு சித்த யோகநிலை
பெற்று ஞானநெறி யடைவனே
தெரிவதற்கரிய பிரமமேயமல
சிற்சுகோதய விலாசமே.

ப-ரை. நியமலக்ஷணமும் - நியமவிலக்கணத்தையும், இயம லக்ஷணமும்- இயம விலக்கணத்தையும், ஆசனதிவிதபேதமும் - ஆசனம் முதலானவகைக ளின் விகற்பங்களையும், நெடிது உணர்ந்து - நன்றாயறிந்து, இதயபத்மபீட மிசை நின்று இலங்கும் - இருதயகமலமாகிய பீடத்தின் மேல் நிலைபெற்று விளங்குகிற, அசபாநலத்து இயல் அறிந்து - அசபாக்நி இலக்கணத்தையு மறி ந்து, வளர்மூல குண்டலினிய - வளர்கின்ற மூலகுண்டலி சத்தியை, இனிது இறைஞ்சி - இனிதாகப்பணிந்து, அவள் அருளினல் - அவளது கிருபையால், எல்லை அற்றுவளர் - வரம்பற்று வளர்கின்ற, ஜோதி - தேஜஸையுடைய, மூல அனல் - மூலாக்னியுடன், எங்கள்மோநமநு முறையிலே - எங்களுடையமௌ ன மந்திரக் கிரமத்தினல். வயம் மிகுந்துவரும் — வெற்றிமிக்குவருகின்ற, அமி ர்தமண்டல மதிக்குளே - அமிர்தத்தையுடையசந்திரமண்டலத்தினுள்ளே, மதி யைவைத்து - அறிவையிருத்தி, நான்வாய்மடுத்து - நான்வாய்வைத்து, அமிர்த வாரியைபருகி - அமிர்தக்கடலையுண்டு, மன்னும் ஆர் அமிர்தவடிவம் ஆய்-நிலை பெற்ற அரிய அமிர்தவடிவாய், செயம்மிகுந்துவரு - வெற்றிமிகுந்து வருகி ன்ற, சித்தயோகநிலைபெற்று-சித்தர்களுடைய யோகநிலையையடைந்து ஞான நெறியடைவனே-ஞானமார்க்கத்தை யடைவனே, தெரிவதற்கரிய,—எ-று.

நியமலக்ஷணமாவது.—தவம், தூய்மை, சத்துவநூலோர்தல், மனமுவந்தி ருத்தல், தெய்வம் வழிபடல், இயம லக்ஷணமாவது.—கொல்லாமை, மெய்மை கூறல், கள்ளாமைபிறர்பொருளிச்சியாமை, இந்தியுயமடக்குதல்.

ஆசனுதி விதபேதமாவன —ஆசனம் ப்ராணுயாமம்,ப்ரத்யாஹாரம் த்யானம், தாரணை, சமாதிஎன்பவைகளே. அசம்என்றது-சபியாது சபித்தலேவினைகளை நீறுபடுத்தலால் "அஜபாநலம், என்றூர். (சு)

128. எறிதி ரைக்கட ணிகர்த்த செல்வமிக
வல்ல லென்றொருவர் பின்செலா
தில்லை யென்னுமுரை பேசிடா துலகி
லெவரு மாமென மதிக்கவே
நெறியின் வைகிவளர் செல்வ மும்முதவி
நோய்க ளற்றசுக வாழ்க்கையாய்
நியம மாதிநிலே நின்று ஞானநெறி
நிஷ்டை கூடவுமெந் நாளுமே
அறிவி னின்றுகுரு வாயுணர்த்தியது
வன்றி மோனகுரு வாகியே
அகில மீதுவர வந்த சீரருளை
யைய வையவினி யென்சொல்வேன்
சிறிய னேழைநம தடிமை யென்றுனது
திரு வுளத்தினி லிருந்ததோ
தெரிவ தற்கரிய பிரம மேயமல
சிற்சு கோதய விலாசமே.

ப—ரை. எறிகடல் திரை நிகர்த்த – மறிகின்ற கடலின் அலைகளை யொத்த, செல்வம் - செல்வமானது, மிக அல்லல்என்று – மிகவுந்துன்பத்தைத்தருவதென்று, ஒருவர்பின் செல்லாது - ஒருவர்பின் போகாமலும், இல்லை யென்னும் உரைபேசிடாது - (இரப்போர்களுக்கு) இல்லையென்கிற சொல்லைச்சொல்லாமலும், உலகில் எவரும் - உலகிலுள்ளஎல்லாரும், ஆம்எனமதிக்க - ஆமென்றுமதிக்கும்படி, நெறியின்வைகி - நன்மார்க்கத்தில்தங்கி, வளர் - விருத்தியடைதற் கேதுவாகிய, செல்வமும்உதவி – பாக்கியத்தையுங்கொடுத்து, நோய்கள்அற்ற சுகவாழ்க்கையாய் - வியாதிகளில்லாத சுகவாழ்க்கையை யுடையேமாகி, நியமமாதி நிலைநின்று-நியமம் முதலாகிய நிலைகளில்நின்று, ஞானநெறி-ஞானமார்க்கமாகிய, நிஷ்டை கூடவும் – நிஷ்டை (கூடிச் சுவானுபூதியைப்) பெறவும், எந்நாளும் - எக்காலத்தும், அறிவில்நின்று - என்னறிவினிடத்து நின்று, குருவாய் - குருமூர்த்தமாகி, உணர்த்தியதுமன்றி - (எனக்கு) அறிவுறுத்தினது மல்லாமல், மோனகுருவாகி, மௌனகுருவாகி, அகிலமீதுவர – உலகின்மேல்வரும்படி, வந்த இறங்கின, சீர்அருளை – சிறந்தஉன் திருவருளின்தன்மையை, ஐய ஐய இனிஎன்சொல்கேன் - ஐயனே ஐயனே இனியென்னென்று எடுத்துப் புகழ்ந்துரைக்கேன், சிறியன் ஏழை–சிறியவனாகிய இந்தஏழை

நமது அடிமையென்று - நமது தொண்டனென்று, உனது திருவுளத்தினி லிருந்ததோ - உன் திருஉளத்திற் கிடந்ததோ, தெரிவதற்கரிய, எ-று.

அறிவில் நின்றுகுருவாய் உணர்த்தியது என்றது - அருவ சாக்ஷாத்காரம் மோனகுருவாகி யென்றது - உருவசாக்ஷாத்காரம். செல்வத்தை அலைகளுக்கு நிகராகக்கூறுதல், "நிறைசெல்வம் நீரிற்சுருட்டு நெடுந்திரைகள்" என்றற்றொடக்கத்தனவற்றாற் காண்க.

செல்வமுதலியவை நிலையில்லனவென் றறிவுறுத்தி, மோக்ஷத்துக்கேதுவாகிய நியமாதிகளின் நிலையில்நின்று ஞானநிஷ்டைகூடும்படி, என்னறிவில் நின் றுணர்த்தியது மன்றி, மோனகுருவாகி உலகின்மீது வந்தஉன்பெருங்கருணையை யென்சொல்லிப் புகழ்வேன், இவ்வகைச்செயல் இவன்சிறியன், அறிவிலிஆயினும், நமது அடிமையென்று உன் திருவுள்ளத்தின்கட்கிடந்ததோ என்பதாம். (எ)

129. எவ்வு யிர்த்திரளு முலகி லென்னுயி
ரெனக்கு ழைந்துருகி நன்மையாய்
இதமு ரைப்பவென தென்ற யாவையு
மெடுத்தெ றிந்துமத யானைபோல்
கவ்வை யற்றநடை பயில வன்பாடி
கண்டதே யருளின் வடிவமாக்
கண்ட யாவையு மகண்ட மென்னவிரு
கைகுவித்து மலர் தூவியே
பவ்வ வேண்டிரை கொழித்த தண்டரளம்
விழியு திர்ப்பமொழி குளறியே
பாடி யாடியு ளுடைந்து டைந்தெழுது
பாவை யொத்தசைத லின்றியே
திவ்ய வன்புருவ மாகி யன்பரொடு
மின்ப வீட்டினி லிருப்பனோ
தெரிவ தற்கரிய பிரமமே யமல
சிற்சு கோதய விலாசமே.

ப.ரை. உலகில் - உலகத்திலுள்ள, எவ்வுயிர்த்திரளும் - எவ்வகைப்பட்ட உயிர்க்கூட்டங்களும், என்உயிர்என - என்னுயிர் என்று பாவித்து, குழைந்து உருகி -- (அவைகட்கு ஒருவிபத்து நேரிட்டால் அதைக்குறித்து) மனங்குழைந்துருகி, நன்மை ஆம் இதம் உரைப்ப - நன்மையாகிய ஹிதங்களைச் சொல்லவும், எனதுஎன்றயாவையும் - எனதென்று சொல்லப்படுகிற எல்லாப் பொருள்களையும், மதயானைபோல் எடுத்தெறிந்து - மதயானை (தன் கண்ணிற்பட்டவற்றை) யெடுத்தெறிவதுபோல எடுத்தெரிந்து, கவ்வைஅற்ற நடைபயில-து

ன்ப நீங்குகைக்குக் காரணமான நன்னடையைப் பயிலவும், அன்பர் அடிகண்டதே அருளின் வடிவம்ஆ-அன்பரது திருவடியைக் கண்டதே திருவருளைக்கண்டதாகப் பாவித்து, கண்டயாவையும் - பார்த்த எல்லாப்பொருள்களையும், அகண்டம் என்ன - அகண்டரூபமென்று நிச்சயித்து, இருகைகுவித்து - இருகரங்களைக்கூப்பி, மலர் தூவி - மலர்களைச்சொரிந்து, பவ்வம் - சமுத்திரத்தினது, வெள்திரை - வெள்ளியஅலைகளால், கொடுத்த - எடுத்தெறியப்பட்ட, தண்தரளம் — குளிர்ந்த முத்துப் (போன்ற நீர்த்) துளிகளை, விழிஉதிர்ப்ப - கண்கள் உதிர்க்கவும், மொழிகுளறி - வார்த்தை தடுமாறி, பாடிஆடி — பாடியும் ஆடியும், உள்உடைந்து உடைந்து - உள்நெகிழ்ந்து நெகிழ்ந்து, எழுதுபாவை ஒத்து - எழுதிய சித்திரப் பதுமையையொத்து, அசைதல் இன்றி - அசைவில்லாமல், திவ்வியம் — தெய்வீகமான, அன்புஉருவமாகி - அன்பின்வடிவாகி, அன்பரோடும் — உன் அடியார்களுடன், இன்பவீட்டினில் இருப்பனோ — ஆனந்த ஹேதுவான மோக்ஷத்திலிருக்கப் பெறுவேனோ, தெரிவற்கரிய, எ-று.

இதில், ஜீவகாருண்யமும், ஈச்சுரபக்தியும், பாசவைராக்யமும், பிரமஞானமும் அதன்பேறும்வேண்டுமென வேண்டிக்கொண்டனர்.

எவ்வகைப்பட்ட உயிர்களும் என்னுயிர்களே யெனக் குழைந்துருகல் முதலியவற்றை யுடையோனாகிய உன்அன்பரொடுகூடி இன்பவீட்டினில் இருக்கப்பெறுவேனோ என்பதாம். (அ)

130. கத்தர் பேயரொடு பாலர் தன்மையது
மருவி யேதுரிய வடிவமாய்
மன்னு தேசமொடு கால மாதியை
மறந்து நின்னடிய ரடியிலே
பத்தி யாய்நெடிது நம்பு மென்னையொரு
மைய றந்தகில மாயைப்
பாரு பாமிரன நடத்த வந்ததென
பார தத்தினுமி துள்ளதோ
சுத்த நித்தவியல் பாகு மோவுனது
விசுவ மாயையினு மில்லையென்
சொல்ல வேண்டும்வகை நல்ல காதிகதை
சொல்லு மாயையினு மில்லையென்
சித்த மிப்படி மயங்கு மோவருளை
நம்பி னோர்கள்பெறு பேறிதோ
தெரிவ தற்கரிய பிரம மேயமல
சிற்சு கோதய விலாசமே.

ப-ரை. மத்தர்பேயரொடு பாலர்தன்மையது மருவி — மத்தர்பேயர்பாலர் இவர்களுடைய குணத்தைப்பொருந்தி, துரியவடிவம்ஆய் - துரியவருவாகி, ம

ன்னு - நிலைபெற்ற, தேசமொடு காலமாதியையமறந்து — தேசகாலாதிகளை மறந்து, நின்அடியர் அடியிலே - உன்னடியர்களது திருவடிகளில், பத்திஆய்—அன்புடையவனும், நெடிது நம்பும் என்னை—மிகுதியும் நம்புகின்ற அடியேனை ஒரு மையல்தந்து - ஒப்பற மயக்கத்தைக் கொடுத்து, அகிலம்மாயையை-உலகமாயையை, பாருபாரென — பார்பாரென்று, நடத்தவந்தது என் - நடத்தவந்ததுயாது, இதுபாரதத்திலும் உள்ளதோ - இது (காவியமாகிய) பாரதத்தினுமுண்டோ (இல்லை,) சுத்த நித்த இயல்பாகுமோ - இதுஉனது சுத்த நித்த இயற்கையாமோ, உனது விசுவமாயை நடுவாக - உன்லோகமாயையின் மத்தியில், வகைசொல்லவேண்டும் - வழிசொல்லவேண்டும், நல்ல காதி கதைசொல்லும், நன்மையாகிய காதிகதையிற் சொல்லப்படுகிற, மாயையிலும் - மாயையின் பிரபாவத்திலும், இல்லை - இவ்வாறில்லையே, என்சித்தம் இப்படி மயங்குமோ - என்மனமானது இப்படிதியங்குமோ, அருளை நம்பினோர்கள் - உன்திருவருளை நம்பினவர்கள், பெறு பேறுஇதோ — அடைவதாகிய லாபம்இதுதானோ, தெரிவதற்கரிய, எ-று.

உன் திருவருளை நம்பினவன் மாயையால் துன்ப மடையலாமா? அம்மாயைநீக்கிக் கிருபைசெய் எனப் பிரார்த்தித்தது. மத்தர் - பிறழவுணர்ந்தோர். பேயர் - பேய்க்கோட்பட்டார். தேசம்-தேசவியற்கை. காலம் - காலவியற்கை.

காதி - ஓர் பிராமணன். இவன் சரித்திரவருமாறு:—

பூர்வத்திலே கோசலநாட்டில் இருந்த காதிஎன்னும் பெயருள்ள ஒருவேதியன், ஒருகாரியத்தை மனதில்உத்தேசித்து, உறவினரைவிட்டு வனத்திற்குச்சென்று ஒருதடாகநீரின் நடுவில், கழுத்தளவு முழுகநின்று, மேலாகிய தவத்தைச்செய்து எட்டுமாதங்கள் கழிந்தபோது, விஷ்ணுமூர்த்தி, அவனுக்குத் தரிசனைதந்து "உன்கருத்தென்ன, தெரிவித்தால் அதனைக்கொடுப்போம்" என வினவ, அந்தப்பிராமணன், கரையேறிவந்து, திருமாலைக் கைவித்து வணங்கி, "சுவாமி, உமது மாயாசொரூபத்தைத் தரிசிக்க விரும்புகின்றேன்" என்றான். அதைக்கேட்ட நாரணன், அப்படியேயென் மாயாசொரூபத்தைக் காணக்கடவை, கண்டபிறகு அதனைநீக்கக் கடவையென்று அநுக்கிரகித்து மறைந்தவுடன் பகவானைச்சேவித்த சந்தோஷத்தையுடைய அவ்வந்தணன், அந்தவனத்தில் சிலநாள் தவஞ்செய்துக் கொண்டிருந்து ஒருநாள், முன்னே திருமால் அருளிய வாக்கியத்தைச் சிந்தித்துக்கொண்டே ஒருதாமரைத்தடாகத்தில் முழுகினவுடன், செய்யவேண்டிய வேதமந்திர படனம், தியானம் முதலியவற்றை மறந்து, உறவினரிருக்கிற தன்வீட்டில், தான்வியாதியினால் இறந்தவனாகக் கனக்கண்டான். மேலும் உறவினர், தன்மனைவி, தன்தாய்முதலியோர் தன்மேல் விழுந்து கட்டிக்கொண்டு கதறவும் பார்த்தான், இதற்குமேல் தன்னை மயானத்திற் கொண்டுபோய்சுட்டுச் சாம்பலாக்கவும் பார்த்தான். அந்தநீரின் நடுவிலிருக்கிற அந்தணன், பின்னும் ஊணதேசத்தின் ஒருநகரமுடிவில் இருக்கிறசண்டாளகுலத்தில், ஒருபெண்ணின் வயிற்றில், வெந்த கரிகட்டைபோல ஆண்மகனாய்ச் சனித்து, அந்தக் குலத்துப் பெண்ணொருத்தியை மணந்து, அவளோடு மலைகளிலும் வனங்களிலும், மனமும் பிராண வாயவும்போத வெ

ற்றுமையாய்க் கலந்து வாழுங் காலத்தில், தன்குலம் விளங்கச் சில புத்திரரை ப்பெற்றான். சிலநாளில் மூப்பு வந்தடையவே தன்சேரிக்குக் கொஞ்ச தூரத்தில் ஒரு இலைக்குடிசைகட்டி அதில் வாழ்ந்துகொண்டிருக்கும்போது, தன் மக்களுக்கும் மூப்புவந்தடைந்தது. இவ்வாறு யாவர்க்கும் வார்த்திக்கியம் வந்ததைப்பார்த்து வருந்துங்காலத்தில், தன்னை யொழிய மற்றவரையெல்லாம் கானல்கொண்டுபோய்விட, தான் தனியேயிருந்து, வாய்விட்டழுது, சகிக்கமாட்டாமல் மனங்கலங்கி, நிராசையுள்ளவனாய், அநேக நாடுகளில் வெகுகாலம் திரிகின்றவன், ஒருநாள் கீரநாட்டின் ராஜதானியில் புகுந்து, சொர்க்க லாகத்தில் பொன்மயமாயிருக்கிற ஒரு வீதியிற் போம்போது, இந்நகரத்தரசன் மாண்டனன், பூமியைக்காக்க வேறொரு அரசனைத் தெரிந்தெடுத்துக்கொண்டு வாவென்றுசொல்லி யனுப்பப்பெற்ற பட்டத்துயானையானது, எதிரே வரக்கண்ட இவனைத் துதிக்கையாலெடுத்துத் தன் பிடரிலேற்றிக்கொண்டு போயிற்று.

அப்பட்டத்து யானையால் கொண்டுவரப்பட்ட இவனை, மாதர்கள், அலங்கரித்தார்கள், பழய மந்திரிமார்கள் சேனாதிபதி முதலானோர்கள் இவனை அரசனாக்கி முடிசூட்டி, இவனது ஆக்கினையைச் சிரசாகவகித்து நடத்தி வந்தார்கள், இவனும் கவலன் என்கிற பெயர்பெற்றுக் கீரதேசத்தில் நீதியாகச் செங்கோல் செலுத்தி, சிங்காசனத்தின்மேல் வீற்றிருந்தான். இப்படி எட்டு வருடம் கழியவே ஒருநாள் தனியனாய், காலால் நடந்து, தன் அரண்மனையின் தெருப்புறத்தில், நீசவேடத்தோடு உலாவுகையில், அவ்விடத்தில் முன்சொன்னசண்டாளர் சிலர் வந்தார்கள். அவர்களுள் ஒரு முதியோன்வந்து இவனைப் பார்த்தவுடன் ஆசையோடு தழுவி, முன்பெயரைச்சொல்லி, எங்களுக்குப் பழய சுற்றத்தானாகிய நீ, எம்மைவிட்டு எங்கேபோனாய்? இப்போது எவ்விடத்திருக்கிறாய்? என்று இவனது பழயவரலாற்றை உள்ளபடி சொல்லி விசாரித்தான் அதைக்கேட்ட இவன், இங்குள்ள யாராயினும் இதனைக் கேட்பாராயின் தனக்குப் பழியாய் முடியுமென்று, அச்சண்டாளக்கிழவனை அதட்டித் துரத்திவிட்டு, விரைவாகத் தனது அப்புரத்திற் பிரவேசித்தலும். இவற்றையெல்லாம், சாளரவாயிலில் நின்று கண்டுங் கேட்டுமிருந்த ராஜஸ்திரீகள் மந்திரிமார்கள் முதலானபேர்களுக்கு அறிவிக்க, அவர்களும் இவன் பூர்வத்தில் சண்டாளன்போலுமென்று ஊகித்தறிந்து, மனவருத்தமடைந்தார்கள்.

இவன்மாத்திரம் மனங்கலங்காமல், அவைகளை அறியாதவன்போலப் பழையபடியே சிங்காதனத்திருந்தான். இவனை மாதர்கள் மந்திரிமார் முதலானோர்கள் தீண்டுதற்கு அஞ்சினவராய், பிரேதம்போல அருவருத்தார்கள், இவன், அங்கு கல்வி செல்வங்களிரண்டுமில்லாத பிரயாணிகள்போன்றிருந்தான். அந்த நகரமாந்தரெல்லாரும், இவனுடைய சம்பந்தத்தாலும் நாமெல்லாரும் பதிதரானோம். இனி ஒரு பிராயச்சித்தத்தாலும் பரிசுத்தராகமாட்டோம், நாம் பரிசுத்தர் தற்பொருட்டுத் தீப்பாய்வோமென்று நிச்சயித்து, நெருப்பை வளர்த்து அதில் எல்லாரும் விழுந்து மடிந்தார்கள். இவன் நமது

தொடர்பாலல்லவோ இத்தனைபேரும் நாசமடைந்தார்கள். இனி நாமும் மாண்டுபோவதே தக்க காரியமென்று நெருப்பு மூட்டி, அதில் விழுந்தபோது, அந்தத்தீயானது இளந்தளிரை யெரிப்பதுபோல இவன் சரீரத்தையெரிக்க, நீரில் மூழ்கியிருந்த சாதியென்னும் வேதியன் சரீரம்பதைத்தது. உடனே நீரைவிட்டு மேலெழுந்த காதிடானவன் மஹா மாயையினின்று நீங்கி ஈசுவரனது சர்வ சக்தியைக்குறித்துப் புகழ்ந்து மனங்களித்திருந்தான்.

வேண்டியது இவ்வளவே யாதலால் இம்மட்டில் நிறுத்தப்பட்டது, இது இன்றுமுளது. ஞானவாசிட்டம் உரு-வது கதையில் பரக்கக்காண்க.

131. பன்மு கச்சமய நெறிப டைத்தவரும்
யாங்க ளேகடவு ளென்றிடும்
பாத கத்தவரும் வாத தர்க்கமிடு
படி றருந்தலை வணங்கிடத்
தன்மு கத்திலுயிர் வரவ ழைக்குமெம
தருமனும்பகடு மேய்க்கியாய்த்
தனியி ருப்பவட நீழ லூடுவளர்
சனக னாதிமுனி வோர்கடம்
சொன்ம யக்கமது தீர வங்கைகொடு
மோன ஞானம துணர்த்தியே
சுத்த நித்தவரு ளியல்ப தாகவுள
சோம சேகர கிர்பாளுவாய்த்
தென் முகத்தின்முக மாயி ருந்தகொலு
வெம்மு கத்தினும்வ ணங்குவேன்
தெரிவ தற்கரிய பிரம மேயமல
சிற்சு கோதய விலாசமே.

ப-ரை. பல்முகம் - பல துறைகளையுடைய, சமயநெறி படைத்தவரும்—சமயமார்க்கங்களைப் படைத்தவர்களும், யாங்களே கடவுள் என்றிடும் பாதகத்தவரும் - நாங்களே தெய்வமென்கிற பாவிகளும், வாததர்க்க மிடு படிறரும்—தர்க்கவாதஞ்செய்கிற வஞ்சகரும், தலைவணங்கிட - தலை தாழ்த்தித்தொழவும், தன்முகத்தில் - தன்னிடத்தில், உயிர் ஜீவராசிகளை, வர அழைக்கும் - வர அழைக்கின்ற, எமதருமனும் - யமதர்மராஜனும், பகடு மேய்க்கியாய் - எருமை மேய்ப்பவனாய், தனியிருப்ப - தனியேயிருக்கவும், வடநீழலூடுவளர் - கல்லாலின்நிழலில் வீற்றிருக்கிற, சனகனாதி முனிவோர்கள் - சனகாதிமுனிவர்களது சொல் மயக்கந்தீர - வார்த்தையிலுண்டான மயக்கமானது நீங்கும்வண்ணம், அங்கைகொடு - அழகியகைகளால், மோன ஞானம் உணர்த்தி - மோனநிலையாகிய ஞானத்தை அறிவுறுத்தி. சுத்த நித்தவருள்-சுத்தநித்த அருளானது, இயல்பாகவுள - இயற்கையாகப் பொருந்திய, சோமசேகரன்-சோமசேகரன்

என்கிற, கிர்பாளுவாய் - கருணைநிதியாகி, தென்முகத்தில் தென்திசையில், முகமாயிருந்தகொலு - அபிமுகமாயிருந்த கொலுவினை, எம்முகத்திலும் வணங்குவேன் - எத்திசையிலும் பணிவேன், தெரிவதற்கரிய. எ-று.

சோம சேகரன் - சந்திரனைச் சிரத்திலணிந்தவன். நித்தம் - சாசுவதம்.

பல சமயிகள் முதலானவர்கள் பயனற்றவர்களாயொழிய, சனகாதியர்க்கு நீ வடநிழலில் தென்முகமாய் வீற்றிருந்து மோனஞானத்தை யறிவுறுத்தருளிய திருக்கோலத்தை எக்காலத்தும் வணங்காநின்றேன் என்பது கருத்து. (கo)

## ஆகாரபுவனம்.

### சிதம்பரரகசியம்.

132. ஆகார புவனமின்பா கார மாக
வங்ஙனே யொருமொழியா லகண்டா கார
யோகாநு பூதிபெற்ற வன்ப ராவிக்
குறுதுணையே யென்னளவு முகந்த நட்பே
வாகாரும் படிக்கிசைகிண் கிணிவாயென்ன
மலர்ந்தமல ரிடைவாசம் வயங்கு மாபோல்
தேகாதி யுலகமெங்குங் கலந்து தானே
திகழனந்தா னந்தமயத் தெய்வக் குன்றே.

ப-ரை. ஆகாரம் - ரூபமாத்திரமாய்க் காணப்படுகிற, புவனம் - லோகமானது, இன்ப ஆகாரமாக - சுகரூபமாக, அங்ஙனே - அவ்வாறே, ஒருமொழியால் - ஒருசொல்லால், அகண்ட ஆகார யோகாநுபூதிபெற்ற - அகண்டவடிவமான யோகாநுபவம்பெற்ற, அன்பர் - அன்பரது, ஆவிக்கு - உயிருக்கு, உருதுணையே - பொருந்திய துணையே, என் அளவும் - என்னளவிலும் உகந்த - விருப்பம்வைத்த, நட்பே - சிநேகமே, வாகு ஆரும்படிக்கு - அழகுபொருந்தும்படிக்கு, அசை - சத்திக்கின்ற, கிண்கிணிவாய் என்ன - கிண்கிணிவாய்போல, மலர்ந்த - விரிந்த, மலரிடை - மலரினிடத்தில், வாசம் வயங்குமாபோல் - மணம் வீசுவதுபோல, தேகாதி உலகம் எங்குங் கலந்து - தநுமுதலாகிய உலகமெல்லாங்கலந்து, தானே திகழ் - தானேயாகி விளங்குகின்ற அநந்தம் - ஈறில்லாத ஆனந்தமயம் - ஆனந்தரூபமான, தெய்வக்குன்றே-தெய்வத்தன்மையுள்ள மலையே. எ-று.

அறப்பெரியராகிய யோகாநுபூதிபெற்ற அன்பராவிக் குறுதுணையாததன்றி யென்பது படநின்றமையான், என்னளவும் என்னுமும்மை இழிவுசிறப்பு - அன்பராவிக்கு உருதுணை, என்னளவு முகந்தநட்பு என்றமையால், சமரசமாகிய கிருபாதிருஷ்டியுடையானென்பது விளங்கும். கிண்கிணிவாய் என்னமலர்தலாவது கிண்கிணியின் இடை வெளிபோல இதழ் முறுக்கவிழ்ந்து மலர்தல்.

தோற்ற மாத்திரமாய் விளங்கும் பிரபஞ்சம் இன்பரூபமாகத் தோன்று மாறு, சிவயோகாநுபவம்பெற்ற அன்பாது உயிர்த்துணையே, என்னளவினும் உள்ள முவந்தருளிய நட்பே, தேகாதியுருவமான பிரபஞ்ச மெல்லாவற்றி னுங்கலந்து பிரகாசிக்கிற முடிவில்லாத சுகரூபமாகிய தெய்வமலையேயென்று விளித்ததாம். (க)

133. அனந்தபத வுயிர்கடொறு முயிராயென்று
மானந்த நிலையாகி யளவைக் கெட்டாத்
தனந்தனிச்சின் மாத்திரமாய்க் கீழ்மேல் காட்டாச்
சதசத்தா யருட்கோயில் தழைத்த தேவே
இனம்பிரிந்த மான்போனு னிடையா வண்ண
மின்பமுற வன்பர்பக்க லிருத்தி வைத்துக்
கனந்தருமா கனமேதண் ணருளிற் றூனே
கனிபலித்த வானந்தக் கட்டி பேறே.

ப—ரை. அநந்த பதம் - ஈறற்ற குறிகளையுடைய, உயிர்கள் தொறும்—உயிர்கள்தோறும், உயிரால் - உயிராகி, என்றும் ஆநந்த நிலை ஆகி — எக்காலத்தும் சுகநிலயமாகி, அளவைக்கு எட்டா (காட்சிமுதலிய) பிரமாணங்கட்கு அதீதப்பட்ட, தன்னந்தனி - மிகத்தனிமையான, சின்மாத்திரமாய் - சிற்சொரூபமாத்ரமாகி, கீழ்மேல் காட்டா - கீழெல்லை மேலெல்லைகளைக் காண்பிக்காத, சதசத்தாய் - சத்துமம் அசத்துமாகி, அருள்கோயில் - திருவருளாகிய கோயிலில், தழைத்த - செழித்த, தேவே - தெய்வமே, நான் — அடியேன், இனம்பிரிந்த மான்போல் இடையாவண்ணம் - தன் கூட்டத்தினின்று விலகின மானைப்போல வருந்ாதபடி, இன்பம் உற - சுகவாழ்வையடைய, அன்பர் பக்கல் - உன் அடியாரிடத்து, இருத்திவைத்து - இருக்கச்செய்து, கனம் தரும்-சிறப்பைத்தருகின்ற, மா கனமே - பெருஞ்சிறப்பமைந்த வஸ்துவே, தண் அருளிற்றூனே - குளிர்ச்சி பொருந்திய அருளாகிய மரத்திற்றூனே, கனிபலித்த - கனியாகப்பழுத்த, ஆநந்தக்கட்டி - இன்பமாகிய (சர்க்கரைக்) கட்டியென்று சொல்லப்படுகிற, பேறே - பரமலாபமே. எ—று.

"அருட்கோயில் தழைத்ததேவே, மாகனமே, ஆநந்தக் கட்டிப்பேறே, அனம்பிரிந்த மான்போல நான் வருந்ாமல், இன்பமநுபவிக்க, அன்பரிடத் திருத்திவைத்து" என்றும் இவைகளி னீடொட்டினல் விண்ணப்பிக்க வேண்டியவற்றை மறந்தனர்போலுங் கூறினர்.

134. பேறனைத்து மணுவெலவே யுதறித் தள்ளப்
பேயுன்ப மாகவந்தே பெருக்கே பேசா
வீறனைத்து மிந்நெறிக்கே யென்ன வென்னை
மேவென்ற வாத்தேபாழ் வெய்ய மாயைக்

கூறனைத்துங் கடந்தவெல்லைச் சேட மாகிக்
குறைவறநின் றிடுநிறைவே குலவா நின்ற
ஆறனைத்தும் புகுங்கடல்போற் சமய கோடி
யத்தனையுந் தொடர்ந்துபுகு மாதி நட்பே.

ப—ரை. பேறு - அனைத்தும் - எல்லாப் பாக்கியங்களையும், அணு என உதறித்தள்ள - அணுவாக வுதறித்தள்ளும்படியாக, பேரின்மம் ஆகவந்த பெருக்கே - பேரானந்தமாக வந்தருளிய பிரவாகமே, பேசாவீறு அனைத்தும்—பேசாத (மௌனநிலையாகிய) பெருமையெல்லாம், இந்நெறிக்கே என்ன-இந்த நெறியின் பொருட்டேயென்று, என்னை அடியேனை (நோக்கி), மேவு என்ற - இந்நெறியிற் பொருந்துவாய் என்று நியமித்த, வரத்தே - ஊதியமே, பாழ் - சூனியமாகிய, வெய்யமாயைக்கூறு அனைத்தும் - கொடியதாகிய மாயாபாகங்க ளெல்லாவற்றையும், கடந்த - தாண்டிய, எல்லை - எல்லையாகிய, சேடமாகி - சேஷமாகி, குறைவு அற நின்றிடும் - குறைவில்லாமல் நிலைபெற்றிருக்கின்ற, நிறைவே - பரிபூரணவஸ்துவே, குலவாநின்ற - விளக்காநின்ற, ஆறு அனைத்தும் - நதிகள்யாவும், புகும் - புகப்பெறுகின்ற, கடல்போல்-சமுத்திரம்போல, சமயம் கோடி அத்தனையும் - சமயகோடிகளவ்வளவும், தொடர்ந்துபுகும் - தொடர்ந்து புகுதற்கிடமாகிய, ஆதி நட்பே - முதன்மையாகிய உறவே. எ—று.

"ஆற்றின்ப வெள்ளமே" என்னும் திருவாதவூரடிகள்திருவாக்குப்போல "பேரின்பமாகவந்த பெருக்கே" என்றார். பேரின்பமாகவந்த பெருக்கைநோக்க, மற்றெல்லாப் பேறுகளும் அணுவா யொழியுமாதலால் 'அணுவெனவே யுதறித்தள்ள' என்றார்.

பேசாவிறு - மௌனநிலை. வரத்து - வரவு - இதுவும் மேலையது போன்றது. (ந)

135. ஆதியந்த மெனுமெழுவா யீறற்றோங்கி
யருமறையின் னமுங்காணு தரற்ற நானு
பேதமதங் களுமலைய மலைபோல் வாதப்
பெற்றியரும் வாய்வாதப் பேய ராகச்
சாதகமோ னத்திலென்ன வடவா னீழல்
தன்னருட்சந் திரமௌலி தடக்கைக் கேற்க
வேதகசின் மாத்திரமா யெம்ம னோர்க்கும்
வெளியாக வந்தவொன்றே விமலவாழ்வே.

ப-ரை. ஆதி அந்தம் என்னும் - அடிமுடிகளென்று சொல்லப்படுகிற, எழுவாய் - ஈறு அற்று ஓங்கி - உற்பத்தி நாசங்களில்லாதுயர்ந்து, அருமறை—அருமையாகிய வேதங்கள், இன்னமும் காணுது அரற்ற - இன்னமும் காணப்பெருமையால் வருந்தாநிற்க, நானுபேதம் மதங்களும் - பலவகைப்பட்ட

வேறுபாடுள்ள மதங்களும், மலைய-ஒன்றுடனொன்று போர்செய்ய, மலைபோல் - (சலியாமையால்) மலையை நிகர்க்கின்ற, வாதப்பெற்றியரும் - வாதிக்குந் தன்மையுள்ளவரும், வாய்வாதப்பெயர் ஆக - வாக்வாதத்தையுடைய பித்தராயொழிய, சாதகம் மோனத்தில் என்ன - முத்தியடைதற்குரிய பழக்கம் மௌனநிலையிலுண்டென்று எமக்கு வெளியிட்டருளும்பொருட்டு, வடவால் நீழல்-கல்லாலின் நீழலில் எழுந்தருளிய, தண் அருள் - தண்ணிய கிருபையுடைய, சந்திரமௌலி - சந்திரசேகரனே, தடம் கைக்கு ஏற்க - விசாலமாகிய (சின் முத்திரைக்) கைகளுக்கிணங்க, வேதக சின்மாத்திரமாய் - எமது தன்மையை வேறுபடுக்கு மியல்பமைந்த சித்ரூபமாத்திரமேயாகி, எம் அன்னோர்க்கும்-எங்களைப் போன்றவர்களுக்கும், வெளியாகவந்த - வெளிப்படத் தோன்றிய, ஒன்றே - ஏகவஸ்துவே, விமலவாழ்வே - நிர்மலவாழ்வே. எ-று. (ச)

136. விமலமுதற் குணமாகி நூற்றெட் டாதி
வேதமெடுத் தெடுத்துரைத்த விருத்திக் கேற்க
அமையுமிலக் கணவடிவா யதுவும் போதா
தப்பாலுக் கப்பாலா யருட்கண் ணாகிச்
சமமுடன் கலப்புமவிழ் தலும்யாங் காணத்
தண்ணருடந் தெமைக்காக்குஞ் சாக்ஷிப் பேறே
இமையளவு முபகாரமல்லார் வேறொன்
றியக்காநிர்க் குணக்கடலா யிருந்த வொன்றே.

ப-ரை. வேதம் - வேதங்கள், நூற்றெட்டு ஆதி - நூற்றெட்டுமுதலாக எடுத்து எடுத்து உரைத்த-எடுத்தெடுத்துக்கூறிய, விருத்திக்குஏற்க-(லக்ஷண) விரிவுக்கிணங்க, விமலம் முதல் குணம் ஆகி - நிர்மலம்முதலிய குணங்களையுடையதாகி, அமையும் - பொருந்தியிருக்கின்ற, இலக்கணவடிவாய் - லக்ஷணத்தோடு கூடியரூபமாகி, அதுவும்போதாது - அதுவும் பற்றாமல், அப்பாலுக்கு அப்பால் ஆய் - அப்புறத்துக்கும் அப்புறமாகி, சமமும் - சமானமும் உடன்கலப்பும் - உடன்கூட்டமும், அவிழ்தலும் - பிரிவும், யாம்காண - நாங்கள் தெரிசிக்கும்படி, தண் அருள் தந்து - தண்ணிய அருள்புரிந்து, எம்மைக் காக்கும் சாக்ஷிப்பேறே - எங்களை ரக்ஷிக்கின்ற சாக்ஷி பூதமான லாபமே, இமையளவும் - க்ஷணப்பொழுதாயினும், உபசாரம் அல்லால் - பிறர்க்குஹிதஞ் செய்தலன்றி, வேறு ஒன்று இயக்கா - வேறொன்றைச் செய்யாத, நிர்க்குணக் கடலாய் இருந்த ஒன்றே - குணரகித சமுத்திரமாயிருந்த ஒப்பற்ற பொருளே. எ-று.

தண்ணருடந்து எமைக்காக்குஞ் சாக்ஷிப்பேறே, உபகாரமல்லாமல் வேறொன்றைச் செய்யாத நிர்க்குண சமுத்திரமாயிருந்த வொருபொருளே என்பதாம். (ரு)

137. ஒன்றாகிப் பலவாகிப் பலவாக் கண்ட
வொளியாகி வெளியாகி யுருவு மாகி
நன்றாகித் தீதாகி மற்று மாகி
நாசமுட னுற்பத்தி நண்ணுதாகி
இன்றாகி நாளையுமாய் மேலு மான
வெந்தையே யெம்மானே யென்றென் றேங்கிக்
கன்றாகிக் கதறினர்க்குச் சேதா வாகிக்
கடிதினில்வந் தருள்கூறுங் கருணை விண்ணே.

ப—ரை. ஒன்று ஆகி - ஒரு பொருளாகி, பல ஆகி - பலபொருள்களாகி, பலவாக்கண்ட - பலவாகக் காணப்பட்ட, ஒளி ஆகி - ஒளியுருவாகி, வெளி ஆகி - (அவை இயங்குதற் கிடமாகிய) ஆகாயமாகிய, உருவும் ஆகி - ரூபமாகி, நன்று ஆகி - நல்லது ஆகி, தீது ஆகி - தீயது ஆகி, மற்றும் ஆகி - வேறுள்ளனவுமாகி, நாசமுடன் உற்பத்தி நண்ணுதாகி - பிறப்பு இறப்புகள் பொருந்தாததாகி, இன்று ஆகி நாளையுமாம் - இன்று ஆகி நாளையுமாகி, மேலுமான-அதன்மேலுள்ள காலமுமான, எந்தையே - எமது தந்தையே, எம்மானே - எம்பெருமானே, என்று என்று - என்று பலகாற் சொல்லி, ஏங்கி - ஏக்கங்கொண்டு, கன்று ஆகி கதறினர்க்கு - கன்றுபோலக் கதறினவர்களுக்கு, சேதா ஆகி—ஈன்றணிமையுடைய பசுப்போன்று, கடிதினில் வந்து - விரைந்து வந்து, அருள்கூறும் - அருள் புரியாநின்ற, கருணைவிண்ணே - கருணை வடிவாகிய ஆகாயமே. எ—று.

ஏங்கிக் கன்றாகிக் கதறினர்க்குச் சேதாவாகிக் கடிதினில் வந்தருள்கூறும் என்றமையால், அவ்வாறு ஏங்குதல் முதலாயின செய்யாதார்க்கு அருள் கூர்தலிலன் என்பது கூறாமலே யமையும்.

இதனை "மனைவிலங் கறுமைந்தனே கற்பக மரங்கனல் புனல் மூன்றுந்—தனையடைந்தவர் வறுமையுஞ்சீதமுந் தாகமுந் தவிர்த்தாளும் - அனைய வீசனு மடைந்தவர்க் கருள்செய்வான்" எனவருங் கைவல்லியத்தானு மறிக. விண்ணே என்பதாம். (சு)

138. அருள்பழுத்த பழச்சுவையே கரும்பே தேனே
யாரமிர்தே யென்கண்ணே யரிய வான
பொருளனைத்துந் தரும்பொருளே கருணை நீங்காப்
பூரணமாய் நின்றவொன்றே புனிதவாழ்வே
கருதரிய கருத்ததனுட் கருத்தாய் மேவிக்
காலமுந்தே சமும்வகுத்துக் கருவியாதி
விரிவினையுங் கூட்டியுயிர்த் திரளையாட்டும்
விழுப்பொருளே யான்சொலும்விண் ணப்பங் கேளே.

ப—ரை. அருள் பழுத்த பழச்சுவையே - அருளுருவாகப் பழுத்த பழத்தின் உருசியே, கரும்பே - கரும்பின் இரசமே, தேனே - தேனே, ஆர் அமிர்தமே - அரிய அமிர்தமே, என் கண்ணே - என் விழியே, அரிய ஆன பொருள் அனைத்தும் - அரியனவாகிய பொருள்கள் யாவையும், தரும்பொருளே— கொடுக்கிறவஸ்துவே, கருணைநீங்கா - கிருபை யகலாத, பூரணமாய் நின்றவொன்றே - நிறைவாகிநின்ற வொப்பற்றவஸ்துவே, புனிதவாழ்வே - பரிசுத்தமான வாழ்க்கையே, கருது அரிய - நினைத்தலரிதான, கருத்ததனுள் - நினைப்பினுள், கருத்தாய் - நினைப்பாகி, மேவி - பொருந்தி, காலமும் தேசமும் வகுத்து - காலதேசங்களையு நியமித்து, கருவி ஆதி—கருவிகள்முதலான, விரிவினையும் கூட்டி - விரிவையுஞ்சேர்த்து, உயிர்த்திரளை ஆட்டும் - உயிர்த்தொகுதியை ஆட்டுகின்ற, விழுபொருளே - மேலானபொருளே, யான்சொல்லும்- நான் முறையிடுகின்ற, விண்ணப்பம் கேள் - விண்ணப்பத்தைக் கேட்டருள்வாய். என்றவாறு.

சுவை மிகுதி பற்றியும் மனத்துக் கினிமையைத் தருதல் பற்றியும் அருள்பழுத்த பழச்சுவை என முற்கூறி, அம்மட்டில் தமக்குத் திருப்தி பிறவாமையால் நாவிற் கினிமை பயக்கும் கரும்பு தேன் முதலியவைகளைப் பிற்கூறினார் கண் இன்றிப் பதார்த்த தரிசனங் கூடாதாதலால, கண்ணே, அரிவான பொருளனைத்துந் தரும்பொருளே என்றார். "கருவியாதி விரிவினையுங்கூட்டி யுயிர்த்திரளை யாட்டும்" என்றது, "இருவினைப்பாசக் கயிற்றின்வழி ஆட்டுவிப்பானும் ஒருவனுண்டே" என்றதைபற்ற.

பழச்சுவை முதல் விழுப்பொருளே யென்னுமளவாகப் புகழ்ந்து, இப்பாட்டில் ஒருவாறு தெளிவடைந்து விண்ணப்பிக்கத் தொடங்கினார். (எ)

139. விண்ணவரிந் திரன்முதலோர் நாரதாதி
விளங்குசப்த ரிஷிகள்கன வீணை வல்லோர்
எண்ணரிய சித்தர்மனு வாதிவேந்த
ரிருக்காதி மறைமுனிவ ரெல்லாமிந்தக்
கண்ணகன்ஞா லம்மதிக்கத் தானே யுள்ளங்
கையினெல்லிக் கனிபோலக் காட்சி யாகத்
திண்ணியநல் லறிவாலிச் சமயத்தன் றோ
செப்பரிய சித்திமுத்தி சேர்ந்தா ரென்றும்.

ப—ரை. விண்ணவர் — (சாமானிய) தேவர்கள், இந்திரன் முதலோர் - இந்திரன்முதலிய விசேஷதேவர்கள், விளங்கு - விளங்காநின்ற, நாரதாதி — நாரதர் முதலானோர், சப்தரிஷிகள் — மகாவிருடியர் எழுவர், கனவீணைவல்லோர் பெரிய வீணை வல்லோராகிய தும்புரு முதலானோர், எண் அரிய - நினைதற்கரிய, சித்தர் — சித்தர்கள், மனுவாதி வேந்தர் - மனுமுதலிய மன்னர்கள், இருக்காதி மறைமுனிவர் - இருக்குமுதலிய வேதங்களையோதி அவற்றின்பொருளை யுள்ளவாறுணர்ந்த முனிவர்கள், எல்லாம் — (ஆகிய) எல்லாரும், இந்தகண்

அகல் ஞாலம் மதிக்க - இந்த இடமகன்ற உலகம் மதிக்கும்படியாக, உள்ளங்கையில் நெல்லிக்கனிபோல - உள்ளங்கையிலேந்திய நெல்லிப்பழம்போல, காட்சிஆக — பிரத்யக்ஷமாக, திண்ணிய - கலங்காத, நல் அறிவால் - சிறந்த ஞானத்தைக்கொண்டு, இச்சமயத்தன்றே - இச்சமயத்தி லிருந்து கொண்டல்லவா, என்றும் - எப்பொழும், செப்பரிய - சொல்லுதற்கரிய, சித்திமுத்தி சேர்ந்தார் சித்தி முத்திகளை யடைந்தார்கள், எ-று.

அத்திரி, ஆங்கீசன், கௌதமன், சமதக்நி, பாத்வாஜன், வசிட்டன், விஸ்வாமித்திரன் என்பார் சப்தரிஷிகள். அன்றி, அகத்தியன், ஆங்கிரசன், கௌதமன், காசிபன், புலத்தியன், மார்க்கண்டன், வசிட்டன், என்னு மிவர்களைக் கூறுதலுமுண்டு. சித்தி - அணிவாமுதலியன. முத்தி—மோக்ஷம்.

விண்ணவரிந்திரன் முதலோர் என்பதற்கு தேவர்களாகிய இந்திரன்முதலானோர் என்றுரைப்பினும் அமையும். (அ)

140. செப்பரிய சமயநெறி யெல்லாந் தந்தந்
தெய்வமே தெய்வமெனுஞ் செயற்கையான
அப்பரிசா ளருமஃதே பிடித்தா லிப்பா
லடுத்தவந்நூல் களும்விரித்தே யனுமா னாதி
ஒப்பவிரித் துரைப்பரிங்ஙன் பொய்மெய் யென்ன
வொன்றிலையொன் றெனப்பார்ப்ப தொவ்வா தார்க்கும்
இப்பரிசாஞ் சமயமுமா யல்லவாகி
யாதுசம யமும்வணங்கு மியல்ப தாகி.

ப-ரை. செப்பு அரிய - சொல்லுதற்கரிய, சமயநெறியெல்லாம் - சமயமார்க்கங்களெல்லாம், தம்தம்தெய்வமே தெய்வம்என்னும் - தங்கள்தங்கள் தெய்வங்களையே, (உண்மையான) தெய்வங்களென்று சாதியாநிற்கும், செயற்கை ஆன - அந்தச் செய்கைக்குள்ளான, அப்பரிசாளரும் - அந்தச்சமய நெறியினின்றோரும், அஃதேபிடித்து — அதையே பற்றி, ஆலிப்பால் - ஆரவாரத்தால், அடுத்த - தமக்கடுத்தவாகிய, அந்நூல்களும் விரித்து - அந்தச் சமயநூல்களை விரித்தும், அநுமானாதி ஒப்ப விரித்துரைப்பர் — அனுமான முதலிய பிரமாணங்களுக்கிணங்க விரித்துக் கூறுவார்கள், இங்ஙன் - இப்படி, பொய்மெய்யென்ன - ஒன்றுபொய் ஒன்றுமெய் என்றும், ஒன்று இலைஒன்று (உண்டு) என- (ஒன்றுஇல்லை ஒன்று உண்டு என்றும், பார்ப்பது—நோக்குவது, ஆர்க்கும் ஒவ்வாது - யார்க்கும்ஒத்திராது, இப்பரிசுஆம் - இத்தன்மையாகிய, சமயமுமாய்— (பல்வகை) சமயங்களாகியும், அல்லஆகி-அவையல்லாதனவாகியும், யாதுசமயமும் - எந்தச்சமயமும், வணங்கும் - பணியும்படியான, இயல்பதுஆகி - இயற்கை யுடையதாகி, எ—று.

அநுமானம் - என்வகை அளவைகளுள் ஒன்று, அவை யாவன,—காட்சி, அநுமானம், உவமானம், நுகமம், அருத்தாபத்தி, அபாவம், ஐதீகம், சம்பவமென்பன. காணல் — காட்சி, புகையைக்கண்டு நெருப்புண்டனல் அநுமானம். ம

ரைபசுப்போய்வது என்றல் உவமானம். பெரியோர் வாய்ச்சொல் ஆகமம். பக லுண்ணுன் பருத்திருப்பான் என்புழி இரவில் ஒளித்துண்பான் என உணர் தல் அருத்தாபத்தி, முன்னுமில்லை பின்னுமில்லை ஒருகாலத்துமில்லை யெனல் அபாவம் இம்மரத்தில் பேய் உளதுஎனல் ஐதீகம் ஆயிரத்தில் நூறு உண்டெ னல் சம்பவம் எனப்படும். (கூ)

141. இயல்பென்றுந் திரியாம லியம மாதி
யெண்குணமுங் காட்டியன்பா லின்ப மாகிப்
பயனருளப் பொருள்கள்பரி வார மாகிப்
பண்புறவுஞ் சௌபான பக்ஷங் காட்டி
மயலறுமந் திரஞ்சிக்ஷை சோதி டாதி
மற்றங்க நூல்வணங்க மௌனமோலி
அயர்வறச்சென் னியில்வைத்து ராஜாங் கத்தி
லமர்ந்ததுவை திகசைவ மழகி தந்தோ.

ப—ரை. என்றும் இயல்பு திரியாமல் - எக்காலத்தும் தன்னியற்கை கெ டாமல், இயமம்ஆதி எண்குணமும்காட்டி — இயமம்முதலாகிய எட்டுக்குணங் களையும் காட்டி, அன்பால் - அன்பினால், இன்பம்ஆகி - ஆநந்தமாகி, பயன்அ ருள - பயன்அளிக்க, பொருள்கள் — பொருள்களும், பரிவாரம் ஆகி - பரிவார ங்களும்ஆகி, பண்புஉறவும் — குணத்தைப்பொருந்தவும், சௌபான பக்ஷம்கா ட்டி — சௌபான பக்ஷத்தைக்காட்டி, மயல்அறு - மயக்கமறுகைக்கேதுவான, மந்திரம் - மந்திரமும், சிக்ஷை - சிக்ஷையும், சோதிடாதி - சோதிடம் முதலா கிய, மற்று - பிறிதாயுள்ள, அங்கநூல் - உறுப்புநூல்களும், வணங்க - பணியு ம்படி மௌனமோலி - மௌனநிலையாகிய கிரீடத்தை, அயர்வு அற — சோர் வொழிய, சென்னியில் வைத்து - சிரசில் வைத்து, ராஜாங்கத்தில் - ராஜரீகத் தில், அமர்ந்தது - வீற்றிருந்தது, வைதிகசைவம் - வேதசம்பந்தமாகிய சைவ சமயம், அழகிது — இது அழகியது அந்தோ - அந்தோ, எ—று.

மந்திரம், வியாகரணம், நிகண்டு, சந்தோபிசிதம், நிருத்தம், சோதிடம் எ ன்னும் வேதங்களை மந்திரசிக்ஷை சோதிடாதி என்றார். மௌனநிலையில் நிற்ற லே முத்திநெறியென்பார். அந்நிலையை சைவ சமயத்திற்குக் கிரீடமாக உரு வகஞ்செய்தார். சைவசமயமே பலசமயங்களிலும் சிறந்ததேன்பார் சைவம் அ ழகியது என்றார்.

அவை:—சரியை, யோகம், ஞானம் என்பன. (௧௦)

142. அந்தோவீ ததிசயமிச் சமயம் போலின்
றறிஞரெல்லா நடுவறிய வணிமா வாதி
வந்தாடித் திரிபவர்க்கும் பேசா மோனம்
வைத்திருந்த மாதவர்க்கு மற்று மற்றும்

இந்திராதி போகநலம் பெற்ற பேர்க்கு
மிதுவன்றித் தாயகம்வே றில்லை யில்லை
சந்தான கற்பகம்போ லருளைக் காட்டத்
தக்கநெறி யிந்நெறியே தான்சன் மார்க்கம்.

ப-ரை. அந்தோ-அந்தோ, ஈது அதிசயம், இது ஆச்சரியகரம், (ஆதலால்) இச்சமயம்போல் இன்று - இந்தச் சமயம்போல் பிறிதொன்று மில்லை, அறிஞர் எல்லாம் - ஞானிகளெல்லாம், நடுஅறிய - நடுவு நிலைமையிலிருந்து உணருமிடத்து, அணிமாஆதி – அணிமாதி சித்திகள், வந்து - கைகூடி, ஆடிதிரிபவர்க்கும்-விளையாடி திரிபவர்க்கும், பேசாமோனம் வைத்திருந்த, மாதவர்க்கும்-பெரிய தவத்தினை யுடையார்க்கும், மற்றுமற்றும் - மென்மேலும், இந்திராதி போகநலம் பெற்றபேர்க்கும் இந்திரன் முதலிய இறையவர் பதவிகளைப் பெற்றவர்க்கும், இதுஅன்றி - இதையல்லது, தாயகம் - மாத்ருஸ்தாநம், வேறுஇல்லை இல்லை - மற்றொன்றுமில்லை யில்லை, சந்தான கற்பகம்போல் - சந்தானகற்பக விருக்ஷங்கள்போல, அருளைக் காட்ட – திருவருளைக் காட்டுதற்கு தக்கநெறி - தகுதியாகிய மார்க்கம், இந்நெறியே - இந்தமார்க்கமே, சன்மார்க்கம்–(இதுவே) சன்மார்க்கமென்று சொல்லப்படும்.

சத்மார்க்கம் என்பது சன்மார்க்கமென நின்றது. சந்தாநம் கற்பகம் என்பன பஞ்சதருக்கள். அவையாவன:—அரிசந்தம், கற்பகம், சந்தானம் - பாரிசாதம், மந்தாரம் என்பன. (கக)

143. சன்மார்க்க ஞானமதின் பொருளும் வீறு
சமயசங்கே தப்பொருளுந் தானொன் றாகப்
பன்மார்க்க நெறியினிலுங் கண்டதில்லை
பகர்வரிய தில்லைமன்றுட் பார்த்தபோதங்
கென்மார்க்க மிருக்குதெல்லாம்வெளியே யென்ன
வெச்சமயத் தவர்களும்வந் திறைஞ்சா நிற்பர்
கன்மார்க்க நெஞ்சமுள வெனக்குந் தானே
கண்டவுட னனந்தங் காண்ட லாகும்.

ப-ரை. சன்மார்க்க ஞானமதின் பொருளும் – சந்மார்க்க மாகிய சைவசமய ஞானப்பொருளும், வீறு -(தாம்தாமே மேலானவை யென்னு) இறுமாந்திருக்கிற, சமயம் – சமயநூல்களால், சங்கேதம் நிச்சயிக்கப் பட்ட, பொருளும் – அர்த்தமும், ஒன்றுஆக - ஒன்று சேர்ந்திருக்க, பன்மார்க்க நெறியினிலும் - பல சமயவழிகளிலும், கண்டதுஇல்லை - பார்த்ததில்லை, பகர்வு அரிய–செல்லுதற்கரிய. தில்லைமன்றள் – தில்லையம்பலத்தில், பார்த்தபோது - தரிசித்தபோது அங்கு - அவ்விடத்தில், என்மார்க்கம் இருக்குது - என்னவழி யிருக்கின்றது, எல்லாம்வெளியே என்ன - யாவும் வெளியேயென்று, எச்சமயத்தவர்களும் - எல்லாச் சமயத்தார்களும் வந்து, இறைஞ்சாநிற்பர் - வந்துபணியா

நிற்பர், கல்மார்க்க நெஞ்சம்உள்ள - கல்லின தியற்கையுள்ள மனத்தையுடைய எனக்கும் - அடியேனுக்கும், கண்டவுடன் - பார்த்தபொழுதே, ஆனந்தம் கா, ண்டல் ஆகும் - இன்பம் கானலாயிருக்கும், எ-று.

சங்கேதம் – குழூஉக்குறி, தில்லைமன்று சிதாகாயமாகிய வேறுவெளியா தலாலும், சமயாதீதப் பழம்பொருளைக் கைவந்திடவே மன்றுள்தெளி காட்டு வது சைவசமயமே யாதலாலும், எவ்வகைச் சமயத்தாரும்வந்து வணங்காநிற் பார் என்பார். "தில்லைமன்றுட் பார்த்தபோதங், கென்மார்க்க மிருக்கு தெல் லாம் வெளியே" "எச்சமயத்தவர்களும் வந்திறைஞ்சா நிற்பர்" என்றும், இத னைக்கண்டால் அறிஞர்க்கு ஆனந்த முண்டாதலேயன்றிக் கன்னெஞ்சர்க்கும் இன்பமுதிக்குமென்பார், "கன்மார்க்கநெஞ்சமுள வெனக்குந் தானேகண்டவு டனானந்தங் காண்டலாகும்" என்றும் கூறினர். (கஉ)

144. காண்டல்பெறப் புறத்தினுள்ள படியே யுள்ளும்
காட்சிமெய்ந்நூல் சொலும்பதியாங் கடவுளேநீ
நீண்டநெடு மையுமகலக் குறுக்குங் காட்டா
நிறைபரிபூ ரணவறியாய் நித்தமாகி
வேண்டுவிருப் பொடுவெறுப்புச் சமீபந் தூரம்
விலகலணு குதன்முதலாம் விவகாரங்கள்
பூண்டவள வைகண்மனவாக் காதி யெல்லாம்
பொருந்தாம லகம்புறமும் புணர்க்கையாகி.

ப-ரை. காண்டல்பெற - பிரத்யக்ஷமாக, புறத்தின் உள்ளபடியே - புறத் தினுள்ள வகையே, உள்ளும்–உள்ளிடத்துமாவென்று, மெய் உண்மையாகிய, காட்சிநூல் சொல்லும் - அறிவுநூல்கள் கூறுநிற்கும், பதிஆம் – பதிப்பொரு ளாகிய, கடவுளே - சுவாமீ, நீ-நீ நீண்ட நெடுமையும் - நீண்ட நெடுமையும், அ கலக்குறுக்கும் . அகலக்குறுக்கமும், காட்டா காட்டாத, நிறைபரிபூரண அறி வாய், நிறைந்த பரிபூரணஞானமாகி, நித்தம்ஆகி - சாசுவதமாகி, வேண்டு விரு ப்பொடு, இச்சிக்கின்ற – விருப்பத்துடன், வெறுப்பு–வெறுப்பும், சமீபம்தூ ரம் – சமீபதூரங்களும். விலகல்அணுகுதல் - நீங்குதல் சேர்தல்களும், முதல் ஆம் விவகாரங்கள் - முதலாகிய விவகாரங்களும், பூண்டஅளவைகள் - பொரு ந்திய பிரமாணங்கள், மனவாக்காதி எல்லாம் - மனம்வாக்கு முதலாகிய யாவற் றிலும், பொருந்தாமல் - அணுகப் பெறுமல், அகம்புறமும் புணர்க்கை ஆகி– உள்ளும் புறமும் கலப்பதாகி, எ-று.

"புறத்தி னுள்ளபடியே யுள்ளும்" என்றது, "மனத்தான் கண்ணினகத் தான்" எனவும், "உடலும் மெனதுயிரும் புகுந்தொழி யாவண்ண நிறைந்தா ன்" எனவும்மேலோர் கூறியபடி.

ராகத்வேஷங்களும் அண்மை சேய்மைகளும் பிரிவு பிரியாமைகளும்கா ட்சிமுதலிய அளவைகளும் மனோவாக்குக் காயங்களும் ஆகிய விவகாரங்கள்எ ன்று மில்லாததாதலால், "வேண்டு விருப்பொடு வெறுப்புச் சமீபந்தூரம் வில

கலனுகுதன்முதலாம் விவகாரங்கள் பூண்ட வளவைகள் மனவாக்காதி யெல்லாம் பொருந்தாமல்" என்றார். (௧௩)

145. ஆகியசற் காரியவூ கத்துக்கேற்ற
வமலமாய் நடுவாகி யனந்த சத்தி
யோகமுறு மானந்த மயமதாகி
யுயிர்க்குயிரா யெந்நாளு மோங்கா நிற்ப
மோகவிருண் மாயைவினை யுயிர்கட் கெல்லா
மொய்த்ததென்கொ லுபகார முயற்சியாகப்
பாகமிகு வருளவொரு சத்தி வந்து
பதிந்ததென்கொ னானெனுமப் பான்மை யென்கொல்.

ப—ரை. ஆகிய சற்காரிய ஊகத்துக்கு ஏற்ற - உண்டாகிய சத்கிருத்யத்துக்குரிய யுக்திக்குதக்க, அமலமாய் - மலாகிதமாய், நடுவாகி - நடவுநிலை யுள்ளதாகி, அனந்த சத்தியோகம்உறும் - முடிவற்ற சக்திகளின் சேர்க்கையைப் பொருந்திய, ஆனந்தமயமதாகி - சுகரூபமாகி, உயிர்க்குஉயிர் ஆய் - உயிருக்குயிராகி, எந்நாளும் - எப்பொழுதும், ஓங்காநிற்ப-உயிராநிற்க, மோக இருள்-அஞ்ஞான - இருளும், மாயை - (அதற்கடியான) மாயையும், வினை - (அதனால் நிகழ்விக்கப்படுகிற) வினைகளும், உயிர்கட்கு எல்லாம் - எல்லா வுயிர்களுக்கும் மொய்த்தது என் - வந்தடைந்ததற்குக் காரணம்யாது, உபகாரம் முயற்சிஆக-தன்னால் செய்யப்படும் உதவியே உயிர்களின் முயற்சியாக, பாகம் - பரிபக்குவத்தை, மிகஅருள — மிகவு மளித்தற் பொருட்டு, ஒரு சத்திவந்து பதிந்தது என் - ஒருசத்திவந்து பதிந்ததற்குக் காரணம்யாது, நான் என்னும் அப்பான்மைஎன் — நான்என்று சொல்லுகிற அந்தத் தன்மை (யுண்டானதற்குக் காரணம்) யாது, எ-று.

கிருத்தியம் - தொழில், சத்தி பதிதலைச் சத்திநிபாதம்என்பர். நானெனுமப்பான்மை என்றது, அகங்காரம். (௧௪)

146. நானென்னு மோரகந்தை யெவர்க்கும் வந்து
நலிந்தவுடன் சகமாயை நானா வாகித்
தான்வந்து தொடருமித்தால் வளருந் துன்பச்
சாகரத்தின் பெருமையெவர் சாற்றவல்லார்
ஊனென்று மூடலென்றுங் கரண மென்று
முள்ளென்றும் புறமென்று மொழியா நின்ற
வானென்றுங் காலென்றுந் தீநீரென்று
மண்ணென்று மலையென்றும் வனம தென்றும்.

ப-ரை. நான் என்னும் ஓர்அகந்தை - நானென்கிற ஒரு அகம் பாவமானது, எவர்க்கும்வந்து - யாவரிடத்துந்தோன்றி, நலிந்தவுடன் — அவர்களை வருத்தினவுடன், சகமாயை - லோகமாயையானது, நானாஆகி - பலபேதமாகி, வ

ந்துதொடரும் — வந்துபற்றும், இத்தால்வளரும் - இதனால் விருத்தி யடைகின்ற, துன்பசாகரத்தின் பெருமை - துக்கசமுத்திரத்தின் பெருமையை. சாற்றவல்லார் எவர் - எடுத்துக்கூற வல்லவர்யாவர், ஊன்என்றும் - மாமிச மென்றும், உடல்என்றும் - (அதனாற் செய்யப் பட்டதாகிய) தேகமென்றும் கரணம்என்றும் - (அதற்குள்ளிருக்கிற) அந்தக் காரணங்களென்றும், உள் என்றும் புறம்என்றும் - அகமென்றும் புறமென்றும், எழியாநின்ற - விடாது நின்ற வான்என்றும் - ஆகாய மென்றும், கால்என்றும் காற்றென்றும், தீ நீர் என்றும் . அக்நி ஜலங்களென்றும், மண்என்றும் - பிருதிவியென்றும், மலை என்றும்-மலைகளென்றும், வனமதென்றும் - அடவியென்றும், எ-று.

பெருமை - கரையேறக்கூடாத பரப்பு, (கரு)

147. மலைமலையாங் காட்சிகண்கா ணமை யாதி
மறப்பென்று நினைப்பென்று மாயா வாரி
அலையலையா யடிக்குமின்பத் துன்ப மென்று
மதைவிளைக்கும் வினைகளென்று மதனைத் தீர்க்கத்
தலைபலவாஞ் சமயமென்றுந் தெய்வ மென்றுஞ்
சாதகரென்று மதற்குச் சாக்ஷியாகக்
கலைபலவா நெறியென்றுந் தர்க்கமென்றுங்
கடலுறுநுண் மணலெண்ணிக் காணும்போதும்.

ப-ரை. மலை மலைஆம்காட்சி - மலை மலையாகத்தோன்றுங் காட்சியும், கண்காணமைஆதி - கட்புலனுகாமை முதலாகிய, மறப்பு என்றும் - மறதியென்றும், நினைப்புஎன்றும் - நினைத்தல் என்றும், மாயாவாரி - மாயாசமுத்திரத்துள், அலை அலை ஆய் அடிக்கும் - அலையலையாய்மோதுகின்ற, இன்பம் துன்பம்என்றும் - சுக துக்கங்களென்றும், அவைவிளைக்கும் - அவற்றை யுண்டாக்குகிற, வினைகள் என்றும் - கர்மங்க ளென்றும், அவற்றை தீர்க்க - அவற்றை நீக்க, தலைபலஆம் சமயம்என்றும் - பல காரணங்களா லுண்டாகிய சமயங்களென்றும், தெய்வம்யென்றும் - (அவைகட்கேற்ற) தெய்வங்களென்றும், சாதகர்என்றும் - அப்பியாசிகளென்றும், அதற்கு சாக்ஷியாக - அந்தப்பழக்கத்துக்குச் சாக்ஷிபூதமாக, கலைகலைஆம் நெறிஎன்றும் - பலநூல்களாலுரைக்கப்பட்ட மார்க்கங்களென்றும், தர்க்கம்என்றும் - நியாயசாத்திரமென்றும், கடல்உறும், கடலிற் பொருந்திய, நுண்மணல் - நுண்ணியமணலை, எண்ணிக்காணும்போதும் - எண்ணிப்பார்த்து அளவு காணுமிடத்தும், எ-று. (கசு)

148. காணரிய வல்ல லல்லாந் தானே கட்டுக்
கட்டாக விளையுமதைக் கட்டோ டேதான்
வீணினிற்கர்ப் பூரமலை படுதீப் பட்ட
விந்தையெனக் காணவொரு விவேகங் காட்ட

ஊணுறக்க மின்பதுன்பம் பேரூராதி
யொவ்விடவு மெனைப்போல வுருவங் காட்டிக்
கோணறவொ மான்காட்டி மானையீர்க்குங்
கொள்கையென வருண்மௌன குருவாய் வந்து.

ப-ரை. காண் அரிய - அளவு காண்டதற்கரியவான, அல்லல் எல்லாம்-துன்பங்கள் யாவும், கட்டுகெட்டு ஆகவிளையும் - கூட்டங் கூட்டமாக உளவாகும், அதை - அவ்விளைவை, கட்டோடே - வேருடனே, வீணினில் - பயனிலதாக, கர்ப்பூரமலை — கர்ப்பூர மலையானது, படுதீப்பட்ட விந்தையெனகாண - மிக்க தீப்பட்டழிந்த ஆச்சரியம்போலத் தோன்றும்படி, ஒருவிவேகம்காட்ட - ஒரு ஞானத்தை எனக்கறிவித்தற்காக, ஊண் உறக்கம் - ஆகாரநித்திரைகளும், இன்பதுன்பம் - சுகதுக்கங்களும், பேர் ஊர் ஆதி - நாமம் இடம் முதலானவைகளும், ஒவ்விடம் - ஒந்திருக்கவும், என்னைப் போல உருவம் காட்டி-என்னைப் போல மானுடசட்டைசாத்தி, கோன் அற - களங்கம்நீங்க, ஓர் மான்காட்டி-ஒருமானைக்காட்டி. மானை ஈர்க்கும் கொள்கைஎன - மற்றொரு மானைப் பிடிக்குஞ் செய்கைபோல. அருள் - அருளையுடைய, மௌனகுருவாய்வந்து - மௌனகுருவாகி எழுந்தருளி, எ-று.

ஈர்த்தல் - இழுத்தல். இவ்விடத்துப் பிடித்தல் என்க. (கஎ)

149. வந்தெனுடல் பொருளாவி மூன்றுந் தன்கை
வசமெனவே யத்துவா மார்க்கநோக்கி
ஐந்துபுல னைம்பூதங் கரண மாதி
யடுத்தகுண மத்தனையு மல்லை யல்லை
இந்தவுட லறிவறியா மையுநீ யல்லை
யாதொன்று பற்றினத னியல்பாய் நின்று
பந்தமறும் பளிங்கனைய சித்து நீயுன்
பக்குவங்கண் டறிவிக்கும் பான்மை யோம்யாம்.

ப-ரை. வந்து - வந்து, என் உடல் பொருள் ஆவி மூன்றும் - என் தேகமும் பொருளும் உயிரும் ஆகிய மூன்றும், தன் கைவசம் என - தன்கைவசமானவை யெனக்கொண்டு, அத்துவா மார்க்கம் நோக்கி - அத்துவாமார்க்கத்தைப்பார்த்து, ஐந்து புலன் - ஐந்து புலன்களும், ஐம்பூதம் - பஞ்சபூதங்களும் கரணம் ஆதி - அந்தக்கரணங்கள் முதலாக, அடுத்த குணம் அத்தனையும்—பொருந்திய எல்லாக் குணங்களும், அல்லை அல்லை - நீ யல்லை யல்லை, இந்த உடல் - இந்த தேகமும், அறிவு அறியாமையும் - அறிவறியாமைகளும், நீ அல்லை - நீயல்லை, யாதொன்று பற்றின் - யாதொரு பொருளைக் கவரினும், அதன் இயல்பாய் நின்று - அதின் மயமாகி நின்றும், பந்தம் அறும் - அதன் தொடர்பு இல்லாத, பளிங்கு அனைய - ஸ்படிகத்தைப்போன்ற, சித்துநீ—சித்துப்பொருள் நீயாயிருக்கின்றனை, உன் பக்குவம் கண்டு-உன் பருவம் நோக்கி,

அறிவிக்கும் பான்மையேம் - அறிவுறுத்தும் தன்மையினையுடையேம், யாம்— நாமாகவிருக்கிறோம். எ—று.

சீவன், எதிரிட்ட நிறங்களைப்பற்றியும் தன்னியல்புகெடாத படிகக்கல் லைப்போல, எதிரிட்ட விடயங்களின் மயமாய்த் தோன்றுவதே யன்றித் தன் னியல்பு கெடாதென்பார். "யாதொன்று பற்றினத னியல்பாய் நின்று பந்த மறும் பளிங்கனைய சித்து நீ" என்றார். (கஅ)

150. அறிவாகி யானந்த மயமா யென்று
மழியாத நிலையாகி யாதின் பாலும்
பிறியாமற் றண்ணருளே கோயி லான
பெரியபரம் பதியதனைப் பெறவேண்டின்
நெறியாகக் கூறுவன்கே ளெந்த நாளு
நிர்க்குணநிற் குளம்வாய்த்து நீடு வாழ்க
செறிவான வறியாமை யெல்லா நீங்கச்
சிற்சுகம்பெற் றிடுகபந்தந்தீர்க வென்றே.

ப—ரை. அறிவாகி - சித்தாகி, ஆனந்தமயமாய் - ஆனந்தவடிவாகி, என் றும் அழியாத நிலையாகி - முக்காலத்திலுங் கெடாத சத்துப்பொருளாகி, யா தின்பாலும் - எதனிடத்தும், பிறியாமல் - விலகாமல், தண் அருளேகோயில் ஆன - தண்ணிய அருளே கோயிலாகப்பெற்ற, பெரிய பரம்பதியதனை—பெ ரிய மேலான பதிப்பொருளை, பெறவேண்டின் - பெறுதலையே விரும்பினை யாயின், நெறியாகக் கூறுவன் - முறையாகச் சொல்வேன், கேள் - கேட்பா யாக, எந்நாளும் - எக்காலத்தும், நிற்குணம் - நிர்க்குணப்பொருள், நிற்கு— உனக்கு, உள்ளம் வாய்த்து - மனத்திற் பொருந்தப்பெற்று, நீடுவாழ்க—நெடுங் காலம் சீவித்திருக்கக்கடவை, செறிவான-மிகுதியான, அறியாமையெல்லாம் நீங்க - அஞ்ஞானம் முற்றுமகல, சிற்சுகம் பெற்றிடுக - ஞானானந்த சுகத்தை ப்பெறக்கடவை, பந்தம்தீர்க - பிறவிப்பிணியை ஒழியக்கடவை, என்று— என்றுசொல்லி. எ—று. (கக)

151. பந்தமறு மெய்ஞ்ஞான மான மோனப்
பண்பொன்றை யருளியந்தப் பண்புக் கேதான்
சிந்தையில்லை நானென்னும் பான்மையில்லை
தேசமில்லை காலமில்லை திக்கு மில்லை
தொந்தமில்லை நீக்கமில்லை பிறிதுமில்லை
சொல்லுமில்லை யிராப்பகலாந் தோற்றமில்லை
அந்தமில்லை யாதியில்லை நடுவுமில்லை
யகமுமில்லை புறமுமில்லை யனைத்து மில்லை.

ப—ரை. பந்தம் அறும் - பந்தமொழிவதற்குக் காரணமான, மெய்ஞ்ஞா னமான - உண்மையறிவாகிய, மோனப்பண்பு ஒன்றை அருளி - மோனநிலை

யாகிய ஒப்பற்ற பொருளை யனுக்கிரகித்து, அந்த பண்புக்கு - அந்தத்தன்மைக்கு, சிந்தை இல்லை - மனமில்லை, நான் என்னும் பான்மையில்லை - நானென்னுந் தகுதியில்லை, தேசம் இல்லை - தேசமென்பதில்லை, காலம் இல்லை - காலமென்பதில்லை, திக்கும் இல்லை - திசையுமில்லை, தொந்தம் இல்லை - தொடர்ச்சி இல்லை. நீக்கம் இல்லை - பிரிவில்லை. பிறிதும் இல்லை - பிறிதொன்றாந் தன்மையுமில்லை சொல்லும் இல்லை - வாக்குமில்லை. இராப்பகல் ஆம் தோற்றம் இல்லை - இரவு பகல்களாகிய காட்சியில்லை. அந்தம் இல்லை - முடிவில்லை, ஆதியில்லை - முதலில்லை. நடுவும் இல்லை - இடையுமில்லை. அகமும் இல்லை - உள்ளுமில்லை. புறமும் இல்லை - வெளியுமில்லை. அனைத்தும் இல்லை - யாவும் இல்லை. எ-று

பண்பு-குணம். அது இவ்விடத்து நிலைமையை யுணர்த்திற்று (உ0)

152. இல்லையில்லை யென்னினொன் றுமில்லா தல்ல
வியல்பாகி யென்றுமுள்ள வியற்கை யாகிச்
சொல்லரிய தன்மையதா யான்றா னென்னத்
தோன்றாதெல் லாம்விழுங்குஞ்சொரூபமாகி
அல்லையுண்ட பகல்போல வவித்தை யெல்லா
மடையவுண்டு தடையறவுன் னறிவைத்தானே
வெல்லவுண்டிங் குன்னையுந்தா னாகக் கொண்டு
வேதகமாய்ப் பேசாமை விளங்குந் தானே.

ப-ரை. இல்லை இல்லை என்னின் - இல்லை இல்லை யென்று சொல்லப்புகுந்தால், ஒன்றும் இல்லாதல்ல - என்றும் இல்லாததல்ல, இயல்பு ஆகி - (எப்பொழுதுமுள்ள) இயற்கையேயாகி, என்றும் உள்ள இயற்கையாகி - (இவ்வியற்கையும்) எப்பொழுதும் உள்ள இயற்கையாகி, சொல்லரிய தன்மையதாய் கூறுதற்கரிய குணத்தை யுடையதாய், யான் தான் என்ன தோன்றாது - யான்தான் என்று காணப்படாமல், எல்லாம் விழுங்கும் சொரூபமுமாகி - எல்லாவற்றையும் உட்கொள்ளுகின்ற சொரூபமாகி, அல்லை உண்ட பகல்போல - இருளைக்கெடுக்கும் சூரியன்போல, அவித்தை எல்லாம் - அஞ்ஞானத்தை யெல்லாம், அடைய உண்டு - முற்றும்அழித்து, தடையற - தடைகளற்றொழிய, உன் அறிவைத்தானே - உன் அறிவை, வெல்ல - வென்று, உண்டு - விழுங்கி, இங்கு - இவ்விடத்து, (விவரித்தற்குரிய) உன்னையும் - (தொம்பதப் பொருளாகிய) தானாகக்கொண்டு, பேசாமை - மோனநிலையானது, வேதகமாய் விளங்கும் - உனது நிலையை வேறுபடுத்துவதாய் உனக்கு விளக்கிக்காட்டு, எ-று.

அஞ்ஞானம், சந்தேகம், விபரீதம் என்பன தடைகள். அஞ்ஞானம் பிரமபாவனையைமறந்து வேறுபடுவது, ஆசிரியன் வார்த்தையை நம்பாமல் கலங்குவது, சந்தேகம் - விபரீதம். அதுபிரபஞ்சம் உண்மை யென்றும் தேகமே நானென்றும் மனத்திலுண்டாகிய மோகம். இதனை,

"பிரமபா வனையைமூடிப் பே ங்காட் டுவதஞ் ஞானம்
குரவன்வாக் கியநம் பாமற் குழம்புவ தாஞ்சந் தேகம்
திரமறு சகமெய் யென்றுந் தேகநா னென்று முள்ளே
விரவிய மோகந் நானே விபரீதமென்போர்மேலோர், எனக்கூறிய மேலோர் வாக்கானறிக. (உக)

153. தானான தன்மயமே யல்லா லொன்றைத்
தலையெடுக்க வொட்டாது தலைப்பட் டாங்கே
போனாலுங் கர்ப்பூரத் தீபம்போலப்
போயொளிப்ப தல்லாது புலம்வே றின்றாம்
ஞானகா ரத்தினொடு ஞேய மற்ற
ஞாதுருவு நழுவாம னழுவி நிற்கும்
ஆனாலு மிதன்பெருமை யெவர்க்கார் சொல்வா
ரதுவானா லதுவாவ ரதுவே சொல்லும்.

ப—ரை. தான்ஆன - (எல்லாப் பொருள்களுந்) தானேயான, தன்மயமே அல்லால் — தன்மயமேயன்றி, ஒன்றை தலையெடுக்க வொட்டாது - பிறிதொன்றையுந் தலையெடுக்கவிடாது, தலைப்பட்டு ஆங்கே போனாலும் - தலையெடுத்து அவ்விடத்தே சென்றாலும், கர்ப்பூர தீபம்போல - கர்ப்பூரதீபத்தை யொத்து, போய்ஒளிப்பது அல்லாது - ஒன்றுபட்டு மறைவ தல்லாமல், புலம்வேறு இன்றாம் - (உன்) அறிவுவேறாய் (பிறிது) இல்லையாகும், (மேலும்) ஞானகாரத்தினொடு — ஞான ரூபத்தோடு, ஞேயம் — ஞேயமும், ஞாதுறும் - ஞாதுருவும், நழுவாமல் நழுவிநிற்கும் - நீங்காமல் நீங்கிநிற்கும், ஆனாலும் - ஆயினும், இதன்பெருமை — இதன்பெருமையை, ஆர் எவர்க்குசொல்வார் - எவர் எவர்க்குசொல்லவல்லார் அதுஆனால் - அதுவாகி விட்டால், அதுஆவர் - (தாம்முன்னிருந்த தன்மை தோன்றாமல்) அதுவேயாகி விடுவார், அதுவேசொல்லும்-அந்தப்பொருளே (அதின்சிறப்பை) உணர்த்தும், எ—று.

ஞானம், ஞேயம், ஞாதுரு என்பன திரிபுடி எனப்படும். (உஉ)

154. அதுவென்றே லதுவெனவொன் றடுக்குஞ் சங்கை
யாதலினா லதுவெனலு மறவே விட்டு
மதுவுண்ட வண்டெனவுஞ் சனக னாதி
மன்னவர்கள் சுகர்முதலோர் வாழ்ந்தா ரென்றும்
பதியிந்த நிலையெனவு மென்னை யாண்ட
படிக்குநிரு விகற்பத்தார் பராமா னந்தக்
கதிகண்டு கொள்ளவுநின் னருள்கூ ரிந்தக்
கதியன்றி யுறங்கேன்மேற் கருமம் பாரேன்.

ப—ரை. அதுஎன்றால் - அதுவென்றுசொன்னால், எதுஎன — எதுவென்று, சங்கைஒன்றுஅடுக்கும் - சந்தேகமொன்றுண்டாகும், ஆதலினால் - ஆனபடியால், அதுஎனலும் - அதுவென்பதையும், அறவேவிட்டு - முழுதுமே நீங்கி மதுஉண்ட வண்டுஎனவும் - மதுபானம் பண்ணின வண்டுபோலவும், சனகன் ஆதி மன்னவர்கள் - ஜனகன்முதலிய மன்னவர்களும், சுகர்முதலோர் - சுகர் முதலிய மஹரிஷிகளும், வாழ்ந்தார்என்றும் - வாழ்ந்தனர் என்றும்-இந்தநிலை-இந்நிலையில், பதிஎனவும் - படிந்துநில்லென்று நியமித்தும், என்னை ஆண்டபடிக்கு - என்னை யாட்கொண்டருளின படியே, நிருவிகற்பத்தால் - நிர்விகற்ப சமாதியால், பரமஆனந்த கதிமேலாகிய சுககதியை, கண்டுகொள்ளவும் - கண்டுகொள்ளும் படியாமவும், நின்அருள்கூர் - உன்கிருபை கூர்ந்தருளவேண்டும், இந்தக்கதிஅன்றி — இந்தக்கதியைப் பெற்றதுமல்லாமல் - உறங்கேன் - தூங்கேன், மேல் கருமம் பாரேன் - மேல் நடக்க வேண்டிய செயல்களையும் காணேன், எ-று.

ஜனகன், சிகித்துவசன், பகீரதன், மாமலிமுதலியோர், சனகனாதிமன்னவர்கள் - சுகமுனிவர்க்கு அனுபவத்தில் ஐயமறுத்தவர் ஜனகராஜ ராகையால் அத்தலைப் பற்றி சனகனாதி மன்னவர்கள் என முற்கூறி, சுகர் முதலானாரைப் பிற்கூறினார் என்க. (உரு)

155. பாராதி விண்ணனைத்து நீயாச் சிந்தை
பரியமட லாவெழுதிப் பார்த்துப் பார்த்து
வாராயோ வென்பிராண நாதா வென்பேன்
வளைத்துவளைத் தெனைநீயா வைத்துக் கொண்டு
பூராய மாமேலொன் றறியாவண்ணம்
புண்ணுளர் போனெஞ்சம் புலம்பி யுள்ளே
நீராள மாயுருகிக் கண்ணீர் சோர
நெட்டுயிர்த்து மெய்ம்மறந்தோர் நிலையாய் நிற்பேன்.

ப—ரை. பார் ஆதி விண் அனைத்தும் - மண்முதல் விண்ணிறுவாயுள்ள பூதங்களும் (அவற்றானுளவாகிய) இயற்கியற்பொருள் நிலையியற்பொருள் (என்னுமிருவகைப் பௌதிகங்) களும், நீ ஆ-நீயாகவே பாவித்து, சிந்தை — என்மனத்தை, பரியமடலா - பெரிய ஏடாகக்கொண்டு, எழுதி - அவ்வேட்டில் (இதனை) எழுதி, பார்த்துபார்த்து - பலகாலும் நோக்கி, என்பிராணநாதா - என் பிராண நாயகனே, வாராயோ என்பேன் - வந்தருளாயோ என்று கூறுவேன், என்னைவளைத்து வளைத்து - என்னைப்பன்முறை தடுத்து, நீஆ வைத்துக்கொண்டு - நீயாகவே வைத்துக் கொள்ளுகையால், மேல்ஒன்று - மேல் ஒருகாரியத்தையும், பூராயமா - ஆதியந்தமாக, அறியாவண்ணம் — தெரியாதபடி, புண்ணுளர்போல் — புண்ணுளிகள்போல, நெஞ்சம் உள்ளே புலம்பி-நீராளமாய் உருகி — மனமானதுவருந்தி உள்ளிடத்திற்றானே ஜலமயமாய் உருகி, கண்ணீர் சோர - கண்ணீரா யொழுக, நெட்டுயிர்த்து - பெருமூச் செறிந்து, மெய்ம்மறந்து, சரீரத்தைமறந்து, ஓர்நிலையாய் நிற்பேன்-ஒரு நிலைப்பட்டு நிற்பேன்,எ-று.

"என்னிலும் மினியானொருவனுளன்" என்னும் மேலோர் திருவாக்குப்போல, உயிர்க்குயிராதலால் என் பிராணநாதனென்றார். (௨௪)

156. ஆயுமறி வாகியுன்னைப் பிரியாவண்ண
மணைந்துசுகம் பெற்றவன்போ ரையோ வென்னத்
தீயகொலைச் சமயத்துஞ் செல்லச் சிந்தை
தெளிந்திடவுஞ் சமாதானஞ் செய்வேன்வாழ்வேன்.
காயிலைபுன் சருகாதி யருந்தக் கானங்
கடன் மலையெங் கேயெனவுங் கவலை யாவேன்
வாயில்கும்பம் போற்கிடந்து புரள்வேன் வானின்
மதிகதிரை முன்னிலையா வைத்து நேரே.

ப-ரை. உன்னை ஆயும் அறிவுஆகி உன்னை ஆராய்கின்ற ஞானத்தை யுடையராகி, பிரியாவண்ணம் அணைந்து — நீங்காதபடிசேர்ந்து, சுகம்பெற்ற அன்பர் - இன்பமுற்ற உன்அடியார்கள், ஐயோஎன்ன - ஐயோவென்றிரங்க, தீய கொடிய, கொலை சமயத்தும் சிந்தைசெல்ல - கொலைபுரியும் சமயசமயங்களிலும் மனம் செல்ல, தெளிந்திடவும் — (அம்மனம் அச்சமய நெறிகளிற் செல்லாது) தெளியடையவும், சமாதானம் செய்வேன் - நானே சமாதானம் பண்ணுவேன், வாழ்வான் - உயிர்வாழ்வதற் பொருட்டு, காய் இலைபுன் சருகாதி அருந்த - காய் இலை அற்பமாகியசருகு முதலியவற்றை யுண்ணும்பொருட்டு கானம் - காடும், கடல் - கடலும், மலை - மலையும், (ஆகிய இவை) எங்கேனவும் எங்கே யுள்ளன வென்றும், கவலையாவேன் - (ஒவ்வொருவேளை) கவலைப்படுவேன், வானில் - ஆகாயத்தில், மதிகதிரை - சந்திரசூரியர்களை, முன்னிலையா கநிறுத்திக்கொண்டு, நேரே - அவர்களுக்கெதிரே, வாயில் கும்பம்போல் - வாசலிற்குடம் (புரள்வது) போல, கிடந்துபுரள்வேன் - விழுந்துபுரள்வேன்.

முன்னிலைசாட்சி ஆதலென்றதால் கிழங்குசல முதலியவுங்கொள்க. ()

157. நேரேதா னிரவுபகல் கோடா வண்ணம்
நித்தம்வர வுங்களையிந் நிலைக்கே வைத்தார்
ஆரேயங் கவர்பெருமை யென்னே யென்பே
னடிக்கின்ற காற்றேநீ யாரா லேதான்
போராதே சுழல்கின்றா யென்பேன் வந்து
பெய்கின்ற முகில்காளம் பெருமா னும்போல்
தாராள மாக்கருணை பொழியச் செய்யுஞ்
சாதகமென் னேகருதிச் சாற்று மென்பேன்.

ப-ரை. நேரே — நேராக, இரவுபகல் - இராப்பகல்கள், கோடாவண்ணம் வழுவாவிதமாக, நித்தம்வர - நாள்தோறும்வரும்படி. உங்களை - சந்திரசூரியர்களாகிய உங்களை, இந்நிலைக்கே வைத்தார் - இந்த நிலையிற்றானே நிலையாகவைத்தவர், ஆர் - யாவர், அங்கு அவர்பெருமை - அவ்விடத்து அவரது பெருகை

யை, என்னென்பேன் - என்னென்று வியந்து கூறுவேன், அடிக்கின்ற காற்றே - வீசாநின்றவாயுவே, நீ-நீ, யாரால் யாவருடைய ஆணையினுல், பேராதே-இடைபாறாமல், சுழல்கின்ருய் - சுழலாநின்ருய், என்பேன் - என்று சொல்லுவேன், வந்துபெய்கின்ற முகில்காள் - வந்துமழையைப் பொழிகின்ற மேககூட்டங்களே, எம்பெருமான் - எம்மிறைவன், நும்போல் - உங்களைப்போல, தாராளமா - மிகுதியாக, கருணைபொழிய - அருண் மழையைச் சொரியும், செய்யும்-செய்யவேண்டிய, சாதகம் - அப்பியாசம், என் - யாது, கருதி - (நீங்கள்) ஆலோசித்து, சாற்றும் என்பேன் - சொல்லுங்கள் என்று கேட்பேன், எ-று.

வடநூலார் நிசாகரன் தினகரன்என்று பெயரிட்டு வழங்குவதுபோல இராப்பகல்களை யுண்டாக்குவோர் சந்திரசூரியர்களாதலால், இரவுபகல்கோடாவண்ணம் நித்தம்வர என்றார். (உசு)

158. கருதரிய விண்ணேநீ யெங்கு மாகிக்
கலந்தனையே யுன்முடிவின் காட்சி யாக
வருபொருளெப் படியிருக்குஞ் சொல்லா யென்பேன்
மண்ணேஉன் முடிவிலெது வயங்கு மாங்கே
துரியவறி வுடைச்சேட னீற்றி னுண்மை
சொல்லானோ சொல்லென்பேன் சுருதி யேநீ
ஒருவரைப்போ லனைவருக்கு முண்மை யாமுன்
னுரையன்றோ வுன்முடிவை யுரைநீ யென்பேன்.

ப-ரை. கருதுஅரிய எண்ணுதற் கருமையாகிய. விண்ணே - ஆகாயமே, நீ-நீ, எங்கும்ஆகி கலந்தனையே எவ்விடத்தும் வியாபித்து கலந்திருக்கின்றனையே, உன்முடிவின் - உன்முடிவாகிய எல்லையில், காட்சி ஆகிவருபொருள் - காணப்படுவதாய் வரும்பொருளானது, எப்படி யிருக்கும் - எவ்வாருகிய இலக்கணங்களோடு பொருந்தியிருக்கும், சொல்லாய் - சொல்லுவாய், என்பேன் - என்றுசொல்லுவேன், மண்ணே - பூமியே, உன்முடிவில்-உன் முடிவெல்லையில், எது வயங்கும் - எந்தப் பொருள் நின்று பிரகாசிக்கும், ஆங்கு - அவ்விடத்துள்ள, துரியஅறிவுஉடை - வேலான அறிவைப்பொருந்திய, சேடன் - ஆதிசேஷன், ஈற்றின் உண்மைசொல்லானோ - முடிவானபொருளின் உண்மையைச் சொல்லமாட்டானோ, சொல்என்பேன் - சொல்லுவாய்என்று கேட்பேன், சுருதியே - வேதமே, நீ-நீ, ஒருவரைப்போல் - ஒருவரைப்போல, அனைவருக்கும்-யாவருக்கும், உண்மைஆம் - மெய்யாய் விளங்குகின்ற, முன்உரை அன்றோ-முதனூலா யிருக்கின்ருய் அல்லவோ, நீஉன்முடிவை உரை—நீயுன் முடிவான பொருளைச் சொல்லாய், என்பேன் - என்று சொல்லுவேன், எ-று,

‘கருதரியவிண்’ என்றது அவரோஹணகிரமத்தில் முதற் பூதமாதலாலும் ஏனைய நான்குபூதங்கட்கும் அவகாசங்கொடுக்கும் பெருமையுடையதாதலின் சுருதி அநாதியாதலால் ‘முன்னுரை’ எனவும், எல்லாச்சமயத்தாரும் தத்தமக் குருதியாகிய பிரமாணமாகக் கொள்ளுதற்குரிய தென்பார் ‘அனைவருக்கு முண்மையா முன்னிரை’ எனவுங்கூறினார். (உஎ

159. உரையிறந்து பெருமைபெற்றுத் திரைக்கை நீட்டி
யொலிக்கின்ற கடலேயிவ் வுலகஞ் சூழக்
கரையுமின்றி யுன்னைவைத்தார் யாரே யென்பேன்
கானகத்திற் பைங்கிளிகாள் கமல மேவும்
வரிசிறைவண் டினங்காளோ திமங்கா டூது
மார்க்கமன்றோ நீங்களிது வரையி லேயும்
பெரியபரி பூரணமாம் பொருளைக் கண்டு
பேசியதுண் டோவொருகாற் பேசுமென்பேன்.

ப-ரை. உரைஇறந்து - வாக்கற்று, பெருமைபெற்று - பெருமையை யடைந்து, திரைகைநீட்டி, ஒலிக்கின்ற கடலே - இரைகின்ற சமுத்திரமே, இவ்வுலகம்சூழ - இவ்வுலகத்தை வளைந்திருக்கும்படி, கரையும்இன்றி - கரையும் இல்லாமல், உன்னைவைத்தார் - உன்னை (யழைத்து) வைத்தவர்,யாரேஎன்பேன் - யாவரோஎன்று சொல்லுவேன் கானகத்தில் - காட்டிலுள்ள, பைங்கிளிகாள் - பசுமையாகிய கிள்ளைகளே, கமலம்மேவும் - தாமரை மலரிற் பொருந்திய, வரிசிறை - கீற்றுகள்பொருந்திய சிறைகளையுடைய, வண்டு இனங்காள்- வண்டுக் கூட்டங்களே, ஒதிமங்காள் - அன்னங்களே, தூதுமார்க்கம் அன்றோ- (நீங்கள்) தூதுமார்க்கத்தில் (காலங்கழிப்பது) அல்லவா. நீங்கள் இதுவரையிலேயும் - நீங்கள் இதுவரைக்கும், பெரியபரிபூரணம் ஆம்-பெரிதாகியபரிபூரணமென்கிற, பொருளை-வஸ்துவை, கண்டுபேசியது உண்டோ - (எப்பொழுதாவது) கண்டுவார்த்தை சொன்னதுண்டோ, ஒருகால் - ஒருதரம், பேசும் என்பேன் - பேசுங்கள்என்று சொல்லுவேன், எ-று.

தூதுக்குரியனவண்டு அன்னம்கிளிநாரைநெஞ்சு முதலியவாதலால் 'தூதுமார்க்கமன்றோ' என்றார். வரிசிறையென்ற விசேடணம் தூதுசெல்லுதற்குரிமைதோன்ற நின்றது. இது "அஞ்சிறைய மடநாராய்" என்றமேலோர் திருவாக்குப்போலென்க. (உஅ)

160. ஒருவனவன் யானைகெடக் குடத்துட் செங்கை
யோட்டுதல்போ லுன்பேதை யுப்போ டப்பை
மருவவிட்டுங் கர்ப்பூர மதனிற் றீபம்
வயங்கவிட்டு மைக்கியமுன்னி வருந்தி நிற்பேன்
அருளுடைய பரமென்றோ வன்று தானே
யானுளனென் றும்முனக்கே யாணை வாதி
பெருகுவினைக் கட்டென்று மென்றுங் கட்டிப்
பேசியதன் றேயருளால் பேசிற் றன்றே.

இ-ள். ஒரு வனவன் - ஒரு வேடனவன், யானைகெட - எதிர்நின்ற யானையானது மறைய, (அதைத் தேடுதற்பொருட்டு) குடத்துள் - குடத்துக்,

குள்ளே, செங்கை ஓட்டுதல்போல் - செவந்த கையைவிட்டுத் துழாவுதல்போல, பேதை நான் - அறிவிலியாகிய நான், உப்போடு அப்பை மருவ இட்டும்— உப்புடன் நீரைப் பொருந்தும்படிக் கலக்கவிட்டும், கர்ப்பூரமதனில் - கர்ப்பூரத்தில், தீபம் - விளக்கை, வயங்க இட்டும் - பிரகாசிக்கச் சேர்த்தும், ஐக்கியம் உன்னி - (இன்னும்) ஒற்றுமையை நினைத்து, வருந்தி நிற்பேன் - துன்பமுற்றுநிற்பேன், அருள் உடைய பரம் என்றோ - திருவருளைத் தனக்கு துணைக்காரணமாகவுடைய பரம்பொருள் என்றுள்ளதோ, அன்று தானே—அன்றே, யான் உளன் என்றும் - நானும் உளேன் எனவும், எனக்கே - எனக்கே ஆணவாதி - ஆணவம் முதலியவைகள், பெருகு - அதிகரித்தற் கேதுவாகிய. வினைக்கட்டு என்றும் - வினைப்பிணிப் புள்ளதென்றும், என்னால் கட்டிப் பேசியது அன்று - என்னாற் கற்பித்துச் சொல்லப்பட்டதன்று, அன்றே - பூர்வத்திற்றானே, அருள்நூல் - வீட்டு நூல்களால், பேசிற்று - சொல்லப்பட்டதே. என்றவாறு.

உப்பும் அப்பும், கர்ப்பூரமும் தீபமும், ஒன்றோடொன்றுசேர்ந்தபோதே ஐக்கிய முண்டாயிருக்க, ஐக்கியம் உன்னி வருந்தி நிற்றலால் பேதையென்றார், உப்பும் நீரும், கர்ப்பூரமும் தீபமும்போல நான் உன்னோடு சேர்ந்திருக்கச்செய்தேயும் வேறொரு ஐக்கியமுண்டென்று மயங்கா நின்றேன்; என்னிலைமை எதிரில் நின்ற யானைமறைய, அதனைக் காணும்பொருட்டுக் குடத்திற் கையிட்டுத்துழாவுவோனது நிலைமையை நிகர்க்கும் என்பதாம். (உக)

161. அன்றுமுத லின்றைவரைச் சனன கோடி
யடைந்தடைந்திங் கியாதனையா லழிந்த தல்லால்
இன்றைவரை முத்தியின்றே யெடுத்த தேக
மெப்போதோ தெரியாதே யிப்போ தேதான்
துன்றுமனக் கவலைகெடப் புலைநா யேனைத்
தொழும்புகொளச் சீகாழித் துரையே தூது
சென்றிடவே பொருளைவைத்த நாவ லோய்நஞ்
சிவனப்பா வென்றவருட் செல்வத் தேவே,

இ—ள். அன்றுமுதல் - படைப்புக்காலந் தொடங்கி, இன்றைவரை—இன்றளவும், சனனகோடி அடைந்து அடைந்து - ஜன்மபரம்பரைகளைப் பலகாலுமடைந்து, இங்கு - இந்தப் பொய்நிகழுமுலகில், யாதனையால் - துன்பத்தினால், அழிந்தது அல்லால் - அழிந்ததேயன்றி, இன்றைவரை - இன்றளவும், முத்தி இன்றே - முத்தியையடைதலின்றி யொழிந்ததே, எடுத்ததேகம்—வினைக்கீடாக எடுக்கப்பட்ட வுடம்பு எப்போதோ - (விடுப்பது) எந்தப்பொழுதோ, தெரியாதே -(அறியப்படாதே, (ஆதலால்) இப்போதே - இன்றே, துன்று - அதிகரித்த, மனக்கவலைகெட - மனக்கிலேசங்களொழிய, புலை—நீசத்தன்மையுள்ள, நாயேனை - நாயினேனை, தொழும்புகொள — தொண்டுகொள்ள, சீகாழித்துரையே - சீகாழிக்கு நிர்வாஹகனே, தூதுசென்றிட - பரமசிவன் தூதுசெல்ல, பொருளை வைத்த — நிதிக்குவியலையிட்ட, நாவலோய்—

திருநாவலூரனே, நம் சிவன் - நமது பரமசிவன், அப்பா என்ற - அப்பா என்றழைத்த, அருள்செல்வம் — திருவருளாகிய செல்வத்தையுடைய, தேவே— தெய்வமே.

இங்கு அடைந்து என இயைப்பினும் பொருந்தும். இப்பொழுது, யாதனை என்பது நரகத்திற் கொல்லாது வருத்தும் நோய் எனக்கொள்க. சீகாழித்துரை - திருஞானசம்பந்தர்; திருநாவலூரன் - சுந்தரர்; சிவன் அப்பாவென்றழைக்கப்பெற்றவர் - வாகீசர். (சுo)

162. தேவர்தொழும் வாதவூர்த் தேவே யென்பேன்
திருமூலத் தேவேயிச் செகத்தோர் முத்திக்
காவலுறச் சிவவென்வாக் குடனே வந்த
வரசேசும் மாவிருந்துன் னருளைச் சாரப்
பூவுலகில் வளரருண கிரியே மற்றைப்
புண்ணியர்கா ளோவென்பேன் புரையொன் றில்லா
ஓவியம்போ லசைவறவுந் தானே நிற்பே
னோதரிய துயர்கெடவே யுரைக்கு முன்னே.

இ—ள். தேவர்தொழும் - தேவர்கள் வணங்குகின்ற, வாதவூர்த்தேவே— திருவாதவூரடிகளே, என்பேன் - என்றுசொல்லுவேன், திருமூலத்தேவே— திருமூலர் என்ற திருப்பெயரையுடைய சுவாமீ, இச்சகத்தோர் - இந்த வுலகத்தோர், முத்திக்கு ஆவல் உற - மோக்ஷமடைதற்பொருட்டு ஆசையதிகரிக்க, சிவ என்வாக்குடனேவந்த - சிவவென்கிற வாக்கியத்தோடுபிறந்த, அரசே— இறைவனே, சும்மா இருந்து - நீவிர்கள் சும்மா விருந்துகொண்டு, உன் அருளைச்சார - உன்னருளையடைதற்காக பூவுலகில் - பூலோகத்தில், வளர் - விருத்தியடையாநிற்கிற, அருணகிரியே — அருணகிரிசுவாமீ, மற்றைப் புண்ணியர்காள் - மற்றுமுள்ள புண்ணியவான்களே, ஓ என்பேன் - ஓவென்று முறையிடுவேன், புரைஒன்றுஇல்லா - குற்றம்சிறிதுமில்லாத, ஓவியம்போல் - சித்திரப்பாவைபோல. அசைவு அறவும்நிற்பேன்-சலநமற்றும் நிற்பேன், ஓதுஅரிய- சொல்லுதல் அருமையாகிய, துயர்கெட — துயரம்நசிக்கும்படி, உரைக்குமுன்னே - சொல்லுமுன்னமே. எ—று,

திருவாதவூரடிகள் — மாணிக்கவாசக சுவாமிகள். திருமூலர் - மூவாயிரம் பாடலடங்கிய திருமந்திரம்என்னும் நூல்செய்தவர். சிவஎன்வாக்குடனேவந்த அரசு சிவவாக்கியர். இவர் அவதாரகாலத்தில் சிவஎன்னும் வாக்குடனே அவதரித்தமையால் இவர்க்கு இப்பெயருண்டாயிற்று. அருணகிரிநாதர்,

"செம்மான் மகளைத் திருடுந் திருடன்
பெம்மான் முருகன் பிறவா னிறவான்
சும்மா விருசொல் லறவென் றலுமற்
றம்மா பொருளொன் றுமறிந் திலனே",—என்னுந் திருப்பாடலையருளிச்செய்தவ ராதலால் அவர்க்கு அதனையே விசேடணமாக, "சும்மாவி

ருந்துன்னருளைச் சாரப்பூவுலகில் வளாருனகிரியே" என்றார். புரையொன்றில்லா ஓவியம்என்றது நுண்மொழில் முற்றிய ஓவியத்தை. (௬௨)

163. ஓதரிய சுகர்போல வேனே னென்ன
வொருவரில்லை யோவெனவு முரைப்பேன் றானே
பேதமபே தங்கெடவு மொருபே சாமை
பிறவாதோ வாலடியிற் பெரிய மோன
நாதனொரு தாமுலகம் பார்க்க விச்சை
நண்ணுனே னென்றென்றே நாணு வாகிக்
காதன்மிகு மணியிழையா ரெனவா டிற்றேன்
கருத்தறிந்து புரப்பதுன்மேக் கடன்முக் காலும்.

இ-ள். ஓதரிய - தபோ மகிமையை யெடுத்துச் சொல்லுதற் கரிய, சுகர்போல - சுகமுனிவர்போல, ஏன்ஏன் என்ன - ஏன்ஏன்என்று பிரதித்வநிகொடுக்க, ஒருவர் இல்லையோ எனவும்உரைப்பேன் - ஒருவர் இல்லையோ வென்றுஞ்சொல்லுமேவ , தானே - தன்கிடையே, பேதம் அபேதம்கெடவும் - பேதாபேதங்கள் ஒழியவும், ஒரு - ஒப்பற்ற, பேசாமை - மௌநநிலையானது, பிறவாதோ - உண்டாகாதோ, ஆல்அடியில் - வடவிருக்ஷமூலத்தி லெழுந்தருளிய, பெரியமோனநாதன் - பெரிய மௌந நிலையையுடைய இறைவன், ஒருதரம்- ஒரு முறை, உலகம் பார்க்க - உலகத்தைக் தடைக்கணிக்க, இச்சை நண்ணுனே - விருப்பங் கொள்ளானே, என்று என்று - என்று பலகாற்சொல்லி, நாணுஆகி - பலவகையாய்க் கலங்கி, காதல்மிகும் - (பிரிந்துசென்ற தங்கொழுநர் நியமப்படி வாராமையால், அவர்கள் மேல்) ஆசைமிகுந்த, அணியிழையார் என- மாதரைப்போல, வாடிற்றேன் - வாட்டமடைந்தேன், கருத்து அறிந்து - என் கருத்தையுணர்ந்து, புரப்பது - காத்தருள்வது, முக்காலும் - மூன்று தாமும்- உன்மேல்கடன் - உனக்குக் கடன்மை ஆகும், எ-று.

சுகமுனிவர் அவதரித்தவுடன் பிரபஞ்ச மாயைக் கஞ்சியோட, அவர் தந்தையாராகிய வேதவியாச பகவானவர் அவரைப் பின்றொடர்ந்து ஓகோமகனேயென்று அழைத்துக் கொண்டு போனபோது, சுகர் பூதமயரும் இறைவனைப்போலச் சர்வ வியாபகத்துவமு முள்ளவராதலால் அங்கிருந்த விருக்ஷங்களெல்லாம் பிரதித்வநி செய்தன வென்பது நூற்றிணி பாதலால், "சுகர்போல ஏன்ஏன்என்ன வொருவரில்லையோ" என்றார். இதனை அடியில்வரும் பாகவதபுராணச் சிறப்புப்பாயிரச் செய்யுளானுமுணர்க ※ தந்தையார் அழைக்குந்தோறும் பிரதித்வநிகொடுக்க ஒருவருமில்லையோ; எனக்கு மௌநநிலை யுண்டாகா

※ பிறந்தபொழுதே துறந்து பிறைக்குழைவி போனடிப்பப் பின்போய்த் தொன்னூல், மறைக்குபுகழ் வியாதமுனி யாதரத்தான் மதலா யென்றழைப் பச்செய்வாய், திறந்தநறை பொழியுமலர்ச் செழுந்தருவு மேனென்ன வுயிர்கள்யாவும், நிறைந்துறையுஞ் சுகமுனிவ னிரையிதழ்த்தா மரைத்தாள்கணினை தல்செய்வாம்.

தோ; கல்லாலெம்மான் ஒருதரம் உலகத்தைப்பார்க்க நினையானோ என்று பல படியாகச்சொல்லி கணவர்பிரிவாற்றாது வருந்து மாதரைப்போல் வருந்தாநின் றேன், என் கருத்தறிந்து என்னைப் பாதுகாத்தல் உனக்குக் கடன்மையாம் என்பதாம். (ருஉ)

164. காலமொடு தேசவர்த்த மான மாதி
கலந்துநின்ற நிலைவாழி கருணை வாழி
மாலறவுஞ் சைவமுதன் மதங்க ளாகி
மாதீத மானவருண் மரபு வாழி
சாலமிகு மெளியேனிவ் வழக்குப் பேசத்
தயவுவைத்து வளர்த்தவருட் டன்மை வாழி
ஆலடியிற் பரமகுரு வாழி வாழி
யகண்டிதா காரவரு ளடியார் வாழி.

இ-ள். காலமொடு - கால தத்துவத்தொடும், தேசவர்த்தமானம் ஆதி-தேசவர்த்தமானாதிக ளோடும், கலந்து நின்றநிலை - பிரிவறக் கலந்துநிற்கும் நிலையுடைப்பொருள், வாழி - வாழ்க — கருணை - (அப்பொருளிற் பிரிவற நின்றியங்கும்) திருவருள், வாழி - வாழ்க, மால்அறவும் - மயக்க மொழியவும், சைவம் முதல் மதங்கள்ஆகி - சைவம்முதலாகிய பலவேறுமதங்களாய் நின்றும், மதஅதீதம்ஆன — மதங்களுக் கெட்டாததான, அருள்மரபு - திருவருள் மரபானது வாழி - வாழ்க, சாலம்மிகும் - மாயாவிகாரம் மிகுந்த, எளியேன் - ஏழையேன், இவ்வழக்குப்பேச - இந்தவிவகாரம் பேசும்படி, தயவுவைத்து வளர்த்த - கிருபைவைத்து வளர்த்த, அருள்தன்மை - திருவருட்குணம், வாழிவாழ்க, ஆல்அடியில - வடமூலத்திலெழுந்தருளிய, பரமகுரு - பரமாசாரியன், வாழி வாழி-வாழ்க வாழ்க, அகண்டிதம் - சேதிக்கப்படாத, ஆகாரம் - உருவத்தையுடைய, அருள் - உன்திருவருளுக்கு, அடியார் - தொண்டு பூண்டோர், வாழி - வாழ்க.

மால்அறவும் என்பதற்கு இதுவோ அதுவோவென்றும் மயக்க மிகும்படியாகவும் எனவுரைத்தலும் ஆம்'எளியேன்' என்றூர்சால மிகுதற்கிடனு யிருத்தலான். ஆலடியிற் பரமகுரு - தக்ஷிணாமூர்த்தி. (ருரு.)

இது சிருஷ்டிகர்த்தாவாகிய பிரமனை நோக்கிக்
கூறியதாகக் கூறப்பட்டது

## தேன்முகம்.

அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

165. தேன்முகம் பிலிற்றும் பைந்தாட்
செய்யபங் கயத்தின் மேவும்
நான்முகத் தேவே நின்னு
ளூட்டிய வகில மாயை

